# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கென்ற, துவண்ட ரோமம்



**இளமையில் வழுக்கை**
இந் நிலை ஏற்படுவதைப் பெரும்பாலும் தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1




**ப்யூர் சில்விக்ரின்**
கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கானதொரு தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

---

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**
நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படிய வைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது




# Silvikrin

சில்விக்ரின் - கேச ஆரோக்கியத்திற்கான வழி

SP/1/P/2/66



நினைவுத் திரையில்...

'உன் கடமையை இடைவிடாது செய்து கொண்டேயிரு: பலனைப் பற்றிச் சிறிதளவும் நினையாது யோகியாயிரு' என்று அர்ச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்தார். அக்கீதை மொழியை நாம் மறந்து ஒரு நவீன கீதை மொழியைப் பின்பற்றுகிறோம். அதாவது கடமையைச் செய்யாமலே பலனுக்கு ஆசைப்படும் நவீன யோகிகளாகி விட்டோம்! இப்படி அதர்மம் ஏற்பட்டால் நசித்து ஒழுங்கான தர்மத்தைக் கடைப்பிடிப்போமானால் வெகு சீக்கிரம் நமது பாரத தேசம் உலகத்திலுள்ள பெரிய மூன்று வல்லரசுகளுடன் நான்காவது பெரும் தேசமாகக் கருதப்படும்.

- டாக்டர் எஸ். ஆர். எம். அழகப்பச் செட்டியார்

கல்கி, ஜனவரி, 26, 1947

# கல்கி பொருளடக்கம்

பராபவ, மார்கழி 24 — ஜனவரி 8



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

தனிநபர் சுதந்திரம் பறிமுதல்

விரயம்

லஞ்சம்

அந்நியச் செலாவணி நெருக்கடி

கடன்கள்

பாழ்பட்ட விவசாயம்

ரூபாயின் மதிப்புக் குறைப்பு

காங்கிரஸ் ஆட்சி

இருபது ஆண்டு அதிகார பலம்

பார்! மரம் எவ்வளவு உறுதியாய் இருக்கிறது

ஆனால் பழங்கள் எல்லாம் விஷமயமாய் உள்ளனவே?

PK

செஞ்சீன

நேபாளம்

செவிலித்தாய்?

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்மிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ✻ இதழ் 23



# தி. மு. க. மகாநாடு

அரிசிக்கு மக்கள் கியூவில் நிற்பதைப் பார்த்துப் பழகிய கண்கள் சென்ற வாரம் மவுண்ட்ரோடில் எட்டு மைல் நீளத்துக்கு பஸ்கள் கியூ வரிசையில் நகர்வதைப் பார்த்து வியப்பால் விரிந்தன. பஸ்களின் உள்ளே மட்டுமின்றி அவற்றின் கூரைகள் மீதும் தி.மு.க. தொண்டர்கள் நிரம்பி வழிந்தார்கள்.

தொண்டர் படை லட்சோப லட்சமென அலையலையாகப் பெருகி வந்த காட்சி பிரமிப்பூட்டுவதாய் அமைந்திருந்தது.

மாபெரும் ஊர்வலம் பார்ப்போரை மலைக்க வைத்தது ஒருபுறமிருக்க அதன் ஊடே தென்பட்ட தொண்டர்களது உற்சாகம் தமிழகத்தின் எதிர்காலம் குறித்து நம்பிக்கை ஊட்டுவதாகவும் விளங்கியது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

ஆளும் கட்சியினரின் ஊர்வலம், மகாநாடு என்றால் அதை யொட்டி ஏற்படும் செலவுகளுக்குப் பணம் மேல் மட்டத்திலிருந்து வரும். ஆனால் தி.மு.க.வினரின் மகாநாடு, ஊர்வலம் இவற்றுக்குக் கீழ்மட்டத்திலிருந்து பணம் வந்து சேருகிறது. பணத்தைவிடப் பிரதானமாகத் தொண்டர்களின் ஊக்கமே காரியங்களைச் சாதிக்கின்றன.

அடிப்படையான, முக்கியமான இந்த ஒரு வித்தியாசமே போதும்; - இது காரணமாகவே தி. மு. க. தொண்டர்கள் அடுத்த தேர்தலில் மகத்தான வெற்றி பெறத் தகுதியுடையவர்களாகிறார்கள். அவர்களுக்கு நமது வாழ்த்து.

அடுத்தாற்போல் தலைவர்களைக் கவனிப்போம்.

விருகம்பாக்கம் மகாநாட்டில் தி.மு.க. தலைவர்கள் தங்களது தரமான பேச்சுக்களின் மூலம், கொள்கை விளக்கங்கள் மூலம் தாங்கள் சிரமமான பொறுப்புக்களையும் ஏற்றுத் திறம்பட நிர்வகிக்கக் கூடியவர்கள்தான் என்பதைத் தெளிவாக்கினார்கள்.

தொடக்கவுரை நிகழ்த்திய திரு கருணாநிதி தம் கட்சி சென்ற ஆண்டுகளில் சட்டசபையில் கொண்டுவந்த தீர்மானங்கள் யாவை என்று விளக்கினார். சென்னை நகரசபையில் தி.மு.க. சாதித்துள்ளவை என்பதற்குப் பட்டியல் தந்தார். தோல்விகளையும் சாதனைகளையும் அவர் நடுநிலைமையிலிருந்து விளக்கிப் பேசிய முறை தி.மு.க. தலைவர்களின் பெருந்தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்திருந்தது.

கட்சித் தலைவர் அண்ணாதுரை அவர்கள் ஒரே வாக்கியத்தில் கூட்டணியினரின் தேர்தல் சாணக்கியம் எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதை எடுத்துக் கூறினார். 'எத்தனை தொகுதிகள் நமது கட்சி அபேட்சகர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றன என்று பார்க்காதீர்கள்; தயவுசெய்து எத்தனை தொகுதிகளில் நமது அபேட்சகர்கள் வெற்றி பெற முடியும் என்று பாருங்கள்' என்றார். ரத்தினச் சுருக்கமான இந்த அறிவுரையைவிடச் சிறந்த தேர்தல் சாணக்கியம் ஒன்று உண்டென்றால் அது, ராஜாஜி அவர்களின் யோசனையை ஏற்று அண்ணாதுரை அவர்கள் தி. மு. க., முஸ்லிம் லீக், சுதந்திரா, தமிழரசுக் கழகம் ஆகிய எல்லாக் கட்சிகளையும் இணைத்துக் காங்கிரஸுக்கு எதிராகச் செயலாற்ற வைத்திருப்பதேதான். அண்ணாதுரை அவர்களின் வேண்டுகோளுக்கு ஒப்புதல் தந்து கூட்டணியினர் அந்த அடிப்படையிலேயே சிந்தித்துத் தளராது செயல்பட வேண்டியது ஜனநாயகத்துக்கு அவர்கள் ஆற்றும் கடமையாகும்.

தி. மு. க. ஆட்சிக்கு வந்தால் என்ன செய்யும் என்றும் எடுத்துக் கூறி, கழகம் ஆக்கரீதியாகச் செயல்படும் ஓர் அரசியல் கட்சி என்பதை நிரூபித்திருக்கிறார் திரு அண்ணாதுரை அவர்கள். இவற்றில் முக்கியமானது, ஆட்சியிலிருப்போரிடம் மக்களுக்கு அதிருப்தி ஏற்பட்டால் அவர்களைப் பதவி நீக்கம் செய்ய மக்களுக்கு உரிமைகள் வழங்கப்படும் என்பதும், சர்ச்சைக்குரிய முக்கியமான விஷயங்களில் மக்களின் கருத்தை அறிய வோட்டெடுப்புக்கள் நடைபெறும் என்பதும் ஆகும்.

மக்களின் எண்ணங்களை மதியாமல் தன்போக்கில் யதேச்சாதிகாரம் நடத்தும்

காங்கிரஸின் கொள்கைக்கும், அண்ணாதுரை அவர்களின் கொள்கை விளக்கத்துக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதை வாக்காளர்கள் உணர வேண்டும். உணர்ந்து தேர்தலின்போது செயல்பட வேண்டும். அப்போதுதான் தமிழக மக்கள் தாங்கள் வாக்குச் சீட்டின் பொருளை உணர்ந்து உபயோகிக்கும் பண்பாளர்கள் என்பதை உலகுக்கு நிரூபித்தவர்களாவார்கள்.

மகாநாட்டில் கலந்து கொண்ட ராஜாஜி, கூட்டணி வேறு எதைச் சாதித்தாலும் சாதிக்காவிட்டாலும் ஜாதிச் சண்டையால் பீடிக்கப்பட்டிருந்த தமிழகத்துக்கு அந்த ஒரு விஷயத்தில் விடிவு காலம் வந்திருப்பது ஒன்றே போதும் என்றார்.

விடிவு காலம் வேறுபல விஷயங்களிலும் ஏற்படும் என்று நம்ப விருகம்பாக்கம் மகாநாடு வழி செய்திருக்கிறது.

# என்ன சேதி?

- மேனனின் ஞானோதயம்
- பழைய பல்லவி
- ஒழுங்குமுறைத் திட்டம்
- சட்டத்துக்கும் மேலே
- தொழிலதிபரின் குற்றச்சாட்டு

நேற்றுவரை காங்கிரஸ் டிக்கட்டுக்காகப் பலமான சண்டை போட்டுவிட்டு, அங்கு டிக்கெட் தரப்படவில்லை என்றவுடன் ஒருவர் காங்கிரஸை வாயார மனமாரத் திட்டிக் கொண்டு வருவதை என்னவென்பது? காங்கிரஸின் உள்நாட்டுக் கொள்கை, வெளிநாட்டுக் கொள்கை யெல்லாமே தவறாக இருப்பதாகவும் அதனால்தான் வெளியே வந்துவிட்டதாககூட அவர் கூறியுள்ளார். காங்கிரஸின் கொள்கைகள் இவ்வளவு தவறாக இருந்தால் காங்கிரஸ் டிக்கெட்டுக்கு அவ்வளவு சண்டை போடுவானேன்? திரு கிருஷ்ண மேனனைத்தான் குறிப்பிடுகிறோம்.

உண்மையைச் சொல்லப்போனால், இவரும் நேருஜியும் சேர்ந்து வகுத்துக் கொடுத்த வெளிநாட்டுக் கொள்கையின் விளைவாகத்தான் சீனாவின் ஆக்கிரமிப்பு இந்தியாவின் மீது ஏற்பட்டது. இவரது அபார நிர்வாகத் திறமை காரணமாகத்தான் சீன ஆக்கிரமிப்பின் போது நமது படைகள் தோல்வியுற்றன! இன்னும் சொல்லப்போனால் நேருஜியுடன் சேர்ந்து இவர் வகுத்த கொள்கையை காங்கிரஸ் ஆட்சி கடைப்பிடித்து வருவதனால்தான் நமக்கு உலகில் எங்கும் நண்பர்கள் இல்லாத கதி ஏற்பட்டுள்ளது!

ஃ ஃ ஃ

'ஆதிசங்கரர் அன்று தமது கருத்துக்களைப் பாரத தேசமெங்கிலும் பரப்ப முடிந்தது என்றால் அதற்குக் காரணம் சம்ஸ்கிருதம். அன்று சம்ஸ்கிருதம் பாரத நாட்டின் பொது மொழியாகத் திகழ்ந்தது. இன்று சம்ஸ்கிருதம் பொது மொழியாக இல்லை. வேறொரு பொது மொழி தேவைப்படுகிறது. பாரதத்தின் ஐக்கியத்தையும் ராஜ்யங்களின் இணைப்பையும் பலப்படுத்த ஒரு பொது மொழி அவசியம். அவ்விடத்தை ஹிந்திதான் ஏற்கவல்லது!' என்று கூறுகிறார் மத்திய உதவி கல்வி மந்திரி ஸ்ரீ பக்ததர்சன்.

அன்று சம்ஸ்கிருதம் பாரத நாடு முழுவதையும் இணைத்தது என்றால் இன்று ஆங்கிலம் அப்பணியைச் செய்து வருகிறதே! ஆங்கிலம் பாரத நாட்டின் பகுதிகளை மட்டும் இணைக்கவில்லை; உலகத்தையே அல்லவா இணைக்கிறது! நமது கருத்துக்களை அமெரிக்காவிலிருந்து ஆஸ்திரேலியா வரை எங்கும் ஆங்கிலத்தின் மூலம் பரப்பலாமே! ஹிந்தியைப் பொது மொழியாக்கினால் இந்த லாபத்தை இழந்து விடுவோமே!

இத்தேசத்தைக் கூறு போடுவது ஹிந்தி என்பதே இன்றைய யதார்த்த நிலைமை. இதைக்கூடப் புரிந்து கொள்ளாமல் இணைப்புக்காக ஹிந்தி என்று பழைய பல்லவியையே மந்திரி பாடிக் கொண்டிருப்பது பரிதாபம்.

ஃ ஃ ஃ

தேர்தல் பிரசாரங்களில் அநுசரிக்கப்பட வேண்டிய ஒழுங்குமுறைகளைப் பற்றித் தமிழகத்தின் எல்லாக் கட்சித் தலைவர்களும் ஒன்றுகூடி முதலமைச்சருடன் பேசி ஒரு பத்து அம்சத் திட்டத்தை வகுத்துக் கொண்டிருக்கின்றனர். எதிர்க்கட்சித் தலைவர்களைத் தனிப்பட்ட முறையில் தாக்கிப் பேசக் கூடாது, கொள்கைகளை மட்டுமே எதிர்த்துப் பேச வேண்டும், ஒரு கட்சிக் கூட்டத்தை மற்றக் கட்சிக் கூட்டத்தினர் கலைக்கவோ குலைக்கவோ முற்படக் கூடாது— இப்படிப் பல அம்சங்கள்.

காங்கிரஸை எதிர்த்துத் தேர்தல் பிரசாரம் செய்பவர்களுக்கு இம்மாதிரி நிபந்தனைகள் அவசியமே இல்லை எனலாம். ஊழல்களும், வஞ்சமும், திறமையின்மையும், கருத்துக் கோளாறுகளும், சுயநலப் போக்குகளும் மலிந்து கிடப்பதால், தனிப்பட்ட முறையில் காங்கிரஸ் தலைவர்களைத் தாக்கிப் பேசவேண்டிய அவசியமே எதிர்க் கட்சியினருக்கு இல்லை. ஆனால் ஊழல்கள், திறமைக் குறைவான நடவடிக்கைகளைப் பற்றிக் குறிப்பிடும்போது சம்பந்தப்பட்ட தலைவர்களையோ, அமைச்சர்களையோ குறிப்பிடாமல் இருக்க முடியாது. அமைச்சர் பதவியிலிருந்து அதிகாரம் செலுத்துபவர்கள், தாங்கள் செய்யும் காரியங்களைச் சொந்த முறையில் செய்கிறார்களா, அமைச்சர் என்ற முறையில் செய்கிறார்களா என்று நிர்ணயித்துச் சொல்ல முடியாது.

இம்மாதிரி சந்தேகத்துக்கு இடம்தரும் நடவடிக்கைகளைப் பற்றி எதிர்க்கட்சியினர் குறிப்பிட நேரும்போது ஒழுங்குமுறைகளை மீறுவதாகவும் சொல்லிவிட முடியாது.

ஃ ஃ ஃ

**கா**ஷ்மீர் மக்களுக்கு வாக்கெடுப்புப் பற்றி இந்திய அரசாங்கம் பல ஆண்டுகளுக்கு முன்பு அளித்த வாக்குறுதியை இப்போது சூழ்நிலை மாறுபட்டுவிட்டதால் செயல்படுத்த முடியாது. ஆகவே இந்தப் பிரச்னையை உயிருள்ள பிரச்னையாக மேலும் பாவிப்பதில் அர்த்தமில்லை என்று முன்னாள் இந்தியப் பிரதம நீதிபதி திரு கஜேந்திரகட்கர், பட்டேல் ஞாபகார்த்தச் சொற்பொழிவில் பேசியிருக்கிறார். அவர் சட்ட நிபுணர். சட்ட நிபுணர்கள் காஷ்மீர விவகாரத்தைச் சட்டரீதியில் பார்த்து இப்படிப் பேசிவிடலாம். ஆனால் உயிருள்ள மக்களின் உணர்ச்சிகளைப் பொறுத்த இவ்விஷயத்தைச் சட்டத்துக்கும் மேற்பட்ட மனிதாபிமான உணர்ச்சியுடன் பரிசீலனை செய்வதுதான் நியாயம்.

ஃ ஃ ஃ

**தி**ரு பரத்ராம் டில்லி க்ளாத் அண்டு ஜெனரல் மில்ஸ் ஆண்டுக் கூட்டத்தில் நிகழ்த்திய உரையில் பொருளாதார நிலைமையைப் போலவே நாட்டின் அரசியல் நிலைமையும் சீர்கெட்டுக் கிடக்கிறது என்று வருத்தத்துடன் குறிப்பிட்டிருக்கிறார். அவர் சொல்கிறார்:

''சுதந்திரத்துக்குப் பின் நாடு தனது முழு நம்பிக்கையையும் காங்கிரஸிடமே வைத்திருந்தது. எனவே, இப்போது நாட்டில் காணும் தொழிலாளர் கிளர்ச்சி, மாணவர்கள் அமைதியின்மை முதலிய தீய சக்திகளின் எழுச்சிகளுக்கு முழுப் பொறுப்பையும் காங்கிரஸ்தான் ஏற்கவேண்டும். அரசியலுக்கு ஓர் உன்னத லட்சியத்தை காந்திஜி அளித்துச் சென்றார். இப்போது அந்த லட்சியம் எல்லாம் காற்றில் பறந்து போய்விட்டது. நல்லது கெட்டது என்பதற்கு வித்தியாசம் தெரிந்து கொள்ளும் சக்திகூட அரசியலிலிருந்து மறைந்து விட்டது. காங்கிரஸ் கட்சிக்குள்ளே நிலவும் பூசல்களைப் பார்க்கும்போது தங்கள் சொந்த நலன்களைக் கவனித்துக் கொள்வதில்தான் அவர்கள் கருத்து செல்லுகின்றதே தவிர நாட்டின் நலனைப் பேணுவதில் அல்ல என்பது விளங்குகிறது. நாட்டில் பரவலாக அதிருப்தி நிலவுகிறது என்பதைக் காங்கிரஸ் ஆட்சியாளர் உணர்ந்து அதைப் போக்குவதற்குத் தீவிர முயற்சி செய்தல் அவசியம்.''

திரு பரத்ராம் அவர்களின் இந்த வன்மையுள்ள குற்றச்சாட்டில் உண்மையும், நிதானமும், வருத்தமும் தோய்ந்துள்ளது என்பதை அனைவரும் உணர வேண்டும்.






புகைப்படலங்களையும், மாயத் தோற்றங்களையும் விட்டு உண்மை நிலையைப் பார்க்கக் கற்றுக் கொள்வோமாக. இந்திய யூனியனுக்குள் சீக்கியர் யாவரும் சுய ஆட்சியின் இன்பம், துன்பம், பொறுப்பு இவற்றை அநுபவிக்கும் ஒரு மாகாணமாக வாழ விரும்புகின்றனர். இது மொழிவாரிப் பிரச்னையல்ல. சீக்கியர்கள் பஞ்சாபி மொழி பேசுகின்றவர் எனினும், மொழிக்காக மட்டும் அவர்கள் மாகாணம் கேட்கவில்லை. தங்களுடைய சமுதாயத்திடமுள்ள அன்பு காரணமாகவே தனி மாகாணம் கேட்கிறார்கள். இந்த விருப்பத்தை மதித்து ஈடேற்ற வேண்டும் என்று நீண்ட காலமாகக் கூறி வருகிறேன்.

இப்போது பஞ்சாப் மாகாணம் பஞ்சாப் என்றும் ஹரியானா என்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டு விட்டதால் சீக்கியர்களின் விருப்பம் பெரும்பாலும் நிறைவேற்றப்பட்டு விட்டது. இன்னமும் தீர்க்கப்படாமலிருக்கும் பிரச்னைகள் சிறியனவே.

சீக்கியர்கள் ஹிந்து மதத்தில் சில தீவிர கருத்துக்களைக் கொண்ட 'ப்ராடெஸ்டென்ட்'கள் எனலாம். தொடக்கத்திலிருந்தே அவர்களது சமூகம் மதத்தை மட்டும் அடிப்படையாகக் கொள்ளாமல் தேசப் பாதுகாப்பையும் அடிப்படையாகக் கொண்டது. இதனால் அவர்களுக்கு ஒரு தனித் தன்மை இருக்கிறது. அவர்கள் கோரிய உரிமை இப்போது நல்ல முறையில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. தலைமைக்காக அவர்களுக்குள் உள்ள போட்டியும் இனி தீர வேண்டும்.

சீக்கியர்களைப் போலவே, நமது எல்லைப் புற மலைவாசிகளும் அரசியல் சாஸனப்படி மாகாணங்கள் பெற்றுள்ள சுயாதீனத்தை விடத் தாங்கள் அதிகச் சுயாட்சி உரிமை பெற வேண்டுமெனத் தீவிரமாகக் கருதுகிறார்கள். டில்லியையே முற்றிலும் சார்ந்திராமல், எல்லைகளைத் தங்கள் ஆட்சி நாடாகக் கருதிப் பாதுகாக்க வேண்டும் என்பது அவர்களது விருப்பம். அவர்களது சுயாதீனம் மதிக்கப்பட்டால் மிகவும் நன்றாக நமக்கு எல்லைப் பாதுகாப்பு அளிப்பார்கள். இது நமக்கே நல்லது. இந்தியாதான் அவர்களுக்குத் தாய். என்றாலும் பிள்ளைகள் தாயின் கட்டுப்பாடு இல்லாமல் சுதந்திரமாக வாழ ஆசைப்படுவதுண்டு. இதைப் புரிந்து கொள்ளாததாலேயே நம் எல்லை நிலைப் பிரச்னை தீர்க்கப்படாமலிருக்கிறது. எல்லையில் உள்ளவர்கள் இந்தியாவைத் தங்கள் தாய் என்றும், எல்லைப் பகுதிகளைத் தங்கள் உடைமை என்றும் கருதி, அந்நியர் புகாமல் பாதுகாக்க அநுமதிப்பதால் நமக்கே அது அநுகூலம். நம் ஆதிக்கத்தை வற்புறுத்தினால் நமது நோக்கமே பாழாகும். தேசத்தின் விஸ்தீரணத்தால் நாம் பெரியவர்களாகிவிடவில்லை; நமது நாகரிகத்தாலேயே பெரியவர்களாய் இருக்கிறோம். நம் எல்லையிலுள்ள நட்பு மிகுந்த மக்களுக்குச் சலுகை காட்டுவதால் இந்தப் பெருமை குன்றி விடாது.

☆☆☆

கம்யூனிஸச் சார்பில்லாத எந்த ஆசிய அரசாங்கமுமே, ஹோ-சி-மின்னை நியாயமான பேச்சு வார்த்தைக்கு இணங்க வைக்கு முன் அமெரிக்கா வியட்நாமிலிருந்து வெளியேற வேண்டும் என்றோ, அல்லது வியட்நாமில் அமெரிக்கர் தோல்வியடைய வேண்டுமென்றோ விரும்பாது.

வியட்நாமிலிருந்து அமெரிக்கா வெளியேற வேண்டும் என்று இந்திய சர்க்கார் சொன்னாலுங்கூட, ஹோ-சி-மின்னைப் பேச்சுக்குக் கொண்டுவர வாய்ப்பில்லை என்றுணர்ந்தால் இவ்வாறு கூறாது.

ஆசியாவில் மேற்கத்திய அரசுகள் மேலாதிக்கம் செலுத்திய நாட்கள் போய் விட்டன. ஆசிய நாடுகளும், மேல்நாடுகளும் பங்குதாரர்கள் போல் கூடிப் பணிபுரிய வேண்டிய காலம் தொடங்கி விட்டது. கம்யூனிஸச் சார்பல்லாத நாடுகள் யாவும் அரசியல்—பொருளாதார — ராணுவ ரீதியில் கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுக்கும் சக்தியைப் பெற வேண்டும். இதற்கு அநுசரணையாக, வியட்நாமில் அமெரிக்கத் தலையீடு பற்றி இந்திய சர்க்கார் கொண்டுள்ள கருத்து தெளிவடைய வேண்டும். இது உண்மையில் கம்யூனிஸச் சார்பல்லாத ஆசிய நாடுகளின் சார்பில் அமெரிக்கா புரியும் போர். நம்முடைய போராட்டத்தை ஏற்று நடத்தும் நட்புடைய வல்லரசைப் பின்னாலிருந்து தடுத்து விடுவது அழகல்ல.

☆☆☆

இன்னமும் மக்கள் 'இடது சாரி' 'வலது சாரி' என்று பேசி வருவது மிகவும் வருந்தத் தக்கது. ஏழை மக்களின் வாழ்வு அபிவிருத்தி அடையும் வழியைத்தான் பார்க்க வேண்டுமேயன்றி, 'வலது' என்றும், 'இடது' என்றும் பேசிப் புண்ணியமில்லை. செல்வம் படைத்த ஒரு சிலரின் சொத்துரிமையைப் பறிப்பதால், ஏழை மக்களுக்கு நம் நாட்டில் நன்மை செய்துவிட முடியாது என்பது இன்னமும் உணரப்படவில்லை. தங்குதடையின்றிக் கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை தர வழி காண்பதே தேசத்தை முன்னேற்று வதற்கு உபாயம். உருக்கு ஆலைகளும் மற்ற பெரும் தொழில்களும் எவ்வளவு உபயோகமாயிருப்பினும் நம் நாட்டின் ஏராளமான ஏழைகளுக்கு வேலை தர அவை போதா. நாடு முழுவதிலும் சாலை போடுதல், குடி தண்ணீர் விநியோகம் அமைத்தல், கழிவு

கால் கட்டுதல், வீடுகள் கட்டுதல் போன்ற வேலைகளுக்கு முதல் இடம் தந்தால்தான் இவற்றினால் ஏராளமான மக்களுக்கு வேலை கிடைக்கும். அதோடு அவற்றின் விளைவால் தேசமக்கள் அனைவருக்கும் அன்றாட வாழ்க்கையில் நன்மை கிடைக்கும்.

பணக்காரர்களைப் பழி வாங்கினாலே ஏழைகளுக்குச் சொர்க்கம் கிடைத்து விடும் என்று எண்ணுவது அடிப்படைக் கோளாறு. பணக்காரர்கள் சட்ட விரோதமாக எதுவும் செய்து பொருள் ஈட்டிவிடவில்லை. அவர்களைப் பழி வாங்குவதே உத்தேசமாயின், அதைக் கொடூரமான முறையில் நடைமுறையாக்கி விடலாம். ஆயினும், தேசத்தின் தேவையான ஏழையரின் வேலைவாய்ப்பை இதனால் ஒருகாலும் பெற முடியாது.

ಃಃಃ

**ந**டப்பு ஆண்டில் பற்றுக்குறை பட்ஜெட்டுகள் அளவுமீறிப் பெருகிவிட்டதால் யூனியன் மந்திரி சபை போட்ட பழைய கணக்குகள் யாவும் திசைமாறிப் போய்விட்டன என்று புதுதில்லியிலுள்ள 'மெயில்' நிருபர் எழுதுகிறார். இது வரை முந்நூறு கோடி ரூபாய்க்குப் பட்ஜெட் பற்றுக்குறை ஏற்பட்டிருக்கிறது என்பது அவரது மதிப்பீடு. நிலைமை இப்படி உள்ள போது, காங்கிரஸ் கட்சியினர் தாங்கள் விலைவாசிகளைக் குறைத்து விடப் போவதாக வாக்காளர்களிடம் கூறி வருகின்றனர்! வியாபாரிகளின் மேல் குற்றம்சாட்டுவது சுலபம். ஆனால் உண்மையில் விலைவாசிகள் இறக்கை கட்டிப் பறக்கக் காரணம், பற்றுக்குறை பட்ஜெட்களும், உற்பத்திக்குதவாத சர்க்கார் காரியாலயங்கள் பெருகுவதும், அரசாங்க முதலீடுகளும்தான்.

ಃಃಃ

**கா**ங்கிரஸ் கட்சி தேர்தல் காலத்திலும் ஆட்சி அதிகாரத்தை விடாமல் பற்றிக் கொண்டு, அதிகார வசதிகளையெல்லாம் தேர்தல் வெற்றிக்குப் பயன்படுத்திக் கொள்வது போதாதென்று, மந்திரிகள் தேர்தல் பிரசாரம் செய்வதற்கு வசதியாக, அவர்கள் போட்டியிடும் தொகுதிகளில் முதலில் தேர்தல்கள் நடக்குமாறு தேர்தல் தேதிகள் அமைக்கப் பட்டுள்ளன. இதைத் தமிழ:

சுதந்திரக் கட்சிப் பொதுக்காரியதரிசி ஸ்ரீ எஸ். எஸ். மாரிசாமி அவர்கள் சரியான முறையில் எடுத்துக் காட்டியுள்ளார். இது தில்லியே தெரிந்து செய்த காரியமோ, அல்லது தமிழ் நாட்டு அரசாங்கம் தவறான வழிகாட்ட அதன்படி இப்படிச் செய்திருக்கிறார்களோ? எவ்வாறாயினும் இது மிகவும் அநியாயமாகும். காங்கிரஸுக்குச் சாதகமாகத் தேர்தல் நடத்தப்படுகிறது என்ற குற்றச்சாட்டைத் தவிர்க்க வேண்டுமாயின், இந்நிலையை மாற்ற வேண்டும்.

ஃஃஃ

பிரதம மந்திரி அவர்கள் பஞ்சாப் பிரச்னையில் மத்தியஸ்தம் செய்யவிருக்கிறார். இதைக் குறித்து 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஒரு நியாயமான கேள்வி கேட்கிறது: இவரது மத்தியஸ்தம் எதுவாயினும் அதை ஏற்றுக் கொள்வதாக ஸந்த் ஃபதே சிங் கூறியிருக்கிறாரா? அல்லது பிரதமரின் மத்தியஸ்தம் தமது கோரிக்கைக்கு மாறாக இருந்தால் ஃபதே சிங் மீண்டும் உண்ணாவிரதம் இருப்பாரா?

மேலும் சில கேள்விகள்:

ஸ்ரீமதி இந்திராகாந்தி சொந்த ஹோதாவில் மத்தியஸ்தம் செய்யப் போகிறாரா? அல்லது பிரதம மந்திரி என்ற முறையிலா? அவரது மத்தியஸ்தத்துக்கு இந்திய சர்க்கார் கட்டுப்பட வேண்டுமா? காங்கிரஸ் தலைவர்களே மாறுபட்ட கருத்துக்களைச் சொல்லி வரும் போது மத்தியஸ்தம் எப்படி நடக்கப் போகிறது? 'சண்டிகர்' எங்களுடையது தான்' என்கிறார் ஹுக்கும் சிங்; ஹரியானா முதன் மந்திரியோ அது தங்களுடையதே என்கிறார்.

ஃஃஃ

ராணுவத்தில் பலவிதமான படைகள் இருப்பினும் முன்னணியில் பீரங்கிப் படை இருப்பது போல் அரசியல் கட்சிகளும் 'உண்ணாவிரதப் படை'களை உருவாக்க வேண்டுமோ என்று எண்ணுமளவுக்கு, உண்ணாவிரதப் பயமுறுத்தல்கள் வளர்ந்து வருகின்றன. சட்டசபை விவாதத்துக்குரிய இடத்தை உண்ணாவிரதங்கள் பெற்று வருகின்றன. சுதந்திரப் போராட்டத் தலைவர்கள் எவ்வாறு எளிய வாழ்வுக்கும், சிரமங்களுக்கும் தங்களைப் பயிலுவித்துக் கொண்டார்களோ அவ்வாறே இப்போது அரசியல் தலைவர்கள் உயிரை விடாமலே நீண்ட நாள் உண்ணாவிரதம் இருக்கப் பயிற்சி செய்து கொள்ளலாம். உண்ணாவிரதம் வெற்றிகரமாகவும் கவர்ச்சிகரமாகவும் இருக்க வேண்டுமாயின் அதற்கு ஓர் அடிப்படைத் தேவை, உண்ணாவிரதமிருப்பவர் மத்தியஸ்தக்காரர்களை எதிர்பாராமல் மரணத்துக்குத் தயாராக இருப்பது. ஸந்த் ஃபதேசிங்குடைய உண்ணாவிரதத்தின் வெற்றி ரகசியம் இதுவே. சர்க்காரை இணங்க வைப்பதைவிட மரணம் அடைவதிலேயே அவர் அதிகம் விருப்பம் கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட கால உண்ணாவிரதத்துக்குப்பின் தம்மை எரித்துக் கொள்ளப் போவதாக அவர் அறிவித்தது இதைத் தெளிவாக்குகிறது.

ஃஃஃ

மக்கள் அரசாங்கத்தின் அடிமையாகி விட்டால் சுய சிந்தனையுடன் இணங்கிச் செயலாற்றும் அமைப்பே போய்விடும் என்பதை வாக்காளர் அனைவரும் உணர முடியுமாயின் எவ்வளவோ நன்றாக இருக்கும். ஆனால் இது நிறைவேற முடியாத ஆசை.

காரிய சாத்தியமான இன்னோர் ஆசை கொள்ள இடமுண்டு. ஒருவேளைக் கஞ்சிக்காக வாக்காளர்கள் தங்கள்வோட்டுரிமையை விற்குமாறு அவர்களை 'வெற்றிகரமாக'ப் பயிலுவித்து வருவது நிற்க வேண்டும் என்பதே அந்த ஆசை.

இந்தச் சூழ்நிலையில் கருத்தறிவையே அடிப்படையாகக் கொண்டு நல்ல சர்க்காரும் நல்ல கொள்கைகளும் உருவாகச் சுதந்திரக் கட்சி பாடுபடுவதில் பொருள் உண்டா? உண்டு. நிச்சயமாக உண்டு. சிரமங்களைப் பாராமல் நாம் உறுதியுடன் நம் வழி சென்றோமாயின் இறுதியில் வெல்வோம். சுதந்திரக் கட்சியின் தில்லி மகாநாட்டுக்குச் சிறந்த பத்திரிகைகள் யாவும் அளித்துள்ள வரவேற்பு நல்ல எதிர்காலத்துக்கு ஓர் அறிகுறி.

ஃஃஃ

வேடிக்கைக்குத்தான்; யாரும் கோபிக்க வேண்டாம்! 'டென்னிஸ் கோர்ட்டில் விளையாடுவது ஆயாசமாக இருக்கும்; ஆட்டத்தின் முடிவு என்ன என்பதும் நிச்சயமில்லை.எனவே, இதெல்லாம் வேண்டாம்; எங்களுக்கு டேவிஸ் கோப்பை தராவிடில் சாகும்வரையில் உண்ணாவிரதம் இருப்போம்' என்று கிருஷ்ணனும் முகர்ஜியும் அறிவித்திருந்தால் எப்படியிருக்கும்? இதை ஒரு தமாஷாகக் கருதி, இதற்குப் பரிசாக ஆஸ்திரேலியா டேவிஸ் கோப்பையைக் கொடுத்திருந்தாலும் கொடுத்திருக்கலாம்.

சாஸனப்படி சட்டசபை ஜனநாயகத்தை நாம் ஒப்புக் கொண்டபின், உருக்காலை வேண்டும் என்றோ, நமக்கு ஈடுபாடுள்ள விஷயத்தில் சட்டங்கள் செய்ய வேண்டுமென்றோ சாகும் வரை உண்ணாவிரதமிருப்பது டேவிஸ் கோப்பைக்காக உண்ணாவிரதம் இருப்பது போன்றதுதான்.

டேவிஸ் கோப்பை பந்தயத்தில் ஒரு விஷயம்: முதல் ஸர்வீஸில் மத்தியஸ்தரின் முடிவு தவறானது என்பதால் இரண்டாவது ஸர்வீஸில் கிருஷ்ணன் பந்தைத் தட்டாமலேயே எதிராளிக்கு ஒரு பாயிண்ட் கிடைக்கும்படி செய்தார். இது உன்னதமான பண்பு. இரண்டாவது யோசனையே இன்றி கிருஷ்ணன் இவ்வாறு முடிவு செய்தது விளையாட்டுத் தர்மத்தை உணர்ந்து செய்த ஒரு சிறந்த காரியம். இதை ரசிகர்களும் ஆட்டக்காரர்களும் பாராட்டியது இயற்கை. இதனால் இந்தியாவின் மதிப்பே ஓரடி உயர்ந்து விட்டது. இதற்காகவே ஒரு டேவிஸ் கோப்பையைப் பெறத் தகுதிபெற்று விட்டோம்.

# சங்கீத விழாக்கள்

சென்னை மியூசிக் அகாடமியில் சங்கீத விழாவைத் தமிழக கவர்னர் ஸ்ரீ உஜ்ஜல் ஸிங் தொடங்கி வைத்தார். சங்கீத கலாநிதி பாலக்காடு மணி அய்யர் மணியான உரை நிகழ்த்தினார். இறை வணக்கத்துடன் சங்கீத விழா ஆரம்பமாகியது.





★

2. மியூசிக் அகாடமியின் காரியதரிசிகளில் ஒருவரான டாக்டர் வே. ராகவன் இசை விழா மலரைக் கவர்னருக்கு வழங்கினார்.

★

3. வாணி மஹாலில் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் கலை விழாவை மத்திய மந்திரி ஸ்ரீ சஞ்சீவய்யா ஆரம்பித்து வைத்தார். ஸ்ரீ முஸிரி சுப்பிரமணிய அய்யர் தலைமைப் பிரசங்கத்தை நிகழ்த்தினார்.





4. சென்னை அண்ணாமலை மன்றத்தில் இசை விழாவைத் தமிழக மந்திரி திரு ராமையா தொடங்கி வைத்ததோடு இந்த வருஷத் தமிழ் இசை மகா நாட்டுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாளுக்கு 'இசைப் பேரறிஞர்' விருதையும் வழங்கினார்.



சென்ற ஆண்டு ஆகஸ்டு 24ஆம் தேதியுடன் திரு நாரண துரைக்கண்ணன் அவர்களுக்கு அறுபது வயது பூர்த்தியாயிற்று. சலியாத உழைப்பும், தளராத ஊக்கமும், வற்றாத தமிழ் ஊற்றும் கொண்ட 'ஜீவா'வுக்கு மணிவிழா நடத்த ஏற்பாடுகள் நடந்து வருவதாக அறிந்து மகிழ்கிறோம்.

—ஆசிரியர்



# 'ஜீவா' கிடைத்த கதை

மறைமலையடிகள் பச்சையப்பன் கல்லூரியில் நிகழ்த்தி வந்த இலக்கியச் சொற்பொழிவுகள் அனைத்தையும் உன்னிப்பாகக் கேட்டு வந்தார் ஓர் இளைஞர். மடை திறந்த வெள்ளம் போன்ற அடிகளின் சொற்பெருக்கும், தனித் தமிழ்ச் சொல்லாட்சியும் அந்த இளைஞரின் உள்ளத்தைக் கவர்ந்தன. அடிகளார் பல நூல்களையும் இயற்றியிருக்கிறார் என்று அறிந்தவுடன் அவற்றை வாங்கிப் படிக்க ஆசைப்பட்டு, விலை விவரம் கேட்டு மறைமலையடிகளுக்கு ஒரு கடிதம் எழுதினார் அவர். உடனடியாகப் பதில் வந்தது அந்தப் பெரியாரிடமிருந்து. தம்மை வந்து பார்க்கும்படி.

பல்லாவரத்துக்குப் போனார் அந்த இளைஞர். அவரை அன்புடன் வரவேற்ற அடிகள், இளைஞருக்கு இருந்த தமிழ்ப் பற்றை உணர்ந்து, ''என்னிடமே நீ தமிழ் படிக்க விரும்புகிறாயா?'' என்று கேட்டார். கரும்பு தின்னக் கூலி கேட்கும் பழக்கம் கிடையாது அந்த இளைஞருக்கு. எனவே மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். அதன் பிறகு எட்டாண்டு காலம் வாரந்தோறும் சனிக்கிழமை மாலை இளைஞர் பல்லாவரத்துக்குப் போனாரானால், திங்கட்கிழமை காலைதான் வீடு திரும்புவார். அவரைத் தம் மகனைப் போலவே பாவித்து, அன்பும் பரிவும் காட்டி, அறிவூட்டினார் மறைமலையடிகள். இத்தகைய பெரும்பேறு பெற்றவர் தான் 'ஜீவா' என்ற புனைபெயருக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் திரு நாரண துரைக்கண்ணன் அவர்கள்.

சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்டதால் திரு நாரண துரைக்கண்ணன் அவர்களால் பள்ளிப் படிப்பைத் தொடர முடியவில்லை. அப்போது, ராயப்பேட்டையிலும் இன்னும் சில இடங்களிலும் இரவுப் பள்ளி வைத்து நடத்தி வந்த திரு நமசிவாய முதலியார் என்ற தமிழ் அறிஞரிடம் தமிழ் பயின்றார் ஜீவா.

அந்தக் காலத்தில் வக்கீலுக்குப் படித்திருந்தும், நல்ல வருவாய் கிடைக்கக் கூடிய அந்தத் தொழிலை மேற்கொண்டு பணம் திரட்டாமல், தமிழின் பத்திலேயே திளைத்துக் கிடந்த பெரியவர் ஒருவர் இருந்தார். அவர்தான் 'கலா நிலையம்' திரு சேஷாசலமய்யர் அவர்கள். யாராவது ஒருவரிடம் இலையளவு தமிழார்வம் இருந்தாலும் அவரை உற்சாகப்படுத்தி, தம்மாலியன்ற உதவிகளை யெல்லாம் செய்வதென்பது அவரோடு பிறந்த குணம். அத்தகையவரது அணைப்பிலே ஜீவா பல தமிழ் நூல்களைக் கற்றார்.

முறையாகத் தமிழைக் கற்றவர்களே அரை வயிற்றுக் கஞ்சிக்கு மன்றாடிக் கொண்டிருந்த காலம் அது. எனவே, தமிழாசிரியத் தொழிலைத் தாமும் மேற்கொள்ள வேண்டாமென்ற எண்ணத்துடன் ஜீவா அடிசன் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தார். அங்கே இருந்த போதுதான் மறைமலையடிகளின் தொடர்பு கிட்டியது.

அடிசன் எங்கே, ஆனந்தபோதினி — பிரசண்ட விகடன் எங்கே? குமாஸ்தாவாக இருந்தவர் பத்திரிகை திருபராக ஆனது எப்படி? அது ஒரு பெரிய கதை.

இலக்கியம் பயின்ற மனம் பேரட்டில் பதிய மறுத்தது. அவ்வப்போது பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதி வந்த ஜீவா, திடீரென்று ஒரு நாள் அடிஸன் வேலைக்கு முழுக்குப் போட்டுவிட்டு, பரலி சு. நெல்லையப்பரின் 'லோகோபகாரி'யில் உ த வி ஆசிரியராகச் சேர்ந்து விட்டார்.

'லோகோபகாரி'க்குப் பிறகு 'தேசபந்து'; அப்புறம் 'திராவிடன்'; அதற்கப்புறம் 'இந்தியா' (ஆசிரியர் திரு பக்தவத்சலம்) என்று மாறிக் கொண்டே வந்தவர், 'ஆனந்த போதினி'யில் உதவியாசிரியராகப் போய்ச் சேர்ந்தார்.

'ஆனந்தபோதினி' உரிமையாளர் திரு முனுசாமி முதலியார் ஒரு நல்ல வியாபாரி. 'ஆனந்தபோதினி' மாதப் பத்திரிகையுடன் அதே பெயரில் தமிழிலும் தெலுங்கிலும் வாரப் பத்திரிகைகள் நடத்தி வந்தார். தமிழ் மாநிலத்திலிருந்து தமிழ்ப் பெயரைத் தாங்கிவந்த இந்தத் தெலுங்குப் பத்திரிகைக்கு ஆந்திரர்களின் குறுகிய பிராந்தியப் பற்று காரணமாக 'மவுசு' குறையவே, பத்திரிகையின் பெயரையே தெலுங்கில் 'சித்திரகுப்தன்' என்று மாற்றி வைத்து, விற்பனையை உயர்த்திய விற்பன்னர் அவர். அது மட்டுமல்ல; 'தமிழ்த் துப்பறியும் நாவல்களின் தந்தை' என்ற பட்டப் பெயர் எதுவும் சூட்டிக்கொள்ளாமலே ஆங்கிலத்திலிருந்து துப்பறியும் நாவல்களை இயந்திர வேகத்தில் மொழி பெயர்த்துத் தள்ளிய ஆரணி குப்புசாமி முதலியாரை வைத்துப் பத்திரிகை நடத்தியவர். ஆரணியாருக்கு மாதச் சம்பளம் அறுபது ரூபாய். அதையும் மாதம் ஒரு முறையாக வாங்கிக் கொள்ள மாட்டார். தினசரி சம்பளம் இரண்டு ரூபாய் கொடுத்தாக வேண்டும். இது தவிர ஒரு நாளைக்கு ஒரு ஃபாரம் (பதினாறு பக்கங்கள்) நாவல் எழுதிக் கொடுத்துவிட்டு, அதற்கென்று தனியாக மூன்று ரூபாய் வாங்கிக் கொண்டு போவார் ஆரணி குப்புசாமி முதலியார்.

ஆனந்தபோதினி பத்திரிகைக்கு விளம்பரங்கள் சேகரித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார் ஓர் இளைஞர்; எஸ். எஸ். வாஸன் என்று பெயர். (இன்றைய ஆனந்த விகடன் ஆசிரியரேதான்!) அவர் புத்தகம் ஒன்று எழுதினார். ஆனந்தபோதினி பத்திரிகையில் தவறாமல் விளம்பரமும் செய்தார்கள். புத்தகம் பிரமாதமாகப் பிய்த்துக்கொண்டு போயிற்று. அதைப் பார்த்துவிட்டு, 'நாமும் இது மாதிரி ஒரு புத்தகம் போட்டால் என்ன?' என்ற எண்ணம் தோன்றியது முனுசாமி முதலியாருக்கு. உடனடியாகப் போட்டார். போட்டுவிட்டு, அதற்குப் பிரமாதமாக 'ஆனந்தபோதினி'யில் விளம்பரம் செய்தார் — திரு வாஸன் அவர்களது புத்தக விளம்பரத்தை நிறுத்தி விட்டு. முதலியார் போட்ட புத்தகங்கள் இப்போது கடகட விற்பனையாயின. 'ஆகா, பத்திரிகை என்ற ஒரு சாதனம் நம்மிடம் இருந்தால் எத்தனை நல்லது' என்று நினைத்தார் வாசன்.

அந்தச் சந்தர்ப்பத்தில்தான் பூதூர் வைத்தியநாதய்யர் என்பவர் 'ஆனந்த விகடன்' பத்திரிகையைத் தொடங்கிச் சில ஆண்டுகள் வரை நடத்திவிட்டு, தொடர்ந்துநடத்த வசதி




"இன்னும் ஜனவரி, பிப்ரவரி மாதங்கள் முடியவில்லையே, அதற்குள் காலண்டரிலிருந்து அந்த மாதங்களை ஏன் கிழித்து விட்டீர்கள்?"

"என் கணவருக்கு வரி என்றாலே ஆகாது; அதற்காக ஜனவரி, பிப்ரவரிகளைக் கிழித்து விட்டார்!"

யில்லாமல் திணறிக் கொண்டிருந்தார். அவரிடமிருந்து விகடனை விலை கொடுத்து வாங்கித் தாமே நடத்த முன்வந்தார் திரு வாஸன். அவரது ஆர்வம், நுண்ணறிவு, அயரா உழைப்பு — எல்லாமாகச் சேர்ந்து ஆனந்த விகடனை உயரே தூக்கின.

பார்த்தார் முனுசாமி முதலியார். ஆனந்த விகடனுக்குப் போட்டியாகப் 'பிரசண்டவிகடன்' என்ற ஒன்றை ஆரம்பித்தார். அதற்கு ஆசிரியராக விளங்க ஓர் இளைஞர் தேவைப்பட்டார். 'ஆனந்த போதினி'யில் இருந்த திரு நாரண துரைக்கண்ணனைப் 'பிரசண்ட விகட'னுக்கு ஆசிரியராக்கினார் முனுசாமி முதலியார். தமிழுக்கு ஒரு 'ஜீவா' கிடைத்தார்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் தொடர்ந்து ஒரு பத்திரிகை ஆசிரியராக இருந்து பல எழுத்தாளர்களையும் ஓவியர்களையும் ஊக்குவித்து உருவாக்கிவிட்டிருக்கும் ஜீவா, பழைய அநுபவங்களை நினைவுகூரும்போதுதான் எத்தனை சுவையான நிகழ்ச்சிகளைக் கூறுகிறார்!

எத்தனையோ பேர்கள் கதை எழுதுகிறார்கள். அவற்றிலே வாழ்க்கையை அப்படியே பிரதிபலிப்பதாக எத்தனை பேருடைய எழுத்து அமைந்து விடுகிறது? மிகவும் சொற்பம் என்றுதான் கூற வேண்டும். திரு ஜீவாவின் எழுத்து அத்தகைய ஒன்று.

'யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?' என்ற தலைப்பில் நாவல் ஒன்று எழுதினார் ஜீவா. 'எங்கள் குடும்பத்தில் நடப்பதை அப்படியே எழுதியிருக்கிறார்' என்று பலர் பாராட்டினார்கள். சிலர் புகார் செய்தார்கள். ஓர் இளம் விதவையின் கதையைச் சித்திரிக்கும் அந்த நாவலின் இரண்டாயிரம் பிரதிகளைச் சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மையார்



"நம்ம பிரேம குமாரிக்கு அவள் ஆபீஸிலே 'மிஸ் மவுண்ட்ரோடு'ன்னு 'டைட்டில்' கொடுத்தாங்களாம்!"

வாங்கிக் கொண்டார் என்ற ஒன்று போதும், நாவலின் சிறப்பை எடுத்துக் கூற. இந்த இடத்திலே இன்னொன்றும் சொல்லியாக வேண்டும். அந்த நாவல் ஒரு திருமணத்தையே நிறுத்தியிருக்கிறது. — ஜீவாவின் திருமணத்தைத்தான்!

குடும்ப நண்பர் ஒருவர் ஜீவாவுக்கு மணம் முடித்து வைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முன்வந்தார். ஒரு பணக்கார இடத்துப் பெண் நிச்சயமாகியது. மாப்பிள்ளையைப் பெண் வீட்டார் பார்க்க ஆசைப்படவே, நண்பருடன் போனார் ஜீவா. போன இடத்தில் பத்திரிகைகளைப் பற்றிய பேச்சு வந்தது. அதிலும் குறிப்பாக அப்போது தொடர் கதையாக வெளியாகிக் கொண்டிருந்த 'நான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?' பற்றி. 'யார் அதை எழுதுகிறார்கள்?' என்ற கேள்விக்கு 'நான்தான்' என்று அடக்கமாகப் பதிலளித்தார் ஜீவா. 'மிகவும் நன்றாக எழுதுகிறீர்கள். படிக்கும்போது ஏதோ ஒரு குறிப்பிட்ட குடும்பத்தை மனத்தில் வைத்துக் கொண்டு எழுதுவது போலவே இருக்கிறது...' என்று பாராட்டினார்கள். ஜீவாவின் நண்பர் 'என்ன கதை அது?' என்று கேட்கவும் கதையைச் சொல்ல வேண்டியதாயிற்று. அதைக் கேட்டதும் நண்பரின் முகத்தில் கோபக் கனல் வீசியது. அது அவரது குடும்பக் கதை போலவே இருந்ததுதான் காரணம். வேண்டுமென்றேதான் ஜீவா இம்மாதிரி செய்திருக்கிறார் என்று எண்ணிக் கொண்டு, நட்பைத் துண்டித்துக் கொண்ட நண்பர், இந்தத் திருமணமும் நடக்காதபடி பார்த்துக் கொண்டு விட்டார். எழுத்து வாழ்க்கையை எப்படிப் பாதித்திருக்கிறது, பாருங்கள்!

"இதுதான் உங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத சம்பவமா?" என்று கேட்டால், "இல்லை!" என்று தலையாட்டுவார் ஜீவா. "அது வேறு இருக்கிறது..." என்பார்.

தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்களுக்கு அன்னியர் ஆட்சியில் தடை விதிக்கப்பட்டிருந்தது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. ஆனால் நாடு சுதந்திரமடைந்த பிறகும் பாரதியார் பாடல்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுவதற்கும், நாடகங்கள், திரைப் படங்களில் பயன்படுத்துவதற்கும் தடை இருந்து வந்தது. இந்த நிலைமையை மாற்ற வேண்டும் என்பதற்காக அன்பர்கள் சிலருடன் சேர்ந்து, 'பாரதி விடுதலைக் கழகம்' என்ற சங்கத்தை ஆரம்பித்தார் ஜீவா. பொதுக் கூட்டங்கள் போட்டுக் கோரிக்கையை வற்புறுத்தியதுடன், அரசாங்கத்துக்கு மகஜர் ஒன்றும் சமர்ப்பித்தார். அப்போது முதலமைச்சராக இருந்த ஓமந்தூரர் ராமசாமி ரெட்டியார், பாரதியாரின் குடும்பத்தாரிடமிருந்து முதலில் சம்மதம் பெற்றுவரச் சொன்னார். ஜீவா அதற்காகத் திருநெல்வேலி செல்ல வேண்டி வந்தது.

அந்தச் சமயத்தில்தான் அவருடைய மகன் உடல் நலிவுற்றுப் படுத்திருந்தான். அதைக் கூடப் பொருட்படுத்தாமல் ஜீவா திருநெல்வேலிக்குப் புறப்பட்டுச் சென்றார். வரும்போது வெற்றியுடன்தான் வந்தார். ஆனால் இங்கே வந்த பிறகுதான் 'விதியிடம் தோற்று விட்டோம்' என்பது அவருக்குப் புரிந்தது. அவருடைய மகனைக் கொடிய 'டிப்தீரியா' பலி வாங்கி விட்டிருந்தது. அருமை மகனின் வெற்றுடலைக் கூடக் காணக் கொடுத்துவைக்கவில்லை அவர். ஜீவாவின் நெஞ்சில் ஆழமாகப் பதிந்திருக்கிறது இந்த நிகழ்ச்சி.

அறிஞர் அண்ணாதுரையின் அரசியல் கோட்பாடுகள் தமக்குப் புறம்பானதாக இருந்தபோதிலும் அவரது அருமையறிந்து, எழுத்தின் சுவை தெளிந்து மனம் விட்டுப் பாராட்டிய ஜீவா 'எல்லோரும் நல்லவர்களே' என்றெண்ணும் தூய உள்ளமும் 'எல்லோரும் நண்பர்களே' என்று கலந்து பழகும் இனிய சுபாவமும் கொண்டவர்.

முப்பத்தைந்து ஆண்டுகளாக இலக்கியப் பணியாற்றி வரும் ஜீவா, நூற்றிருபது நூல்களுக்கு மேல் எழுதிக் குவித்திருக்கிறார். இவற்றில் நாவல் பதினைந்து, நாடகம் எட்டு, வாழ்க்கை வரலாற்று நூல்கள் ஐம்பது! 'தாங்கிணி', 'நடுத் தெரு நாராயணன்' ஆகிய இரு நாவல்களும் காலத்தைக் கடந்து நிற்கும் என்று உறுதியாகக் கூறுகிறார்.

ஜீவா எழுத்தாளர்களில் ஒரு முத்து: எழுத்தே அவர் சொத்து. — முகுந்தன்

## தமாஷ்! தமாஷ்!



"நான் தமாஷ் செய்வது எப்படித் தெரியுமா? உண்மையைச் சொல்லி விடுவேன். அதுதான் உலகத்தில் மிகப் பெரிய தமாஷ்!"

-பேரறிஞர் பெர்னார்ட்ஷா

தகவல்: பி. சம்பத்குமார்

# எக்ஸிபிஷன் பலவிதம்!

கணவனும் மனைவியும் டிபன் வேளையில் மேஜையில் எதிரும் புதிருமாக அமர்ந்திருந்தார்கள்.

"இன்று கிறிஸ்துமஸ். எக்ஸிபிஷனுக்குப் போகலாம்!" என்றாள் மனைவி.

"எக்ஸிபிஷனா? மாசக் கடைசி. இன்று ஏகக் கூட்டமாயிருக்கும்!"

"நான் சொல்கிறதை நீங்கள் என்றுதான் ஆமோதித்திருக்கிறீர்கள்?" என்று சிணுங்கினாள் மனைவி.

"அப்பா! -வாயைத் திறந்தால் சண்டை. வாழ்க்கை முழுதும் இப்படியே உன்னுடன்





எப்படிக் கழிக்கிறது" என்று பொருமினான் அவள் கணவன்.

மனைவியினுடைய மூக்கு சிவந்தது. "நான் சண்டைக்காரிதான். வாயாடிதான். என்னை ஏன் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?" என்று உரக்கக் கத்திவிட்டு எழுந்தாள். எழுந்த வேகத்தில் மேஜையை அவள் இடை தாக்கவே மேஜையின் மேலிருந்த மிளகாய்ப் பொடி, கிண்ணத்திலிருந்து தெறித்துக் கணவரின் முகத்தை அபிஷேகம் செய்தது. கண் எரியவே கோபம் தாளாமல் அவன் தலையில் எண்ணெயைக் கவிழ்த்து விட்டான் கணவன்.

கொஞ்ச நேரம் கழித்துப் புயல் ஓய்ந்து அமைதி நிலவியது.

"வாருங்கள். முகமெல்லாம் மிளகாய்ப் பொடி. நன்றாகத் துடைத்து விடுகிறேன்" என்றாள் அவள்.

"இந்தா! உன் முகத்தில் எண்ணெய் வழிகிறது. துடைத்து விடுகிறேன்!" என்றான் அவன். பிறகு "சரி! சீக்கிரம் டிரஸ் செய்து கொண்டு புறப்படு. எக்ஸிபிஷனுக்குப் போகலாம்!" என்றான்.

"நம் வீடே எக்ஸிபிஷன்! அந்த எக்ஸிபிஷன் வேறு வேண்டுமா?" என்றாள் அவள் சிரித்துக் கொண்டே.

ஃ ஃ ஃ

.."இந்த எக்ஸிபிஷனில் விலை ஏறாதது ஒன்றே ஒன்றுதான். அது என்ன தெரியுமா?"

"தண்ணீர்!"

"இல்லை; டிக்கெட். பல வருஷங்களாகவே நாலணாத்தான்!"

ஃ ஃ ஃ

லேடி டைப்பிஸ்டும் அவள் தோழியும் ரிப்பன் கடை வழியாகச் சென்று கொண்



டிருந்தனர். "பார்த்தாயாடி! ரிப்பன் ஒவ்வொன்றும் எவ்வளவு அழகாக இருக்கிறது, பார்த்தாயா?"

"உனக்கென்னடியம்மா, நீ டைப்பிஸ்ட்! உங்க ஆபீஸிலே நிறைய ரிப்பன் உங்களுக்குக் கொடுப்பாங்களாமே?"

"உன் அப்பாவிடம் இதைச் சொல்லி வைக்காதே! எங்கள் கம்பெனியில் அவர் ஒரு டைரக்டராச்சே. டைரக்டர்கள் மீட்டிங்கில், 'பெண் டைப்பிஸ்டை வேலைக்கு வைத்துச் சம்பளம் அழுகிறீர்கள். இப்போ ரிப்பன் செலவுக்கும் வேறு கொடுக்கணுமா?' என்று சண்டை போடப் போகிறார்!"

ஃ ஃ ஃ

எக்ஸிபிஷனில் காதலன் தன் காதலியைச் சந்தித்தான். "ஆமாம்! அப்டுடேட் நாகரிகத்துடன் உன்னுடன் வந்து கொண்டிருந்தானே, அவன் யாரு?" என்று கேட்டான்.

"அதுவா? என் அம்மா!"

"இப்போ அவள் எங்கே?"

"அதோ! கிருஷ்ணவேணி மோட்டார்ப் படகில் உட்கார்ந்து குளத்தில் சுற்றிச் சுற்றி வருகிறாளே. ஏன், ஏதாவது சொல்லணுமா?"

"வேண்டாம், வேண்டாம்! அப்படியே அவன் மோட்டார்ப் படகில் சுற்றட்டும். நாம் ஜாலியா பேசிண்டு எக்ஸிபிஷனை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வரலாம்!"

ஃ ஃ ஃ

"அப்பா! அப்பா! அந்தோ பாரு! சின்ன ரயில் வண்டி சுற்றி வருது!"

"நீ அதிலே ஏறிக்கிறயா?"

"நான் ஏற மாட்டேன் அப்பா!"

"ஏண்டா?"

"அதிலே பெரியவாள்ளாம்தான் ஏறி உட்கார்ந்து சுற்றி வரா. சின்னவாள்ளாம் நின்னு வேடிக்கை பார்க்கணும்!"

ஃ ஃ ஃ

தம்பதியினர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு எக்ஸிபிஷனில் வலைய வந்தனர். திடீரென்று தகப்பனார் தம் குழந்தையின் முகத்தை மூடிக் கொண்டு மனைவியைக் கர கரவென்று மறு பக்கம் இழுத்துச் சென்றார். குழந்தை 'வீல் வீல்' என்று கத்தியது.

"இந்தாங்கோ! குழந்தை எக்ஸிபிஷன் பார்க்க வந்திருக்கு. அதன் முகத்தை ஏன் மூடித் தொலைக்கிறேள்?"

"டீ! அந்தப் பக்கமெல்லாம் பொம்மைக் கடைகள். இப்போ மாசக் கடைசி. பொம்மைகள் வாங்கித் தரணும்னு அது அடம் பிடிச்சா எப்படி வாங்கித் தர முடியும்?"

"அப்பா! அம்மா! நேக்குப் பொம்மை வேணும்!"

"நல்ல சமர்த்துத்தான் போங்கோ! குழந்தையின் முகத்தை மூடி அழைச்சுண்டு வந்தேன். இப்போ அதன் ரகசியத்தை உடைத்து விட்டேளே! அவன் அடம் பிடித்தால் பதே சிங், பூரி சங்கராச்சாரியார் எல்லாம் தோத்துப் போகணும்! பொம்மை வாங்கினலொழிய நம்மை விடமாட்டான்!"

ஃ ஃ ஃ

புதுமணம் புரிந்த தம்பதிகள் போறும்:

"உங்களுக்குக் குறி பார்த்துச் சுடத் தெரியுமா?" என்று மனைவி கேட்டாள்.

"ஏன்? எதற்காக?"

"அதோ அங்கே சின்னத் துப்பாக்கி வைச்சுக் கார்க்கினல் பலூனையும், சிகரெட் டப்பாவையும் சுட்டுத் தள்ளினல் பிஸ்கெட், பப்பர்மிண்ட் பரிசாகத் தருகிறார்களாம்!"

"காசைக் கரியாக்கணும்னு இன்னும் எத்தனையோ இருக்கே! வா, அதோ நெய்வேலி கரியிருக்கு. அடுப்பு இருக்கு. அதிலே போடு. உபயோகமாகவாவது இருக்கும்!"

ஃ ஃ ஃ

"ஸார்! இந்தக் கியூ எங்கே போகிறது?"

"தெரியாது ஸார்!"

"அப்போ எதற்காக நீங்கள் கியூவில் நிக்கறேள்?"

"வெளியில் எப்படிப் போகிறதுன்னு இந்தக் கூட்டத்தில் தெரியலே! ஏதாவது ஒரு க்யூ அவசியம் வாசல்லே கொண்டு விட்டுடுமில்லே. ஒவ்வொரு க்யூவா நின்னு பார்க்கிறேன்!"

ஃ ஃ ஃ

"சேலம் முறுக்கு வேணுமா? திருநெல்வேலி முறுக்கு வேணுமா?"

"இந்தப் பிரதேசச் சண்டை யெல்லாம் நமக்குப் பிடிக்காது! ஒவி முறுக்கு கொடுத்தால் சாப்பிடறேன்!"

ஃ ஃ ஃ

"ஸார்! இந்த முறுக்கு ஸ்டாலில் நிறைய வியாபாரம் ஆகிறது. ஆனா முறுக்கைக் கடிச்சால் பல் வலி தாங்க முடியவில்லையே?"

"கவலைப்படாதேங்கோ! பக்கத்திலே பல் மருத்துவ ஊர்தி யிருக்கு. அதிலே ஒரு ரூபாய் கொடுத்துப் பரிசோதனை செய்து விடலாம்!"

"எதை, முறுக்கையா?"

ஃ ஃ ஃ

"ஸார்! இந்தப் பக்கம் அதிசயமா என்ன இருக்கு?"

"ரயில்வே ஸ்டாலில் ரயில் மாதிரியே வளைந்து வளைந்து செல்லும் க்யூ!"

ஃ ஃ ஃ

கண்ணுக்கு விருந்தை அளிக்க 'ஆர்ட் காலரி'யில் நடராஜர் நடனமாடியபடியே, 'வா, வா'வென்று அழைக்கிறார். பதின் மூன்று பைசா டிக்கெட் வாங்கி உள்ளே சென்றால் பிரசித்தி பெற்ற ஓவியர்களான கனுதேசாய், மணியம், வினு, ராஜம், ஆர்யா ஆகியவர்களின் கைவண்ணங்களைக் காண



லாம். தேரு, வாசுதேவாச்சாரியாரின் சித்திரங்களைப் பிரசாத் தந்திருக்கிறார். வாதாபி, பூம்புகார், மதுரை ஆகிய முக்கிய இடங்களுக்கு அழைத்துச் செல்கிறார் ஓவியர் மணியம். ஓவியர் கனு தேசாயோ உங்களைக் காஷ்மீரத்துக்கு அழைத்துச் செல்கிறார். ஓவியர் வினு திருச்செந்தூர், திருநெல்வேலி, மைசூர், கொச்சி ஆகிய ஊர்களுக்குப் பயணம் செய்யாமலேயே அங்குள்ள காட்சிகளைக் கண்டு களிக்க வாய்ப்புத் தந்திருக்கிறார். ஓவியர் ராஜத்தின் நடராஜர், ராமர், பெண்கள் கோலமிடும் காட்சி ஆகியவை ஒரு பக்கத்திலே நமது கவனத்தைக் கவர்கின்றன. ஆர்யாவின் காந்தி, கஸ்தூரி, பாரதியார் ஆகியோர் நம்மை ஆசீர்வதிக்கக் காத்திருக்கிறார்கள். மாடர்ன் ஆர்ட் சித்திரங்களைப் பார்த்துவிட்டு இந்தப் பூர்விகக் கலைக்கு வரும்போது நம் பெருமை நன்கு துலங்குகிறது. கோயில்கள், சிற்பங்கள், செப்புத் திருமேனிகள் ஆகியவற்றின் பிரும்மாண்டமான புகைப்படங்கள் நம்மை மெய் சிலிர்க்க வைக்கின்றன. பதின்மூன்று பைசாவில் நல்லதொரு சித்திரக் கண்காட்சியைக் கண்ட திருப்தியுடன் திரும்புகிறோம். மன நிறைவு ஏற்படுகிறது. பின், டாக்ஸி, பஸ் கிடைக்க நாம் படும் சிரமங்களும் இவற்றில் மறைந்து விடுகின்றன.

— குண்டுமணி

# புல்லரிக்கும் மக்ளீன்ஸ்

## சுவை மூலம்

## உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!

மக்ளீன்ஸ்

3 வகைகளில் செயலாற்றுகிறது

1 சுத்தமாக்க — சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.

2 வெண்மையாக்க — மங்கல் படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.

3 காக்க — திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களைப் பராமரிக்கிறது.




அதிவெண்மையான பற்களுக்கு —

**மக்ளீன்ஸ்**

HTP-1-P-1-65/66 TM

# கனவு



எழுத்தாளன் ரவி விதிவசத்தால் மூடமானவன். தன் ஊனம் உலகத்துக்குத் தெரியக்கூடாது என்று எண்ணித் தன் உயிர் நண்பன் ஆனந்தனை உலகத்தின் கண்களிலே ரவியாக உலவ விடுகிறான். ரவியின் எழுத்தில் மனத்தைப் பறிகொடுத்த ராதா என்னும் இளம் பெண் ஆனந்தனை ரவியாகப் பாவித்து மயங்குகிறாள். அவளுடைய மனமறிந்த தந்தையோ உண்மை ரவிக்கே அவளை மணமுடிக்கத் திட்டமிடுகிறார்! பலன்.....?

கனவு என்னும் இந்த நாடகத்தை எழுதியவர் நமது கல்கி நேயர்களுக்கு ஏற்கனவே அறிமுகமான ஸ்ரீமதி கல்யாணசுந்தரி ஜகந்நாத் அவர்கள்.

கதை பழைய பாதையில் செல்வதுதான் என்றாலும், நாடக உத்தியைத் திறம்பட நிர்வகித்திருக்கிறார். ஆனால் பெண் உள்ளத்தின் பெருமையை உணர்ந்த அவர், ராதாவை ரவிக்கு மணம் செய்து வைப்பது இதயத்துக்கு இதம் தரவில்லை. சோக முடிவாக்கி அவள் வாழ்க்கையையும் ஒரு கனவாக ஆக்கியிருந்தால்....? கனவு என்னும் தலைப்பு இன்னும் பொருத்தமாக இருந்திருக்குமே.

தோட்டக்கார விசுவநாதன் டைரக்ஷன் பொறுப்பேற்றிருக்கும் இந்த நாடகத்தில் நகைச் சுவை நல்விருந்தாக அமைந்துள்ளது. இந்த விருந்தைப் பரிமாறுபவர்கள் சங்கீதப் பித்தன் ராமுவாக வரும் ஸ்ரீ சுப்பிரமணியம், பல்லவி பதஞ்சலியாக வரும் ஸ்ரீ பிரின்ஸ் விசுவநாதன், கவிதைப் பைத்தியம் சீனுவாக வரும் ஸ்ரீ புனிதவேல் ஆகியவர்கள்.

கதாநாயகன் ரவியாகவும், அவனுக்கு நண்பன் ஆனந்தனாகவும் வரும் ஸ்ரீ ரங்கராஜனும் சுந்தரமூர்த்தியும் நன்கு ஈடு கொடுத்து நடிக்கிறார்கள். ராதா - தேவிகா என்று இரட்டை வேடம் போடுவது போல் நடிக்கும் ஜெமினி சகுந்தலாவின் நடிப்பின் துடிப்பைக் காணோம். அப்பா பரமசிவமாக வரும் பாலசுப்பிரமணியம் அநாயாசமாக நடிக்கிறார்.

நாடகக் கலையைத் திரைக் கலைக்கு அருகில் கொண்டுபோகும் பணியை ஸ்ரீ ஏ. எஸ். ஏ. நாராயணன் புரிகிறார், தமது 'ரிப்ளெக்டோஸ்கோப்' சாதனத்தின் மூலம். இந்த உத்தி இன்னும் கைத்திறன் பெற்று மெருகேறினால், இந்த நாடகம் நன்கு பரிமளிக்கக் கூடும்.

---

# வாஷிங்டனில் திருமணம்

**த**மிழ்நாட்டுத் திருமணம் ஒன்று வாஷிங்டனில் நடந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை புரிந்து நகைச்சுவை நவீனம் ஒன்றைச் சிருஷ்டித்தார் ஸ்ரீ 'சாவி'. அதை நாடகமாக்கிப் பார்த்தால் எப்படி இருக்கும் என்னும் கற்பனையில் இறங்கினார்கள் திருவல்லிக்கேணி ஃபைன் ஆர்ட்ஸ் குழுவினர். அதன் பலன் வாஷிங்டனில் நடைபெற வேண்டிய நாடகம் சென்னை மாநகரத்திலே நடைபெறுகிறது.

நாடகமாக நடைபெறுகிறது என்று சொல்வதைக் காட்டிலும் நிஜமாகவே நடைபெறுகிறது என்று கூறுவதுதான் பொருந்தும். நடிகர்களும் நிஜக் கல்யாணங்களில் கலந்து கொண்டு பழகியவர்களாதலால், அநாயாசமாகக் கல்யாணப் பரபரப்பை முகத்தில் தேக்கி நடிக்கிறார்கள். ராக்ஃபெல்லர் மாமியாக வரும் ஸ்ரீ ஸ்ரீனிவாச கோபாலனும், சாஸ்திரிகளாக வரும் இரு நண்பர்களும் சிறப்பாகக் குறிப்பிட வேண்டியவர்கள்.

இந்த நாடகத்தில் ஒரு விசேஷம் என்னவென்றால், நிஜ நரிக்குறவர்களே கியாஸ் லைட்டுகள் தூக்குகிறார்கள். பழங்காலத்து 'டாப்' இறக்கிய கார், நாயனம் எல்லாமே மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்துக்கு வருகின்றன. நாடகமேடையை விட்டு நடிகர்களே இறங்கித் தியேட்டரைச் சுற்றி ஊர்வலம் வருகிறார்கள்.

இவ்வளவு தத்ரூபமாகக் காட்சிகளை ஜோடனை செய்திருக்கும் இந்தக் குழுவினர் நாடகம் பார்க்க வருபவர்களை நிஜக் கல்யாணத்துக்கு வந்தவர்களாகவே பாவித்து மாப்பிள்ளை அழைப்புக்குமுன் ஒரு டிபனும் மாப்பிள்ளை அழைப்பு முடிந்தவுடன் ஒரு நல்ல விருந்தும் வைத்துவிடுவார்களானால்' இந்த ரேஷன் காலத்தில் பிரமாதமாயிருக்கும்! அதோடு நிஜமாகவே ஒரு கன்னிப் பெண்ணையும் மாப்பிள்ளையையும் தேடி நிஜக் கல்யாணமே செய்து வைக்க முற்படுவார்களானால் நாடகமும் அடிக்கடி நடக்கும்; பார்க்க வரும் கூட்டத்துக்கும் குறைவிராது!





# மகிழ்ச்சியை வளர்த்த மேதை

**வா**ல்ட்டின் தந்தை எலியாஸ் டிஸ்னி, தச்சு வேலை செய்தவர். சிகாகோ நகரில் எளிய வாழ்க்கை நடத்தி வந்தார். 1901 டிசம்பர் மாதத்தில் வால்ட் அவருக்கு நான்காவது பையனாகப் பிறந்தார். சிறுவயதில் வால்ட் தம் குடும்பத்துப் பண்ணையிலிருந்த பன்றிகளை மேய்த்தார். பத்திரிகைகளை விநியோகிக்கும் பொறுப்பை ஏற்றார். உள்ளூர் போஸ்ட் ஆபீஸில் கடிதங்களை 'சார்ட்' செய்தும், விநியோகித்தும் சம்பாதித்தார். இத்தனைக்கும் இடையில் உயர்நிலைப் பள்ளிக்குப் போனார். 'அகாதமி ஆப் பைன் ஆர்ட்ஸ்' ஸ்தாபனத்துக்குச் சென்று சித்திரம் பயின்றார். தபால் மூலம் கார்ட்டூன் எழுதும் கலையையும் கற்றுக் கொண்டார். அந்த வயதிலேயே சிறு பொழுதையும் வீணாக்காதவர் வால்ட். இரவு பகல் இரு வேளையும் உழைக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். விளையாடவே அவருக்கு நேரம் இருந்ததில்லை.

ஆண்டுகள் சென்றன. முதல் உலகப் போர் மூண்டது. அமெரிக்கச் செஞ்சிலுவைச் சங்கத்தில் ஆம்புலன்ஸ் வண்டியோட்டியாக உழைக்க முன்வந்தார் டிஸ்னி. செஞ்சிலுவை பிரான்ஸுக்குச் செல்லும் வாய்ப்பை அவருக்கு அளித்தது. அங்கு போர் வீரர்களின் தோலாலான மேல் சட்டைகளில் படங்கள் வரைந்து கொடுத்தும் சம்பாதித்தார்.

சித்திரக்காரராக வேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது டிஸ்னிக்கு. தாய்நாடு திரும்பியதும் கான்ஸாஸ் நகரத்துக்குச் சென்று 'கான்ஸாஸ் ஸிடி ஸ்டார்' என்ற பத்திரிகாலயத்தில் தமக்கு ஓவியராகப் பணியாற்றும் வாய்ப்பளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். வால்டின் சித்திரங்களைப் பார்வையிட்ட ஆசிரியர் உதட்டைப் பிதுக்கினார். ''உன்னிடம் சித்திரக்காரனுக்கான தகுதி ஏதுமில்லை. போய் வா'' என்று கூறி அனுப்பி விட்டார்.

மாதா கோயில்களுக்குப் படம் எழுதித் தரும் ஒரு வேலை கிடைத்தது. ரொம்பச் சொற்ப சம்பளம் தான். தகப்பனாரின் கார் நிறுத்தும் 'கராஜ்' கலைக்கூடமாயிற்று. தமது சித்திரத் தொழிலை நடத்தத் தமக்கென்று தனியாக ஓர் அறை வாடகைக்கு எடுத்துக் கொள்ளக்கூடத் தமக்குப் பொருளாதார வசதி இல்லையே என்று டிஸ்னி அன்று ஏங்கி ஒரு பெருமூச்சும் விட்டிருக்கலாம். ஆனால் அன்று அப்படிக் கார் ஷெட்டில் இருந்தபடி அவர் தமது காரியங்களைச் செய்ததினால்தான் பின்னால் கோடீசுவரராக மாற முடிந்தது.

டிஸ்னி உட்கார்ந்து படம் எழுதிக் கொண்டிருக்கும்போது எங்கிருந்தோ ஒரு சுண்டெலி ஓடி வந்தது. இங்குமங்கும் கொஞ்சமும் பயமில்லாமல் குதித்து விளையாடியது. டிஸ்னியின் கவனத்தையும் கவர்ந்தது. பட்டுப் போன்ற அதன் உடல், பளபளக்கும் கண்கள், அதன் விஷமங்கள்—அப்பப்பா! தம் வேலையையும் மறந்து, சொக்கிப் போனார் டிஸ்னி. உள்ளே ஓடிச் சென்று ரொட்டித் தூள்களைக் கொண்டு வந்து அதற்குப் போட்டு விருந்து கொடுத்தார். இப்படியே அவர்கள் நட்பு சில நாட்கள் தொடர்ந்தது.





● டிஸ்னி இறந்துவிட்டார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும் கண்கலங்கிய நமது குழந்தைகளுக்கு ஆறுதல் கூறியது மட்டுமல்ல, அவரது படைப்புக்களான மிக்கி மவுஸ், டோனால்ட் டக் போன்றவை அச்சிடப்பட்டுள்ள புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு அவற்றுக்குக் கூட ஆறுதல் கூறத் தோன்றியதல்லவா?







● ஆம்புலன்ஸ் காரோட்டியாக வால்ட் டிஸ்னி.

■ (மேலே) கார்ட்டூன் படம் வரைந்தவர் காமிராவையும் இயக்கினார். முதல் கார்ட்டூன் படத்தைச் சுடும் வால்ட் டிஸ்னி.

டிஸ்னியின் சித்திரப் பலகை மீதேறி அவர் முகத்துக்கு நேரே நின்று கொண்டு அவர் கையிலிருந்து உணவுப் பொருள்களை வாங்கிக் கொள்ளும் அளவுக்கு அந்த எலியின் துணிவும் நட்பும் பெருகின.

ஃ ஃ ஃ

டிஸ்னிக்கு ஹாலிவுட் போக வேண்டுமென்ற அவா நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருந்தது. அங்கு சென்று 'கார்ட்டூன் உலகில் அலிஸ்' என்ற தலைப்பில் பன்னிரண்டு கார்ட்டூன் துண்டுப் படங்களை எடுத்துத் தரவேண்டி ஒரு கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்.

டிஸ்னி தமக்கு உதவியாகத் தமது அண்ணன் ராயையும் அழைத்துக் கொண்டார். கார்ட்டூன் படம் வரைவதற்குச் சித்திரக்காரர்களை அமர்த்திக் கொண்டார். அவினை அடுத்து 'முயல் ஆஸ்வால்ட்' என்ற தலைப்பில் பல கார்ட்டூன் படங்களைத் தயாரித்து ஓட்டினார்.

ஒரு நிலையில், இவரது படங்களை விநியோகித்து வந்தவர் காலை வாரி விட்டு விட்டார். இனி அவரது படங்களுக்கு மார்க்கெட் இல்லை என்றும், மேற்கொண்டு பொருள் உதவி செய்ய முடியாதென்றும் கூறி விட்டார்.

இதுவரையில் வால்ட் டிஸ்னி தயாரித்ததெல்லாம் வெறும் சலனப் படங்கள்தான். அதாவது பேசாப் படங்கள். திரை உலகம் அப்போது மௌனப் பட சகாப்தத்திலே தான் இருந்தது.

1927ம் ஆண்டு டிஸ்னி தம் இளம் மனைவி லில்லியனுடன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அப்போதுதான் டிஸ்னிக்கு 'எலியோதயம்' ஏற்பட்டது. பல வருஷங்களுக்கு முன் கான்ஸாஸ் நகரில் சித்திரப் பலகை மீது வந்தமர்ந்து தோழமை கொண்டிருந்ததே ஒரு சுண்டெலி — அதன் நினைவு பளிச்சென்று தோன்றியது. அந்த எலியைக் கதாநாயகனாகக் கொண்டு கார்ட்டூன் படங்களைத் தயாரித்தால் என்ன? தம் மனைவியிடம் தம் புதிய கதாநாயகனைப் பற்றி விவரித்து ''அவனுக்கு நான் 'மார்ட்டிமர் மவுஸ்' என்று பெயரிடப் போகிறேன்'' என்றார் டிஸ்னி. லில்லிக்கு அந்தப் பெயர் என்னவோபோல் இருந்தது. முகத்தைச் சுளித்தாள். டிஸ்னி சிறிது நேரம் யோசித்தார். ''சரி, மார்ட்டிமர் வேண்டாம். நாம் அவனை மிக்கி என்று அழைப்போம். 'மிக்கி மவுஸ்' நன்றாக இல்லை? 'மிக்கி' என்ற ஒலியில் நேச பாவம் தொனிக்கிறதல்லவா?''

லில்லியின் சம்மதம் கிடைத்து விட்டது. உடனே டிஸ்னி மிக்கியை வரையலானார்.. உலகப் புகழ் பெற்ற மிக்கி மவுஸ் என்ற திரைப்பட நட்சத்திரம் தோன்றிய கதை இதுதான். மிக்கி மவுஸுக்கு வந்துள்ள அளவுக்கு 'விசிறி'களின் கடிதங்கள் இந்த உலகில் வேறு எந்த நட்சத்திரத்துக்குமே வந்ததில்லை.

தாம் தயாரித்த படத்தை எடுத்துக் கொண்டு டிஸ்னி நியூயார்க்குக்குப் போனார், அதைத் திரையிடுவதற்கான ஆளைப் பிடிக்க. பட விநியோகஸ்தர்களை டிஸ்னியின் மிக்கி மௌஸ் கவரவில்லை.

வால்ட் இதனால் மனம் தளர்ந்துவிடவில்லை. தோல்விகள் அவருக்குச் சகஜமானவை தாயிற்றே. அடுத்த மிக்கி மவுஸ் கார்ட்டூனும் இதே கதியை அடைந்தது. பிறந்த குழந்தை இறந்து விடுமோ என்ற கவலை ஏற்பட்டது டிஸ்னிக்கு. அவரது கவலையைத் தீர்க்கும் சஞ்சீவியாக வந்தது ஒலி! 'கார்ட்டூன் படங்களையும் பேச வைத்தால் என்ன?' என்ற எண்ணம் டிஸ்னிக்குத் தோன்றியது.

அந்தக் கணத்திலிருந்து மிக்கி மவுஸின் பொற்காலம் தொடங்கிற்று. படத்துக்குப்



படம் அதன் புகழ் ஓங்கிற்று. பாராட்டுக்கள் குவிந்தன. மிக்கி — விராதி வீரன். சகல கலா வல்லவன். அவன் குடியானவனாகவும் இருப்பான், குடிமகனாகவும் வருவான், மந்திரக்காரனாகி மாயங்கள் புரிவான். காதலனாக வருவான், வாளேந்தி வீரம் புரியும் பயங்கரத் தலைவனாகவும் மாறுவான், விமானங்களை இயக்குவான், கிரகங்களில் சஞ்சரிப்பான், ராக்கெட்டுகளைச் செலுத்துவான். ஆனால் அவன் எந்தப் பாத்திரமாக மாறினாலும் வெற்றி அவனுக்குத்தான்!

இரண்டாவது உலகப் போரில் விமானங்களும் கப்பல்களும் 'மிக்கி மவுஸ்' என்ற பெயர் தாங்கி இவன் உருவத்துடன் போர்க்களத்துக்குச் சென்றன.



ஓர் ஆசிரியரிடம் கல்வி பயின்ற ஒரு மாணவனும் மாணவியும் காதல் கொண்டனர். வழக்கத்துக்கு மாறாகப் பெற்றோர் குறுக்கே நிற்காமல் திருமணத்தை நடத்தி வைத்தனர், ஆசிரியர் தலைமையில்.

தேனிலவு முடிந்தது- ஒரு மாதம் சென்றிருக்கும். மாணவனிடமிருந்து மடல் பறந்தது ஆசிரியருக்கு! 'இனிக்கும், இனிக்கும்' என்று எதிர்பார்த்த மண வாழ்வு இனிக்கவில்லையாம். சின்ன விஷயங்களுக்கும் கருத்து ஒற்றுமை இல்லாமல் சதா சச்சரவுதானாம். ஆசிரியர் கனிவான பதில் அனுப்பினார். ஏழு எழுத்தில் ரத்தினச் சுருக்கமான அறிவுரையுடன் அவரது கடிதம் சென்றது. சில நாட்கள் பொறுத்து மீண்டும் மாணவனின் புலம்பும் கடிதம்! அறிவுரைப்படி நடந்தும் பலனில்லையே! காதல் வாழ்வும் இனிக்குமோ? இவ்வாறு ஆற்றி எழுதியிருந்தான். சற்றுத் திகைத்து விட்டு ஆறெழுத்து மந்திரம் ஒன்றினை அனுப்பி வைத்தார் ஆசிரியர். பல நாட்கள் கழித்து மாணவனிடமிருந்து மகிழ்ச்சி கனிந்த நன்றிக் கடிதம் வந்தது ஆசிரியருக்கு. அறிவுரையின் பயனும் இனிய வாழ்க்கை அமைந்து விட்டதைச் சொல்லிச் சொல்லிப் பெருமைப் பட்டிருந்தான் மாணவன்.

ஏழெழுத்து அறிவுரை தராத பலனை ஆறெழுத்து அறிவுரை தந்ததென்றால் திகைக்கத்தானே வேண்டும்? திகைக்காதீர்கள். அவர் தந்த முதல் அறிவுரை: ''அடக்கிப்போ''.

இரண்டாவது அறிவுரை: ''அடங்கிப் போ''.

திருமண விழா ஒன்றினில் திரு இ. ஆ. பெ. விசுவநாதன்.

தகவல்: கே. ஜெயலக்ஷ்மி

அமெரிக்க ஜனாதிபதி பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் தமது வெள்ளை மாளிகைக்கு மிக்கியை அனுப்பி வைக்குமாறு அடிக்கடி கேட்பதுண்டு. பிரிட்டனின் ராணி மேரி தாம் திரைப் படங்களுக்குப் போகும்போதெல்லாம் காட்சியில் மிக்கி மவுஸ் கார்ட்டூனும் இடம் பெற வேண்டும் என்று விரும்புவார்.

வர்ணப் பட யுகம் வந்தபோது டிஸ்னியின் கார்ட்டூன் காட்சிகளுக்கு மக்களிடையே அமோகமான வரவேற்புக் கிடைத்தது.

அடுத்தாற்போல் டிஸ்னி எடுத்த 'மூன்று பன்றிகள்' கார்ட்டூன் படத்துக்கு ஒரு பாட்டை பிராங்க் சர்ச்சில் என்பவர் அவசரமாக ஒரு தபால் கவரின் பின்னால் ஐந்தே நிமிஷங்களில் கிறுக்கிக் கொடுத்தார். ஆனால் அது அடைந்த வெற்றிக்குப் பிறகு ஐந்து படக் கம்பெனிகளிடமிருந்து அவருக்கு அழைப்பு வந்தன—பாட்டுக்கள் எழுதித் தருமாறு.

மிக்கி மௌஸை அடுத்து 'டோனால்டு டக்' என்ற வாத்தைக் கதாநாயகனாக்கினார் டிஸ்னி. பின்னர் 'கூஃபி நாய்' போன்ற வேறு பாத்திரப் படைப்புக்களும் தோன்றலாயின.

துண்டுப் படங்களை அடுத்து முழு நீளக் கார்ட்டூன் படங்களைத் தயாரிக்க டிஸ்னி திட்டமிட்டபோது திரையுலகப் பிரமுகர்கள் 'டிஸ்னி மிகப் பெரிய தவறு செய்யப் போகிறார்: துண்டுப் படங்களைப் போல இதையும் எண்ணிவிட்டார். இதில் கதையைக் கொண்டு செல்ல வேண்டும். மனத்தில் பதியும்படி அது அமைய வேண்டும்' என்று ஏதேதோ கூறிப் பயமுறுத்தினார்கள். ஆனால் டிஸ்னியோ 'ஸ்நோ ஒயிட்'டில் பல புதிய உத்திகளைக் கையாண்டார். இதுவரை எடுத்த கார்ட்டூன் படங்களில் இல்லாத ஆழம் (கனபரிமாணம்) இதில் புகுத்தப்பட்டது. அழகிய காட்சி ஜோடனைகளில் விசேஷ கவனம் செலுத்தப்பட்டது.

திரைப்படச் சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்த பெருமை 'ஸ்நோ ஒயிட்'டுக்கு உண்டு.

யேல் சர்வகலாசாலை டிஸ்னிக்கு 'மாஸ்டர் ஆப் ஆர்ட்ஸ்' என்ற கௌரவப் பட்டம் வழங்கியது. ஹார்வர்டு சர்வகலாசாலை, தென் கலிபோர்னியாவின் சர்வகலாசாலை ஆகியவையும் கௌரவப் பட்டங்களை வழங்கின. உயர்நிலைப் பள்ளிப் படிப்பைக் கூட முடிக்காத ஒருவரை சர்வகலாசாலைகள் பட்டமளித்துக் கௌரவிப்பதென்றால் அது எத்தகைய ஏற்றமிகு சாதனை!

'ஸ்நோ ஒயிட்'டை அடுத்துப் பல முழு நீளக் கார்ட்டூன் படங்கள் வெளிவரலாயின.

இந்தக் கதைகளையெல்லாம் டிஸ்னியே எழுதினார் என்றும் திரையில் காணும் படங்கள் அனைத்தையும் டிஸ்னியே வரைந்தார் என்றும் உலகம் முழுவதிலும் உள்ள லட்சோப லட்சம் குழந்தைகள் உண்மையாகவே நம்பத் தொடங்கின.

இயற்கை அற்புதங்களைப் படம் எடுக்கலாயிற்று 'வால்ட் டிஸ்னி' நிறுவனம். மனித உருவங்களே எட்டிப் பாராத இந்தப் படங்களை, இயற்கை எழிலையும், இயற்கைச் சூழ்நிலையில் மிருகங்களின் வாழ்க்கையையும் சித்திரித்த இப்படங்களை மக்கள் பேரார்வத்துடன் பார்த்தார்கள்.

கார்ட்டூன், இயற்கைப் படங்களைத் தவிர புகழ் பெற்ற இலக்கியக் கதைகளைத் தரமான திரைப் படங்களாகவும் தயாரித்தார் டிஸ்னி.





மக்களின் மகிழ்ச்சியையே தமது குறிக்கோளாகக் கொண்ட இவர் 'டிஸ்னி உலகை' உருவாக்கிய கதை சுவையானது. தம் பேரக் குழந்தைகளின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் திணறியபோது, அவர்கள் உல்லாசமாக விளையாடி மகிழவும் அதே சமயத்தில் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதிலளித்து அறிவு வளர்ச்சிக்குத் துணை புரியவும் ஏற்ற விதத்தில் ஒரு பூங்காவை அமைக்க வேண்டும் என்று நினைத்தார். சிறு வயதில் விளையாடவே நேரமில்லாமல் தாம் உழைத்துக் கொண்டிருந்த நாட்கள் அவருக்கு ஞாபகம் வந்திருக்க வேண்டும். திட்டம் விரிவடைந்து கொண்டே போய்ப் பேரக் குழந்தைகளை மட்டுமல்லாது உலக முழுவதிலுமுள்ள குழந்தைகள், ஏன் பெரியவர்களையுமே அரவணைத்துக் கொண்டது.

பல்வேறு பகுதிகளைக் கொண்ட டிஸ்னி உலகைச் சுற்றிப் பார்க்கவே பல நாட்களாகும். இலக்கியம், சரித்திரம், வருங்காலம், வானவெளி, கானகம், கற்பனைக் கதைகள் இவை அனைத்தையும் டிஸ்னி தம் உலகில் நிர்மாணித்து வைத்துள்ள சிறப்பை விவரிக்க இயலாது. அதிர்ஷ்டமுள்ளவர்கள் நேரில் பார்த்து அநுபவிக்க வேண்டியதுதான்.

டிஸ்னியைக் கௌரவித்து வாசித்தளிக்கப்பட்ட பாராட்டுப் பத்திரங்கள் 900! அமெரிக்கத் திரைப்பட உலகில் புகும் எவரும் இலட்சியமாக வைத்துக் கொள்ளுவது அகாதமி பரிசைத் தட்டிக் கொண்டு போவதைத்தான். டிஸ்னிக்கு இன்றுவரை வேறு யாருக்கும் கிடைத்திராத அளவுக்கு முப்பது அகாதமி பரிசுகள் கிடைத்துள்ளன!

அவரைக் குறை சொல்பவர்களும் இருக்கத்தான் செய்தார்கள். எந்தப் படத்தை எடுத்தாலும் அவர் உண்மையை அப்படியே பிரதிபலிப்பதில்லை. கசப்பு மாத்திரைக்கு மேலே இனிப்புக் கலவையைப் பூசிவிடுகிறார் என்றனர். இதைப்பற்றியெல்லாம் டிஸ்னி கவலைப்படவில்லை. தாம் குழந்தைகளுக்காகவே படம் எடுப்பவர் என்பதை விநாடிப் போதும் மறவாமல் இருந்தார் அவர். கார்ட்டூன் படமான மிக்கி மௌஸில் தொடங்கிச் சரித்திரப் படமான டேவி கிராக்கெட் வரை எல்லாவற்றிலும் அவரது கதாநாயகர்கள் ரொம்ப ரொம்ப நல்லவர்கள். சுத்த வீரர்கள். அதர்மத்தை அழித்து வெற்றி கண்டவர்கள்.

டிசம்பர் மூன்றாவது வாரத்தில் டிஸ்னி இறந்தபோதும் அவர் சிருஷ்டித்த டிஸ்னி உலகத்தைப் பார்க்கப் பல்லாயிரக் கணக்கானவர்கள் வந்து குவிந்தார்கள். எப்போதும்போல் மகிழ்ச்சி ஆரவாரமும், குதூகலச் சிரிப்பும் அந்தச் சொப்பனபுரியில் நிலவின. ஒரே ஒரு குறை மட்டும் இருப்பதை நினைவுபடுத்தக் கொடி அரைக் கம்பத்தில் பறந்து கொண்டிருந்தது.

— **கௌசிகன்**

* மனத்தில் உள்ள பத்தாயிரம் நூல்கள்!
* படிக்கத் தெரியாதவர் வெளியிட்ட புத்தகம்!



# ஊர் வம்பு

சோவியத் நாடு சமாதானத்தையும் நட்பையும் வளர்க்கும் முறையிலே சில எழுத்தாளர்களுக்கும், சிறுவர்களுக்கும் நேருஜியின் நினைவிலே நிதி முடிப்பும், சோவியத் நாட்டுப் பிரயாணச் சலுகையும் வழங்கி வருகிறது.

தரமான இந்திய இலக்கியம் எதுவானாலும் இப்பரிசுகளைப் பெறும் என்று இருந்தால் இது கம்யூனிஸப் பிரசார நோக்கத்துடன் செய்யப்படுகிற காரியம் என்ற குற்றச்சாட்டுக்கு இடம் இருக்காது. இந்திய சோவியத் நட்புறவை வளர்க்க வேண்டுமென்றால் அதற்காக ருஷ்ய இலக்கியத்தின் தமிழாக்கம் அல்லது ருஷ்யச் சார்புள்ள தமிழிலக்கியம் இவற்றுக்கு மட்டுமே பரிசு அளிக்க வேண்டும் என்ற கொள்கை சரியானது தானா? இல்லை என்று உறுதியாகச் சொல்லி விடலாம். எந்த நேருஜியின் பெயரால் இப்பரிசுகள் அளிக்கப்படுகின்றனவோ அவரே இன்று உயிருடன் இருந்தால் இந்த ஒருதலைப்பட்சமான காரியத்துக்குச் சம்மதம் அளிப்பாரா என்பது சந்தேகம்.

'சோவியத் கீதாஞ்சலி' என்ற தமிழ்க் கவிதைகளை இயற்றிய சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்களுக்கு எட்டாயிரம் ரூபாய் நிதிப் பரிசும், இரண்டு வாரங்கள் சோவியத் நாட்டுப் பிரயாணமும் கிடைத்துள்ளன. அன்று 'சிவப்பு'க் காவியுடை அணிந்த சுவாமிக்குப் பொன்னாடை போர்த்தினார் தொழில் மந்திரி திரு ஆர். வெங்கடராமன். சுவாமி சுத்தானந்தபாரதியார் 'எட்டாயிரம் நிதியைவிட எனக்கு ஓர் அச்சு யந்திரம் வழங்கினால் நலம். நான் முந்நூறு புத்தகங்களுக்கு மேல் எழுதியிருக்கிறேன். என் மனசில் பத்தாயிரம் நூல்களுக்கு மேல் இருக்கின்றன' என்றார்.

வந்தவர்கள் பொறுமை இழந்து கைதட்டியும் விடாமல் அவர் பேசிக் கொண்டே போனதைப் பார்த்தால் இன்னொரு பத்தாயிரம் புத்தகங்களில் அடங்குகிற மாதிரி அவர் பேச்சு நீண்டு விடுமோ என்று பயமாயிருந்தது!

விழாவில் பரிசு பெற்ற பிறர்: கே.ஸி.எஸ். அருணாசலம், கே. ஸி. ஜியார்ஜ், ஸ்ரீமதி எம். ஆர். சாஸ்திரி, எம். எஸ். சாஸ்திரி.

கிரிக்கெட், டென்னிஸ் ஆகிய விளையாட்டுக்களில் இந்தியாவுக்குப் பெருமை தேடித் தந்த திரு வி. ராமசாமி தம் அனுபவங்களைப் புத்தகமாகத் (Ramblings of a Games Addict) தந்திருக்கிறார். இந்தப் புத்தக வெளியீட்டு விழா தாசப்பிரகாஷில் பம்பாய் கவர்னர் செரியன் தலைமையில் நடந்தது. புத்தகத்தை வெளியிட்ட சென்னை கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு தலைவர் இரானி (பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர்) தமக்குத் தில்லியில் ஏற்பட்ட அனுபவத்தை ஆங்கிலத்தில் நகைச்சுவை ததும்பக் கூறினார். சென்ஸஸ் எடுப்பவர் இரானியிடம் வந்து விவரங்களைக் கேட்டு எழுதிக் கொண்டாராம். 'படிப்பு' என்ற கேள்விக்கெதிரே குறிப்பதற்காக இரானியிடம், ''நீங்கள் பட்டதாரியா?'' என்று கேட்டார் சென்ஸஸ் அதிகாரி. 'இல்லை!' என்ற பதில் கிடைத்தது இரானியிடமிருந்து. 'குஜராத்தி, ஹிந்தி மொழி தெரியுமா?' என்றார் வந்தவர். ''கொஞ்சம் கொஞ்சம் தெரியும்!'' என்று பதிலளித்தார் இரானி. ''அவற்றை எழுத வருமா?'' என்றதும் ''தெரியாது'' என்று இரானி பதிலளிக்கவே, சென்ஸஸ் எடுப்பவர் 'எழுத்தறிவில்லாதவர்' என்று தம் புத்தகத்தில் குறித்துக் கொண்டாராம். ''இப்படி எழுத்தறிவில்லாத நான் இன்று திரு வி. ராமஸ்வாமியின் புத்தகத்தை வெளியிடுகிறேன்!'' என்று கூறி கவர்னர் செரியனிடம் புத்தகத்தைக் கொடுத்தார். பிறகு மற்றொரு புத்தகத்தை அவர் மனைவியார் தாரா செரியனிடம் தந்து, ''இனி குடும்பச் சண்டை ஏற்படாமல் இந்தப் புத்தகத்தை நீங்கள் படிக்கலாம்!'' என்றார் இரானி.

''கடும் வெய்யிலில் அமர்ந்து ஐந்து நாள் டெஸ்டையும் கண்டு களிக்கும் ரசிகன் ஒருவன் வந்து, என் புத்தகத்தைப் படித்ததாகச் சொன்னால் போதும், எனக்குத் திருப்தி!'' என்றார் திரு வி. ராமசாமி. கூட்டம் முடிந்தவுடனேயே பலர் முன் வந்து புத்தகத்தைப் பணம் கொடுத்து வாங்கிச் சென்றது ஆச்சரியத்தை விளைவித்தது.

பிரசுரம்: வி. ராமசாமி, 20, முதல் மெயின் ரோடு, சென்னை-20. விலை ரூ. 50.

சோவியத் நாடு, நேருஜியின் பெயரால் இளைஞர்களுக்கு அளிக்கும் இலக்கியப் பரிசைப் பெற்ற சிறுவன் ரவீந்திரநாத்: சுத்தானந்த பாரதியார் பேசுகிறார்.



# வெண்ணிலவுப் பெண்ணரசி

## சோமு

அத்தியாயம் 15

## சிறையும் தவமும்

வெளியே வந்து பார்க்கும்படி, பணிப்பெண் பதற்றத்தோடு அழைத்ததும் மணிமாலையும் நீலவல்லியும் கன்னிமாடத்தின் கதவைத் திறந்து கொண்டு முற்றத்திலே எட்டிப் பார்த்தார்கள். அரச மாளிகையின் வெளித் தாழ்வாரத்திலே அவர்கள் கண்ட காட்சியில் அப்படியே அவர்களுக்கு உடம்பு பதறியது. கையும் காலும் ஆடின!

கன்னி மாடத்திலே காவல் காத்துக் கொண்டிருந்தானே யவனன், கையில்விளக்குடன் வந்து வேடிக்கையான ஓசை எழுப்புவானே, சாளரத்தின் வழியாகக் கன்னி மாடத்துக்குள் எட்டிப் பார்ப்பானே, அந்த யவனன் மூர்ச்சையுற்ற நிலையிலே இரண்டு மூன்று அரச வீரர்களால் எங்கோ தூக்கிச் செல்லப்பட்டான்.

ஆம்; கசையடி அத்தனை கடுமையாக விழுந்திருக்க வேண்டும்! அந்த அடியின் வேகம், அந்தத் தண்டனையின் கடுமை தாங்காமல் யவன வீரன் மூர்ச்சை போட்டு விழுந்திருக்க வேண்டும். அப்படி மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தவனைத் தான் அரச வீரர்கள் அப்படித் தூக்கிக் கொண்டு செல்கிறார்கள்!

"மணிமாலை! என்ன துயரமான காட்சி இது! எந்த யவனனை ஒரு காலத்தில்நாம் இருவரும் வெறுத்தோமோ, எந்தக் காவலாளியின் செய்கை நம் இருவருக்கும் கோபமூட்டியதோ, அதே யவன வீரனின் நிலையைக் கண்டு இப்போது என் உடல் பதறுகிறது. ஐயோ, நாம் அஞ்சியபடி அவன் உண்மையிலேயே நம் மன்னரின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரிய பணியாளனாகவே இருந்து



இந்த அரண்மனையிலே வாழ்ந்திருக்கக் கூடாதா? நமக்கு உதவி செய்ய வேண்டும் என்று எண்ணி இப்படி ஒரு செயலிலே ஈடுபட்டதால்தானே அவன் இந்தத் துயரத்தில் சிக்கிக் கொண்டான்! உயிர் இருக்கிறதோ அல்லது உயிரையோ போக்கி விட்டார்களோ, தெரியவில்லையே !''

இவ்வாறு பதறினாள் நீலவல்லி! மணிமாலை சொன்னாள் :

''வல்லி! உயிருக்கு எத்தகைய இடையூறும் நேர்ந்திருக்காது என்பது உறுதி! ஏனென்றால் இந்த வகையான தண்டனையைக் கொடுக்கும் வீரர்கள் ஓர் உண்மையில் மிகவும் கருத்தாக இருப்பார்கள்! அதாவது தண்டனை பெறும் காவலாளிக்கு உயிர் போய் விட்டால், பிறகு அவனிடமிருந்து எந்தச் செய்திகளைத் தெரிந்து கொள்ள விரும்புகிறார்களோ அந்த உண்மைகளும் அல்லவா தெரிய முடியாமல் போய்விடும்! அதனால் உயிர் போகும்படி எதுவும் செய்ய மாட்டார்கள்! உயிரும் இருக்க வேண்டும். வேதனையும் தாங்க முடியாதபடி கடுமையாக இருக்க வேண்டும். வேதனைக்கு அஞ்சி, துயரம் தாங்காமல் செய்திகளைச் சொல்லிவிட மாட்டானா என்றுதான் முயற்சி செய்வார்கள்! ஆனாலும் அடியின் கடுமையை நினைக்கும்போது உள்ளம் கலங்குகிறது! எங்கோ ஒரு நாட்டில் பிறந்து, யாருக்காகவோ இப்படி ஒரு பெரிய துயரத்தைத் தாங்கி, இத்தகைய தியாகத்தை ஒரு யவன வீரன் செய்யும்படி சூழ்நிலை அவனைக் கொண்டு வந்து இந்தச் சிக்கலில் மாட்டியிருக்கிறதே! அதை எண்ணினால்தான்.....'' என்று சொற்களை முடிக்க முடியாமல் மணிமாலை கண் கலங்கினாள்.



நீலவல்லி கேட்டாள் :

''மணிமாலை! எதிர்காலம் இன்னும் என்னென்ன சோதனைகளையெல்லாம் நமக்காக வைத்துக் கொண்டு காத்திருக்கிறதோ தெரியவில்லையே! நமக்கு மட்டும் துயரங்களை

வழங்கி நம் இருவரையும் வேதனைக்கு உள்ளாக்கினால் கூடக் கவலையில்லையே! ஆனால் நமக்காக வேறு யாரோ ஒருவன் தாங்க முடியாத துயரங்களை அநுபவிக்கும்படி நேருகிறதே. அதைத்தான் தாங்க முடியவில்லை. இத்தனை குழப்பங்களுக்கும், கடம்ப மன்னருடைய இத்தனை சீற்றத்துக்கும் காரணமான நான் எத்தகைய வேதனையும் இல்லாமல் இருக்கிறேன். மற்றவர்கள் எனக்கும் சேர்த்து எல்லா வேதனைகளையும் தாங்குகிறார்களே, — அதுதான்—''

''வள்ளி! நமக்கு அதுதான் பெரிய தண்டனை! நம்மைத் துன்பப்படுத்து வதைவிட, நம்மைச் சேர்ந்தவர்கள் நமக்காகத் துன்பத்துக்கு உள்ளாவதைப் பார்த்துக் கொண்டிருக்கும்படி நமக்கு ஒரு தண்டனை கொடுக்கிறதே ஊழ்வினை. அந்தத் தண்டனைதான் மிக மிகக் கொடுமையானது! நான்தான் சொன்னேனே, புன்னாட்டின் நல்வாழ்வுக்காகவும், புன்னாட்டு இளவரசியின் மீட்சிக்காகவும் பலர் பலவகையில் வேள்வி செய்கிறார்கள்! ஆனால் அந்த வேள்வி இத்தனை கடுமையான வேள்வியாக இருக்க வேண்டுமா! அதுதான் துயரம் தருகிறது! ஆனால் ஒன்று. இந்த வேள்வித் தீயிலே குதிக்கும் போது, குதித்த ஒவ்வொருவருக்கும் அந்தத் துயரம் எத்தகைய துயரமாக இருக்கும் என்று நன்றாகத் தெரியும்! நம் கண் முன் சிலர் அந்தத் துயரத்தைத் தாங்கிக் கொண்டு தவம் புரிகிறார்கள்! இன்னும் நம் கண்களுக்குத் தெரியாமல் இந்தத் தமிழ் நாட்டில் யார் யாரெல்லாம் இந்தப் புண்ணிய வேள்வித் தீயிலே குதிக்க வேண்டிய நிலை ஏற்படப் போகிறதோ! நாம் எண்ணித் துணிந்தபடி புன்னாட்டுக்குச் சென்று சேர்ந்திருந்தோமானால், நிகழ்ச்சிகள் வேறு விதமாக இருந்திருக்கும்! இளவரசி புன்னாட்டுக்கு மீண்டும் வந்து சேர்ந்து விட்டாள். எனவே இனி நடக்கும் போர் கடம்ப மன்னனுக்கும் மற்ற அரசர்களுக்கும் இடையே நடக்க வேண்டிய அரசியல் முறையான போர்தான் என்று நிலைமை மாறியிருக்கும்! ஆனால் இப்போதோ என்றால் உன்னுடைய மீட்சிக்காகவும் சேர்த்தல்லவா தமிழ் நாடு கடம்ப மன்னனோடு போர் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது!''

நீலவல்லி மணிமாலை இருவரும் மீண்டும் கன்னி மாடத்துக்குள் வந்து அமர்ந்தார்கள்! யவனக் காவலாளியை மூர்ச்சையுற்ற நிலையிலே தூக்கிச் சென்ற காட்சி அவர்கள் இருவரின் கண் முன்னும் அப்படியே நின்று அச்சமுறுத்தியது!

''மணிமாலை, கடலிலே குதித்தாரே அவர் என்ன ஆனாரோ தெரியவில்லையே! இந்த யவனக் காவலாளியை நம்மோடு நமது மரக்கலத்திலே வந்தான் என்பதற்காக இத்தனை கொடுமைகளுக்கு ஆளாக்குகிறார்களே, அவர் கடலிலே நீந்தி யாருக்கும் தெரியாமல் தப்பிக் கரை சேர்ந்திருக்க வேண்டுமே! ஒரு வேளை இந்தக் கடம்ப வீரர்கள் கடலிலே குதித்த அந்த உத்தமரையும் தேடிக் கண்டுபிடித்து, அவரையும் சிறை செய்து—''

''வள்ளி! அந்த எண்ணம் மட்டும் சற்றும் வேண்டாம் உனக்கு! இந்த மரக்கலத்தில் யார் யார் இருந்தார்கள், யார் யார் தப்பி ஓடிமறைந்து

## பெண்ணாக நடித்த எழுத்தாளர்கள்

வாசகர்களையும், பதிப்பகத்தாரையும் ஏமாற்றுவதற்கு ஆண் எழுத்தாளர்கள் பெண்களின் பெயரைச் சூட்டிக் கொள்வது ஓர் இலக்கிய மரபாகி விட்டது! ரஷ்ய இலக்கியத்திலும் இவ்வழக்கம் இருந்து வந்திருக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த ரஷ்ய எழுத்தாளரான தெனிலெவ்ஸ்கியின் கவிதைகளை ஒரு பத்திரிகை ஆசிரியர் நிராகரித்தார். உடனே அவர் ஒரு தந்திரம் செய்தார். 'எவ்கெனியா சரத்பனோவா' என்ற பெயரில் அக்கவிதைகளை அதே ஆசிரியருக்கு அனுப்பி வைத்தார். ''பதினாறு வயதுப் பருவ மங்கையான ஓர் இளம் பெண் கவிஞரை நீங்கள் ஆதரிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். உடனே அக்கவிதை பிரசுரமாகி விட்டது!

பிரபல ரஷ்யக் கவிஞரான வாலரி பிரியுசோவ், 'நெல்லி' என்ற பெண் பெயரில் 1913ல் ஒரு கவிதைத் தொகுதியை வெளியிட்டுள்ளார்! 'விதவை', 'தேனி', 'பாதிமா', 'அழகி' என்பவை வால்டேரின் புனைபெயர்களாகும்.

பிராஸ்பர் மெரிமே என்ற பிரெஞ்சு எழுத்தாளர், ஸ்பானிஷ் வாழ்க்கை பற்றிச் சில நாடகங்கள் எழுதினார். அவற்றை 'கிளாரா காசுல்' என்ற புனைபெயரில் வெளியிட்டார்; அத்துடன் நில்லாது, கிளாராவின் படத்தையும், வாழ்க்கைச் சுருக்கத்தையும் அந்நூலில் வெளியிட்டிருந்தார். படத்திலுள்ள கிளாரா வேறு யாருமல்ல; பெண்வேடம் போட்டிருந்த பிராஸ்பர் மெரிமேதான்!

ஆதாரம்: ''ஏ. பி. என்.''
தகவல்: மணவை ப. வீரன்




விட்டார்கள் என்ற ஆராய்ச்சியே மரக்கலம் வெள்ளைத் தீவுக்கு வந்து சேர்ந்த பிறகுதான் ஆரம்பமாயிற்று. நாம் தப்பிச் சென்ற மரக்கலத்தைக் கண்டு பிடித்ததும் கடம்ப வீரர்கள் வேறு எதைப் பற்றியும் கருத்துச் செலுத்தவில்லை. நீலவல்லியை மீண்டும் வெள்ளைத் தீவிலே கொண்டு சேர்க்க வேண்டும் என்பதிலேதான் கடம்ப மன்னரும் கண்ணாக இருந்திருக்கிறார்! அவர் ஒருவேளை மரக்கலத்துக்கு உள்ளே வந்து நம்மைப் பார்த்திருந்தால், வேலவரைப் பற்றிய எண்ணம் உடனே அவர்கள் அனைவரையும் தாக்கியிருக்கும்! ஆனால் ஊழ்வினை நமக்கு உதவியது! கடம்ப மன்னர் நம்முடைய மரக்கல அறைக்குள்ளேயே வரவில்லை என்பதோடு, வேலவன் கோதை தப்பிப் போய் விட்டார் என்பதே அவர்கள் எல்லாருக்கும் அப்போது தெரியாது! ஆகையால் நீ அவரைப் பற்றிக் கவலைப்படாதே! அவர் எப்படியும் நீந்திக் கரை சேர்ந்து எங்கோ ஒரு பகுதியிலே எப்படியோ தம்மைத் தாம் காத்துக் கொண்டு நமக்காகப் பொறுமையோடு காத்திருப்பார்! காத்திருப்பதோடு மட்டுமில்லை! புன்னாட்டு அரசச் சுற்றத்தாரோடும், சேர வீரர்களோடும் எப்படியாவது தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு ஒவ்வொரு விநாடியும் நம்மைப் பற்றிய நினைவிலேயே இருப்பார். அதுபற்றி எனக்கு எள்ளளவும் தயக்கம் இல்லை!''

இப்படி மணிமாலை சொன்னபோதிலும், அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில் ஒரு கவலை, ஒரு வேதனை இருக்கவே செய்தது! கடலிலே குதித்த வேலவன் எவ்வித இடையூறும் இல்லாமல், நல்லபடியாகக் கரை சேர்ந்திருக்க வேண்டுமே என்று மணிமாலையுமே உள்ளத்தின் ஆழத்தில் ஆழ்ந்த துயரம் அடைந்தாள். என்றாலும், அந்தத் துயரத்தை நீலவல்லியிடம் காட்டிக் கொள்ளாமல் அவளுக்கு ஆறுதல் மொழிகள் சொன்னாள் மணிமாலை.

ஆறுதல் மொழிகள்! அன்று மட்டுமில்லை. அதற்குப் பிறகும், மறு நாளும் அதற்கு மறு நாளும் பிறகும் ஒவ்வொரு நாளும் நீலவல்லிக்கு ஆறுதலும், தேறுதலும் தந்து வந்தாள் மணிமாலை. என்றோ ஒரு நாள் வேலவன் கோதை மீண்டும் வெள்ளைத் தீவுக்கு வருவான், என்றோ ஒரு நாள் புன்னாட்டு அரசரும் சேர மன்னரும் இணைந்து வந்து போரிட்டு, வெள்ளைத் தீவிலிருந்து நீலவல்லியை மீட்டுச் செல்வார்கள் என்று மணிமாலை நீலவல்லிக்கு நம்பிக்கை ஊட்டி வந்தாள். அந்த நாள், அந்த மீட்சிக்குரிய நன்னாள் அதிக தொலைவில் இல்லை என்றும், எதிர்பார்ப்பதைவிட ஊழ்வினை அவர்களுக்கு விரைவோடும் பரிவோடும் உதவி செய்யும் என்றும், நாளும் பொழுதும் நீலவல்லிக்கு உறுதி சொல்லி, தளர்ந்த அந்த இளம் மனத்திலே ஊக்கத்தைப் பதித்து வந்தாள் மணிமாலை!

வானமண்டலக் கடம்பனோ? யவனப் பகடி, யவனக் காவலாளி, தப்பிச் செல்ல முயன்ற மரக்கலத்திலே வல்லி

யோடு வந்த மற்றப் புன்னாட்டு வீரர்கள் — இத்தனை மனிதர்களையும் என்ன செய்தான், அவர்கள் என்ன ஆனார்கள் என்பது யாருக்கும் தெரியாத முறையில், மரக்கல நிகழ்ச்சியை ஒரு பெரிய ஆயமாகப் பொதிந்து வைத்து விட்டான் கடம்பன்! கன்னி மாடத்துக்கு எப்பொழுதாவது வருவான்; வந்தால் அதிக நேரம் அங்கு தங்குவதில்லை. பழைய நாட்களில் இருந்த அன்பையும் பரிவையும்போல, எவ்வித மாறுதலும் இல்லாத நிலையில் எத்தகைய நிகழ்ச்சியும் நடந்திராதது போல, வல்லியையும் மணிமாலையையும் நலம் விசாரிப்பான்! அவர்களுக்கு வேண்டிய சுற்றுச் சூழ்நிலையில் எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று பார்ப்பான். பிறகு மோனமாகச் சென்று விடுவான். எதைப் பற்றியும் யாரைப் பற்றியும் எதுவும் பேச மாட்டான் கடம்பன்! நீலவல்லியை நடத்தும் விதத்திலோ, மணிமாலையோடு பேசும் முறையிலோ எந்த மனத்தாங்கலும் இல்லாதவனாக எப்போதும் போல நடந்து கொண்டான் கடம்பன்! ஆனால் பேச்சிலே ஒரே ஒரு மாறுதலை மற்ற அரசப் பணியாளர்கள் கடம்பனிடம் கண்டார்கள். முன்னைப் போல் எதிலும் ஆழ்ந்து கருத்துச் செலுத்துவதில்லை கடம்பன். யாரோடு பேசினாலும் அதிகமாக உரையாடுவதில்லை. எதிலும் எப்போதும் ஒரு விரைவு! மனத்துக்குள் எந்த விநாடியும் ஏதோ ஒரு சிந்தனை! சொற்களைப் பேசிக் கொண்டேயிருப்பான், உள்ளம் மட்டும் வேறு எதையோ பற்றி எண்ணிக் கொண்டிருக்கும். கண்களிலே ஏதோ ஒரு சிந்தனைப் படலம் தெரியும்! வீரர்களிடம் பேசும் போது ஓர் அரசன் கட்டளையிடுவதாக இராது அந்தப் பேச்சு! வேறு யாருக்காகவோ, வேறு யாரோ ஒருவருடைய சார்பாகவோ தான் அவர்களிடம் பேசுவது போலப் பேசுவான் கடம்பன்! பேச்சில் ஒரு பிடிப்பு இராது! இத்தனைக்கும் மேலாக இன்னொரு பெரிய மாறுதல் கடம்பனுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சி நிரலிலே ஏற்பட்டது. அதுதான் எல்லாரையும் ஒரு பெரிய திகைப்பிலே ஆழ்த்தியது! அதாவது முன்னைப்போல் ஒவ்வொரு முழு நிலா இரவிலும் தவறாமல் கடல் மீது செல்லுவதில்லை, வானமண்டலக் கடம்பன்! எப்போதாவது கடல்மீது சென்றான் என்றால், மறுநாள் காலையிலேயே திரும்பி வந்துவிடுவான்! கொள்ளைப் பொருள்களும் முன்னைப்போல் இல்லை! ஒவ்வொரு முழு நிலா இரவிலும் கடம்பனோடு சென்று வந்த மற்ற வெள்ளைத் தீவு வீரர்கள் இந்த மாறுதலுக்கு ஒரு காரணம் சொன்னார்கள். மன்னனுக்கு வயதாகிறது. முன்னைப் போல் கடல் காற்று உடம்புக்கு ஒத்துக் கொள்வதில்லை, உடம்பிலும் பழைய வலிமை இல்லை என்று அந்த வீரர்கள் தமக்குள் பேசிக் கொண்டார்கள். என்றாலும் எல்லாருடைய உள்ளத்தின் அடியிலும் ஏதோ ஒரு திகைப்பு, ஏதோ ஒரு வியப்பு, என்னவென்று புரியாத ஒரு புதிர் அஞ்சி ஒடுங்கிச் சிறையிருந்து வந்தது!

ஃ ஃ ஃ



கடலிலே குதித்த வேலவன் கோதை பெருந் துருத்தித் தீவை அடைந்த போது மறுநாள் ஆகிப் பகல் எல்லாம் கழிந்து மாலைப் போது கவிந்து கொண்டிருந்தது! எண்ணி, வழி வகுத்து, மனம் ஆயத்தமாகிக் கடலிலே குதிக்கவில்லையே அவன்! எதிர்பாராத முறையில் எதிர்பாராத நிகழ்ச்சிகள் தோன்றி அல்லவா அவனைக் கடலிலே தூக்கிப் போட்டன! அந்தத் திகைப்பையும் அதிர்ச்சியையும் நிலைப்படுத்திக் கொண்டு, கடலிலே நீந்தும் போது எங்கெங்கோ எப்படி எப்படியோ மிதந்து, அலைந்து, திரிந்து, வட்டம் சுற்றி விட்டான் வேலவன்! ஆனாலும் உள்ளத்தின் விழிகளிலே நீலவல்லி நின்றாள். அந்த உருவம் கண்ணுக்கு எதிரில் வந்து நின்று நீந்துகிற கைகால்களை இயக்கியது! அவளுக்காக நீந்தினான், அவளுக்காகக் கரை சேர்ந்தான் இப்போது வேலவன் கோதை!

''தானைத் தலைவரே!'' என்று குரல் கொடுத்துக் கொண்டே பாறையிலே தோன்றினார் செவ்வந்தி அடிகள்! அவருக்குக் கைகூப்பி வணக்கம் செலுத்திக் கொண்டே கரையின் பரப்பிலே நடந்தான் வேலவன் கோதை!

அன்றொரு நாள் முதன் முதலாக அடிகளைப் பார்த்தபோது ஏற்பட்ட திகைப்பு இப்போது இல்லை வேலவனுக்கு. ஏற்கனவே ஏற்பட்டிருந்த உறவோடு, புன்னாட்டுச் சந்திப்பும் இணைந்து சேர்ந்து அடிகளிடம் ஒரு நெருங்கிய உறவை உண்டாக்கியிருந்தது! அந்த உறவின் ஆர்வ உணர்ச்சிகளோடு அடிகளுக்கு அருகிலே சென்று திருவடிகளைத்



"ஹலோ! பத்மாதானே பேசறது? நான்தான் உன் அத்தான் ஷண்முகம் பேசறேன்; அதாவது, சாயங்காலம் நீ ஆபீஸ் விட்டு வருகிறப்போ, கடையிலிருந்து சாம்பார் பொடி, ரசம் பொடியெல்லாம் வாங்கிண்டு வரியா?"

"ஊஹும்! முடியாது. பார்க்கிறவங்க நான்தான் சமையல் செய்கிறேனாக்கும்னு நினைச்சுப் பாங்க!"

தொட்டுக் கண்ணிலே ஒற்றிக் கொண்டான் வேலவன். புன்முறுவல் செய்தவாறு இரண்டு கைகளையும் தூக்கி அவனை வாழ்த்தினார் செவ்வந்தி அடிகள்.

"அடிகளே! மலர்வேணிய மன்னனிடம் நான் விடைபெறும் போது, தாங்கள் ஒரு ஞானப் புன்முறுவல் செய்தீர்கள்! அதன் பொருள் இப்போதுதான் எனக்குப் புரிகிறது!" என்றான் வேலவன் கோதை.

"புரிந்து விட்டதா! பொருளா! என்ன சொல்லுகிறீர் வேலவரே! எனக்குப் புரியவில்லையே!" என்றார் அடிகள்.

வேலவனுக்குக் கண் கலங்கியது. அடிகளுடைய முகத்திலே விளையாடிய ஒரு கடவுட் பேருணர்வு அவனை என்னவோ செய்தது.

"அடிகளே! மன்னிக்க வேண்டும். தங்களுடைய ஞானப் புன்முறுவலின் பொருள் எங்களுக்கெல்லாம் புரிந்து விடவா செய்யும்! சிரித்துக் கொண்டே வழியனுப்பினீர்கள், கடலிலே குதிக்கும் படி ஆயிற்று! அதை நினைத்துத்தான் இவ்வாறு சொன்னேன். ஆனால் ஒன்று சொல்லுகிறேன்: சிரித்ததோடு என்னை வாழ்த்தவும் வாழ்த்தினீர்கள். அதனால் உயிரோடு இங்கே வந்து சேர்ந்தேன். ஆனால் ஆனால்——"

"ஆனால் என்ன, சொல்லுமையா வீரரே!"

"ஆனால் தப்பி ஓடி வராமல், அங்கேயே அந்தக் கொள்ளைக் கூட்டத்தார்களோடு....."

"சண்டையிட்டு, நீங்களும்மறைந்து நீலவல்லியின் மறைவுக்கும் காரணமாயிருக்கலாம் என்று நினைக்கிறீர்களோ! வீரரே, வீரம் என்பது சண்டை போடுவது மட்டுமில்லை. எப்போது சண்டை போடுவது எப்போது சண்டை போடக் கூடாது என்று தீர்மானிப்பதும் சேர்ந்துதான் உண்மையான வீரம்! அஞ்சுவதற்கு அஞ்ச வேண்டும். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமல் இருப்பது வீரம் இல்லை, அது பேதைமை!"

செவ்வந்தி அடிகள் வேலவன் கோதையைச் சோலைக்குள்ளே அழைத்துச் சென்றார்! அந்தச் சோலையின் தண்மையைப் போலவே கருணையின் குளிர்ச்சியிலே அவனை அரவணைத்தார் செவ்வந்தி அடிகள்!

"வேலவரே! நிகழ்ச்சிகள் நடந்துள்ள வேகத்தையும், தன்மையையும் பார்க்கும் போது, உம்முடையதலையை இந்தக் கடல் வட்டாரத்தில் எங்காவது கண்டான் என்றால் வானமண்டலக் கடம்பன் என்ன செய்வானோ, தெரியாது! ஆகையால் உமக்கு நான் என்ன சொல்லுகிறேன் தெரியுமா? நிகழ்ச்சிகள் எப்படி வண்ணம் எடுக்கின்றன என்பதைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே இங்கே இந்தப் பெருந்துருத்திக் தீவிலே சில நாள் பாதுகாவலாக இருக்க வேண்டும் நீங்கள்! இப்போதைக்கு அது ஒன்றுதான் நீங்கள் செய்யக் கூடியது!"

இவ்வாறு சொல்லி வேலவனை வாழ்த்தினார் அடிகள்! ஆனால் சேர நாட்டிலோ வெள்ளைத் தீவுக்குச் சென்ற வீரன் வேலவன் கோதை எப்போது திரும்பி வருவான் என்று ஒவ்வொரு நாளும் ஆவலோடு அவனை எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தான் சேரலாத மன்னன்!

— முதல் பாகம் முற்றிற்று —

## நேஷனல் எக்கோவின் பொங்கல் வாழ்த்துக்கள்!



மாடல் யு-819
5 வால்வுகள், 3 பாண்டுகள்
ப்ளாஸ்டிக் காபினெட், ஏஸி/டிஸி
ரூ. 323-00



மாடல் ஏ-1511
6 வால்வுகள், 3 பாண்டுகள்,
மரக் காபினெட், ஏஸி
ரூ. 415.00



மாடல் ஏ-786 (ஹை-ஃபி செட்)
6 வால்வுகள், 5 பாண்டுகள், 2 ஒலிபெருக்கிகள்,
மரக் காபினெட், ஃபெர்ரைட் ஏரியல், ஏஸி
ரூ. 668.00

(விலைகள் [illegible] உட்பட: இதர வரிகள் தனி)

**நேஷனல் எக்கோ**

இந்தியாவின் ஒரே
மான்ஸூனைஸ்டு
ரேடியோ!

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்,
பம்பாய் • கல்கத்தா • மதறாஸ் • டெல்லி • பாட்னா • பெங்களூர் • ஸிகந்திராபாத்

# முள்ளும் மலரும்



## உமாசந்திரன்

முதல் பரிசு நாவல்

### அத்தியாயம் 23

**"யா**ரோ தீர்த் தேக்கத்தைப் பார்க்க வந்தவங்கபோலேயிருக்கு. உல்லாசப் படகிலே வேடிக்கையாப் புறப்பட்டிருக்காங்க'' என்றாள் வள்ளி.

''அவங்க யாரு தெரியுமில்லே ?''

''யாரு ?''

''குமரய்யாவும் அவரைச் சேர்ந்தவங்களும். நான் மேலே வரும்போது அவங்க கார் அந்தப் படகுத் துறைக்குப் பக்கத்திலே நின்னுக்கிட்டிருந்ததைப் பார்த்தேன்'' என்றாள் மங்கா.

வள்ளி சட்டென்று மிகுந்த பரபரப்படைந்தாள். ''அத்தை! நாம் இங்கேயிருந்து சீக்கிரம் புறப்படணும்'' என்றாள்.

''ஏன் ?''

''அவங்க எப்படியும் இந்தக் கோயிலைப் பார்க்க வராமல் இருக்க மாட்டாங்க.''

'' வந்தால் என்னவாம் ?'' என்றாள் மங்கா.

''நம்மைப் பார்த்திட்டாங்கன்னு?''

மங்கா சிரித்தாள்.

''நல்ல அக்கா நீ. அவங்க யாராவது வேத்து மனுசங்களா? இன்னிக்குத்தான் நம்மைப் புதுசாப் பார்க்கிறாங்களா?''

''உனக்குத் தெரியாது.மங்கா! அவங்க கண்ணிலே படாமே நாம இங்கேயிருந்து போயிடறது தான் நல்லது!''

''ஏன் அக்கா, உனக்கு என்ன வந்திடுச்சு ? அவர்களைப் பத்தி ஏன் இவ்வளவு பயப்படறே?''

இந்தக் கேள்விக்கு வள்ளி என்ன பதில் சொல்வாள்? அன்று குமரன் அவளிடம் மனம் விட்டுப் பேசியதிலிருந்து அவன் மனம் என்ன பாடுபட்டுக் கொண்டிருந்தது என்பது அவளுக்குத்தானே தெரியும்! மற்றவருக்கு விளக்கிச் சொல்லக் கூடிய விஷயமா அது?

வள்ளி எழுந்து விட்டாள். அத்தைக்கும் வியப்புத் தாங்கவில்லே.

''என்ன, வள்ளி இது? பொங்கல் இன்னும் அப்படியே இருக்குது. அதுக்குள்ளே எழுந்திட்டியே!'' என்றாள்.

''எனக்குப் போதும், அத்தை! நான் முன்னாலே போயிடறேன். நீயும் மங்காவும் இருந்து சாப்பிட்

டுட்டு மெதுவா வாங்க'' என்று கூறியவாறே அங்கிருந்து விரைந்தாள் வள்ளி.

''அக்கா! கொஞ்சம் பொறு. நாங்களும் வந்திடறோம்'' என்று மங்கா உரக்கக் கூறியதைக் கூடக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வேகமாக நடந்தாள் அவள்.

அவள் மனத்தில் எல்லையில்லாத பரபரப்பு. இனம் புரியாத பயம். அன்று குமரன் அவ்வளவு வெளிப்படையாக அவளிடம் பேசியதிலிருந்து அந்தப் பரபரப்பும் பயமும்தானே அவள் மனத்தை வாட்டிக் கொண்டிருக்கின்றன!

அன்று அவன் கூறிய வார்த்தைகளை மறந்து விடத்தான் அவள் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அந்த வார்த்தைகள்தானே மீண்டும் மீண்டும் அவள் மனத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டு அவளை வதைத்துக் கொண்டிருந்தன. அவற்றின் கருத்தை எண்ணிப் பார்க்கவே அவள் மனம் நடுங்கியது. எட்ட முடியாத பீடத்தில் ஏற்றி வைத்துப் போற்றி வந்த தெய்வம் திடீரென்று பீடத்திலிருந்து இறங்கி வந்து பக்தையின் கழுத்திலேயே மாலையிட வந்தால் அந்தப் பேதையின் மனம் என்ன பாடு படும்! வள்ளியின் மனமும் இத்தனை நாட்களும் அந்தப் பாடுதான் பட்டுக் கொண்டிருந்தது.

அன்றைய நிகழ்ச்சிக்கு முன்பு குமரனைப் பற்றி அவள் மனத்தில் நிறைந்திருந்ததெல்லாம் அளவுகடந்த பக்திதான். எல்லா வகையிலும் உத்தமமான குணம் படைத்த அபூர்வ மனிதர் என்ற முறையிலேயே அந்த ஐயாவை அவள் மனம் போற்றி வந்தது. அந்த ஐயாவுக்கு ஏற்ற உத்தமமான மனைவி எப்படியிருப்பாள் என்று சில சமயங்களில் அவள் எண்ணிப் பார்த்ததுண்டு. அந்தக் கற்பனை மனைவியை ஒருவிதமாக அவள் தன் மனத்தில் உருவகப் படுத்திக் கொண்டிருந்தாள். அந்தக் கற்பனையை யெல்லாம் ஊதி



யெறிந்து விட்டாரே அந்த ஐயா! அந்த இடத்தில் அமரும் தகுதி என்றாவது அவனுக்கு ஏற்பட முடியுமா? அதைப் பற்றி நினைப்பதற்கே அவள் மனம் கூசியதே.

அதே சமயம்.... அதே சமயம்.... இல்லை, அது பொருத்தமில்லாத நினைவு! கைகூடாத கனவு! அது ஒருகாலும் நடக்காது!

இன்று குமரனை நேருக்கு நேர் சந்தித்தால் இத்தனை நாட்களும் அவள் மனத்தில் குமைந்து கொண்டிருந்த எண்ணச் சுழல்களெல்லாம் எந்தவிதத்தில் வெளிப்பட்டு அவளைக் காட்டிக் கொடுத்து விடுமோ என்ற அச்சத்தினால்தான் அவள் அங்கிருந்து விரைந்து சென்று கொண்டிருந்தாள்.

சம்பாதேவிக் கோயிலிலிருந்து குன்றின் சரிவில் கீழ்நோக்கிச் செல்லும் ஒற்றையடிப் பாதை படகுத் துறையின் அருகிலேதான் அணைக் கரைச் சாலையில் வந்து சேர்ந்திருந்தது. அங்கிருந்து படகுத் துறையைக் கடந்துதான் அவள் அந்தச் சாலை வழியே செல்ல வேண்டியிருந்தது. மங்கா கூறியபடியே படகுத் துறை ஓரமாக நின்று கொண்டிருந்த காரைப் பார்த்ததுமே அது யாருடையதென்பதை அவள் புரிந்து கொண்டு விட்டாள். நல்ல வேளையாக இன்னும் அவர்கள் உல்லாசப் படகிலேயே நீர்த் தேக்கத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தார்களாகையால் வள்ளி பயமில்லாமல் அந்த இடத்தைக் கடந்து செல்ல முடிந்தது.

ஆனால் பாவம்! வள்ளி எதைத் தவிர்க்க வேண்டும் என்று அவ்வளவு அவசரமாக அங்கிருந்து ஓடினாளோ, அதுவே அடுத்த சில நிமிஷங்களுக்குள் நிகழ்ந்து விடுமென்று அவள் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்? அந்த விஷயத்தில் அவள் போட்ட கணக்கு தப்பாகத்தான் முடிந்தது. உல்லாசப் படகில் மற்றவர்களுடன் அந்த ஐயாவும் இருப்பார் என்று அவள் நினைத்தது சரியல்ல. காரில் வந்திருந்தவர்கள் உண்மையில் சபேசனும் கனகாவும் மட்டுமே. சுதந்திர தினத்தை முன்னிட்டுக் காரியாலயத்தில் நடந்த கொடியேற்று விழாவில் கலந்து கொள்வதற்காகக் குமரன் அதிகாலையிலேயே அங்கு செல்ல வேண்டியிருந்தது. அந்த விழா முடிந்த பிறகு மோட்டார் சைக்கிளிலேயே சம்பா நீர்த் தேக்கத்துக்கு வந்து விடுவதாகக் கூறிச் சென்றிருந்தான்.

ஏதோ ஆபத்தைக் கடந்து வந்து விட்டோமென்ற நிம்மதியுடன் சாலை வழியே வேகமாக நடந்து சென்று கொண்டிருந்த வள்ளி, மூங்கில் புதர்கள் செறிந்து வளர்ந்திருந்த ஒரு மேட்டுப் பகுதியின் திருப்பத்தைக் கடந்து செல்லவிருந்த போது, எதிரே மோட்டார் சைக்கிளின் சத்தத்தைக் கேட்டுத் திகைத்து நின்று விட்டாள். அதே சமயம் மோட்டார் சைக்கிளின் 'ஹாரனை' ஒலித்தவாறே அந்தத் திருப்பத்தில் திரும்பி வந்த குமரனும் அவளைப் பார்த்து விட்டான். ஒரே கணத்தில் அவளைக் கடந்து செல்லவிருந்தவன் சட்டென்று தன் வாகனத்தின் வேகத்தைக் குறைத்து அதைத் திருப்பிக் கொண்டு வந்து அவள் அருகே நிறுத்தினான். வள்ளி வெலவெலத்துப் போய்ச் சற்று ஒதுங்கினாள்.

''வள்ளி! உன்னை நான் இங்கே எதிர்பார்க்கவேயில்லையே!'' என்றான் குமரன் வியப்புடன்.

''நானும் அப்படித்தான். படகிலே ஐயாவும் இருந்தீங்கன்னு நெனைச்சுத்தான் அவ்வளவு அவசரம் அவசரமா ஓடி வந்தேன்'' என்றாள் வள்ளி, அவனை நிமிர்ந்து பார்க்கக்கூடச் சிறிதும் துணிவில்லாமல்.

''ஓடி வந்தாயா?''

''ஐயா கண்ணிலே பட்டு விடக்கூடாதென்று ஓடி வந்தேன். நான் நினைச்சதுக்கு நேர்மாறு ஐயாவே என் எதிரே வந்திட்டீங்க.''

''ஏன் வள்ளி, என் மேல் உனக்குக் கோபமா?''

பதறிப் போய்த் தலை நிமிர்ந்த வள்ளி, ''ஐயையோ, எவ்வளவு பெரிய வார்த்தை! அந்த மாதிரி நெனைச்சாலே பாவமாச்சே!'' என்றாள்.

''அப்படியானால் என் கண்ணில் பட்டுவிடக் கூடாதென்று நீ ஏன் ஓடி வர வேண்டும்? நான் உன்னைப் பார்த்து எத்தனை நாள் ஆயிற்று தெரியுமா? எங்காவது கண்ணில் படமாட்டாயா என்று நான் தவித்துக் கொண்டிருக்கிறேன். நீயானால் என் பார்வைக்குத் தப்பி ஓடிவிட நினைக்கிறாய்.''

''பார்வையைச் சந்திக்கத் துணிச்சல் இருந்தால்தானே?''

''முன்னாலெல்லாம் இருந்த துணிச்சல் இப்போது எங்கே போய்விட்டது?''

''அப்போ மாதிரியா இப்போ?''

''வள்ளி! அன்று நான் மனம் விட்டுப் பேசியதை நீ விரும்பவில்லையா?''

''நான் என்ன சொல்லட்டும்? நீங்க எவ்வளவோ பெரியவங்க. உங்க மனசிலே என்னைப் பத்தி இப்படியெல்லாம் இருக்கும்னு நான் கனவிலேயாவது நெனைக்க முடியுமா?'' வள்ளிக்கு

ஏனோ திடீரென்று அழுகை பொங்கிக் கொண்டு வந்தது.

குமரன் திடுக்கிட்டான். "ஏன் அழுகிறாய் வள்ளி?"

"நான் உங்களுக்கு என்ன தப்புச் செய்தேன்?"

"வள்ளி, இதென்ன கேள்வி?"

"ஏதேதோ பேசி என் மனசை ஒரேயடியாக் குழம்பச் செய்துட்டீங்களே நீங்க!"

"நீ ஏன் குழம்பணும் வள்ளி? என் பேச்சிலே உனக்கு நம்பிக்கை இல்லையா?"

"ஐயையோ, அப்படியெல்லாம் சொல்லாதீங்க. உங்க மனசு அப்பழுக்கில்லாததுன்னு எனக்குத் தெரியாதா? ஆனால் இவ்வளவு பெரிய அதிர்ஷ்டத்தைத் தாங்கும் சக்தி எனக்கு ஏது? என் நிலைமையை யோசிச்சுப் பார்க்க வேண்டாமா? உங்களுக்குச் சரிசமமான அந்தஸ்து எனக்கு என்னிக்காவது ஏற்பட முடியுமா?"

"அந்தஸ்துக்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது."

"சம்பந்தம் இல்லேன்னு நீங்க நெனைக்கலாம். ஆனா என்னாலே நெனைக்காமே இருக்க முடியலியே. இந்த விஷயம் நாலு பேருக்குத் தெரிஞ்சா என்னைப் பத்தித்தானே தப்பாப் பேசுவாங்க?"

"தப்பாப் பேசறதுக்கு என்ன இருக்கு இதிலே?"

"கண்ணியமான ஒரு நல்ல மனுஷரை எப்படியோ மயக்கிட்டேன்னு உலகம் எம்மேலேதானே பழி சொல்லும்!"

குமரன் சிரித்து விட்டான்.

"அந்தப் பழியை நீ ஏத்துக்கொள்ளத்தான் வேணும், வள்ளி! நீ மயக்கியதும் பொய்யில்லே, நான் மயங்கியதும் பொய்யில்லையே" என்றான் சிரித்துக் கொண்டே.

"நீங்க சிரிக்கிறீங்க. ஆனா எனக்கு எவ்வளவு பயமாயிருக்கு தெரியுமா?"

"என்ன பயம்?"

"மற்றவர்களைப் பற்றியெல்லாம் நான் பயப்படலே. ஆனா எங்கண்ணனை நெனைக்கும்போது...."

"கவலைப்படாதே, வள்ளி. உன் அண்ணனைச் சம்மதிக்கச் செய்வது என் பொறுப்பு."

"அது சுலபம்னு நீங்க நெனைக்கிறீங்க. ஆனா..."

"ஏன் தயங்குகிறாய் வள்ளி?"

"ஒண்ணுமில்லே" என்று தலையைத் தாழ்த்திக் கொண்டாள் வள்ளி. சாதாரணமாகவே குமரனைப் பற்றிப் பேசும் போதெல்லாம் அர்த்தமில்லாத ஆத்



"நம்ம ஆபீசுக்கு ரெண்டு மொட்டைக் கடுதாசுகள் வந்திருக்கு, சார்!"

"எந்த ஊரிலிருந்து? தபால் முத்திரையில் என்ன போட்டிருக்குன்னு பாருங்கோ!"

"திருப்பதி!"

திரத்தையும், துவேஷத்தையும் காட்டும் அண்ணன் இந்த விஷயம் தெரியும்போது எப்படி விசுவரூபம் எடுப்பானோ என்பதை நினைத்துப் பார்க்கவே அவள் மனம் நடு நடுங்கியது. ஆனால் அதைக் குமரனிடம் எப்படிச் சொல்ல முடியும்?

"வள்ளி! என் மனத்தை நீ புரிந்து கொண்டு விட்டாய். உன் மனத்தையும் நான் புரிந்து கொண்டு விட்டேன். எல்லாம் நல்லபடியாக நடக்கும். நீ கவலைப்படாதே" என்று கூறிய குமரன் மோட்டார் சைக்கிளை இயக்கி அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான்.

அந்த ஒலி அடங்கும் மட்டும் பூரிக்கும் நெஞ்சுடன் அதைக் கேட்டவாறு நின்றிருந்தாள் வள்ளி. பின்பு மெதுவாக அங்கிருந்து நடக்க ஆரம்பித்தாள்.

திருப்பத்தைக் கடந்து அவள் கொஞ்ச தூரம்தான் சென்றிருப்பாள். "அக்கா, வள்ளியக்கா!" என்று மங்கா அழைக்கும் குரல் கேட்டதும் அவள் சட்டென்று நின்றாள்.

மங்கா அவளை நோக்கி ஓடி வந்தாள்.

"ஏன் வள்ளியக்கா, அந்த ஐயா உன்னைப் பார்த்திடக் கூடாதுன்னு பயந்து ஓடி வந்தாயே, வழியிலேயே பார்க்கும்படி ஆயிடுச்சில்லே" என்றாள் சிரித்துக் கொண்டே.

"உனக்கு எப்படித் தெரிந்தது?"

''இப்பத்தான் அந்த ஐயா மோட்டார் சைக்கிளிலே போறதைப் பார்த்தோமே?'' என்றாள் மங்கா.

அதற்குள் அஞ்சலை அத்தையும் அருகில் வந்தாள்.

''முன்னாலேயே புறப்பட்டு வந்திட்டயே வள்ளி. வழியிலே என்ன ஆச்சு?'' என்று கேட்டாள்.

''அந்த ஐயாவைப் பார்த்ததும் நின்று பேசும்படி ஆயிடிச்சு. அப்படித்தானே அக்கா?'' என்றாள் மங்கா.

''அப்படியா வள்ளி?''

''ஆமாம் அத்தை.''

''இவ்வளவு நேரம் அந்த ஐயாகூட என்ன பேசிக்கிட்டிருந்தே?'' என்று கேட்டாள் அத்தை.

''வீட்டிலே அண்ணன் காத்திருக்கும். முதல்லே வீட்டுக்குப் போகலாம். அப்புறம் எல்லாம் விவரமாகச் சொல்கிறேன்'' என்றாள் வள்ளி.

ஃ ஃ ஃ

அன்று நெடு நேரம் வரை காளியண்ணன் வீட்டுக்கே திரும்பி வரவில்லை. வள்ளியும் அஞ்சலையத்தையும் அவன் வரவுக்காகக் காத்துக் காத்துச் சோர்ந்து போய் விட்டனர். சம்பா தேவிக்குப் படையல் படைத்ததை முன்னிட்டு அஞ்சலையத்தை அன்று விசேஷமாக வடை பாயசத்துடன் சமையல் செய்திருந்தாள். அதெல்லாம் ஆக்கி முடிவதற்குள்ளாவது காளியண்ணன் வீட்டுக்கு வந்துவிடுவான் என்று இருவரும் எதிர்பார்த்தனர். ஆனால் அதெல்லாம் ஆறி அவலாகப் போகும் வரையில் கூடக் காளியண்ணன் வரும் வழியாய்க் காணோம்.

''வள்ளிக் கண்ணு, இப்படியே காத்திருந்தால் எப்படி? அவன் வரபோது வந்துக்கிடட்டும். நீ காலா காலத்திலே சாப்பிட்டுடு, கண்ணு!'' என்றாள் அஞ்சலையத்தை.

''எனக்கொன்னும் அவசரமில்லே, அத்தை! ஆனால் அண்ணன் எங்கே போயிருக்கும்? அதில்லே எனக்குக் கவலையாயிருக்கு. காலையிலேயே அதுக்கு வேலையிலே ஒன்னும் கெடைக்கலேன்னு கோவம். கோவிச்சுக்கிட்டு நாயர் கடையிலேயே உக்காந்திருக்குமோ ஒரு வேளை ?''

''அதுக்காகக் கவலைப்பட்டால் முடியுமா ? கோவம் தணிஞ்சா தன்னாலே திரும்பி வரட்டும்னு இருக்க வேண்டியதுதான்.''

''அந்த மாதிரி எப்படி இருக்க முடியும், அத்தை? நான் ஒரு நடை நாயர் கடைக்கே போய்ப் பார்த்துட்டு வந்துடறேன்'' என்று வள்ளி புறப்பட்டதும் அத்தை குறுக்கிட்டாள்.

''ரொம்ப நேரமா காயக் காய இருக்கியே வள்ளி? இப்ப அங்கெல்லாம் போயி அலையாட்டி என்ன?''

''இல்லே அத்தை! என் மனசு கேக்காது'' என்று கூறிவிட்டு வள்ளி அவசர அவசரமாக அங்கிருந்து சென்றாள்.

நாயர் டீக்கடையில் அன்று வழக்கத்தைவிட வியாபாரம் மந்தமாகவேயிருந்தது. சுதந்திர தின விடுமுறையைக் கொண்டாடும் தொழிலாளர்கள் அங்கங்கே சிதறிப் போய் இருந்ததால் ஒற்றை செத்தையாகத்தான் யாராவது வந்து போய்க் கொண்டிருந்தனர். நாயர்கூட அன்று காலை பத்து மணிக்குள்ளேயே கல்லாப்பெட்டியைக் காலி செய்து கொண்டு கடையைத் தன் கையாள் குட்டப்பனின் பொறுப்பில் விட்டு விட்டுப் போயிருந்தான்.

ஆனால் அன்றுகூட மாயாண்டியின் மனைவி அங்காயி அங்கு ஆஜராகத் தவறவில்லை. சுதந்திர தினமும் அதுவுமாக அடுப்படியில் கிடந்து அவளா அவதிப்படுவாள்? மாயாண்டியைப் பற்றி அவளுக்கு என்ன கவலை? எங்கெங்கோ மனம் போனபடி சுற்றி அலைந்துவிட்டு அவள் அந்த நாயர் கடையில் அடைக்கலம் புகுந்திருந்தாள்.

காளியண்ணனைத் தேடி வள்ளி அங்கே சென்றபோது அங்காயி மட்டும் தான் குட்டப்பனை ஏதேதோ அதிகாரம் செய்து கொண்டு அங்கே உட்கார்ந்திருந்தாள். வள்ளி கடைக்குள்ளே எட்டிப் பார்த்து விட்டுப் போகத் திரும்பிய போது அவள் எழுந்து வள்ளி அருகே வந்தாள்.

''ஏது வள்ளி! நீகூட இந்தக் கடைக்கெல்லாம் வந்திட்டயே. உள்ளே எட்டிப் பார்த்தே, என்னைக் கண்டதும் பயந்து வேகமா ஓடறியே? என்ன சமாசாரம் ?''

''ஒன்னுமில்லே அக்கா! அண்ணன் ரொம்ப நேரமா வீட்டுக்கு வரலே. இங்கே உக்காந்திருக்கான்னு பார்க்கத் தான் வந்தேன்.''

''அண்ணன் இல்லேன்னதும் அப்படியே போயிடணுமா? என்கிட்டே ரெண்டு வார்த்தை பேசினா உன் வாயிலேருந்து முத்தா உதுந்து போயிடும்?''

''அப்படியில்லே அக்கா, உண்மையிலேயே நீ உள்ளே உக்காந்திருக்கிறதை நான் கவனிக்கலே !''

''நீ எப்படிக் கவனிப்பே? நானெல்லாம் ஒரு கனிசமாத் தோணுவேனா, உன் கண்ணுக்கு? பெரிய எடத்தைப்

புடிச்சிட்டேல்லே?'' என்று அங்காயி எகத்தாளமாகக் கூறியதும் வள்ளி திடுக்கிட்டாள்.

''என்னென்னமோ சொல்றியே, அக்கா! எனக்கு ஒண்ணுமே புரிய லியே !'' என்றாள் திகைப்புடன்.

''பாவம், ஒண்ணுமே புரியாது. சாது மாதிரி நடிக்கிற நடிப்பைப் பாரு ! ஏ வள்ளி, இந்த நடிப்பை யெல்லாம் வேறே யார்கிட்டேயாவது வச்சுக்க. இந்த அங்காயிகிட்டே வேண் டாம். சென்னைப் பட்டணத்து உப்பங் காத்திலே உருவான மூளை இது. இதுக் குத் தப்பி எதுவும் நடந்திட முடியாது, ஆமாம்'' என்று தன் மண்டையைத் தொட்டுக் காட்டினாள் அங்காயி.

''மன்னிச்சுக்க அக்கா! நின்னு பேச எனக்கு நேரமில்லே. அண்ணன் வீட் டுக்கே திரும்பி வந்தாலும் வந்திருக் கும்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து விரைந்தாள் வள்ளி.

''இரு இரு! உன்னைக் கவனிக்கிற விதமாக் கவனிச்சுக்கிடறேன்'' என்று விஷம் கலந்த நோக்குடன் வள்ளி சென்ற திசையைப் பார்த்தவாறு கூறிக் கொண்டே மீண்டும் குட்டப் பனை அதிகாரம் செய்ய உள்ளே சென் றாள் அங்காயி.

**வீ**டு திரும்பிய வள்ளியின் மனம் பீதியால் படபடத்துக் கொண்டிருந் தது. அங்காயியின் வார்த்தைகளுக்கு அர்த்தமென்ன ? வானுக்கும் மலைக்கும் மரம் செடிகளுக்கும் தென்றலுக்கும் தவிர மனிதர் யாருக்கும் தெரியாது என்று அவள் நினைத்திருந்த ரகசியம் எந்த விதத்திலாவது அங்காயிக்குத் தெரிந்து விட்டதா? அதைவிட ஆபத்து வேறு என்ன இருக்க முடியும்? இத் தனை நாட்களும் அந்த அங்காயியைப் பற்றிய எண்ணமே அவள் மனத்தில் எழவில்லையே !

வேலிக் கதவைத் திறந்து கொண்டு அவள் வீட்டுக்குள் சென்ற போது, ''என்ன வள்ளி, காளித் தம்பி அங்கே யும் இல்லையா?'' என்று கேட்டுக் கொண்டே அஞ்சலையத்தை உள் ளிருந்து வந்தாள். வள்ளியின் முகத்தி லிருந்த கலவரத் தோற்றம் அவள் கண்களில் பட்டுவிட்டது.

''என்ன நடந்தது வள்ளி? ஏன் இப்படிப் பேயறைஞ்ச மாதிரி இருக்கு உன் முகம்?'' என்று கலக்கத்துடன் கேட்டாள் அஞ்சலை.

''அண்ணன் அங்கே இல்லே அத்தை!'' என்றாள் வள்ளி, சம்பந்தமில்லாமல்.

''அதுதான் புரியுதே. ஆனா அதுக் காக என்னமோ பிசாசைக் கண்ட

## சுண்டெலிக்கு ஒரு டிக்கெட்!

ஜூடித் ஷார்ப் என்ற சிறுமி தன்னுடைய வளர்ப்புக் கண்டெலியுடன் லண்டன் நகர பஸ் ஒன்றில் ஏறினாள். அவளுக்கு 8 பென்ஸ்ம் கண்டெலிக்கு 7 பென்ஸ்ம் கட்டணம் கேட்டார் கண்டக்டர். சிறுமி ஆட்சேபித்தாள். ஆனால் கண்டக்டரோ, விதிகளின்படி பஸ்ஸில் ஏற்றப்படும் எல்லா மிருகங்களுக்கும் டிக்கெட் உண்டு என்றும், கண்டெலிக்கும் இது பொருந்தும் என்றும் சொல்லிவிட்டார். பணத்தைச் செலுத்திவிட்டு மேலதிகாரிகளிடம் அந்தப் பெண் புகார் செய்திருக்கிறாள்.

தகவல்: எஸ். கோவிந்தன். - டெய்லி மெயில்

மாதிரி எதற்காக நடுங்கணும்? அவசிய மில்லையே.?''

''மக்கடையிலே அங்காயி அக்கா மட்டுந்தான் இருந்திச்சு.''

''சரித்தான்.... வேறே பிசாசைப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லே. உங்கண்ணனைப் பத்தி ஏதாவது சொல்லி உன் மனசைக் குழப்பி விட்டுடுச்சா அந்தப் பீடை? அதெல் லாம் நம்பாதே, வள்ளி. காளித் தம்பி வேறே எங்கேயும் போயிருக்காது. லீவு நாளாயிருக்குல்லே, முள்ளிமலைக்குத் தான் சவாரி விட்டிருக்கும். வெளக்கு வைக்கிற நேரத்திலே தன்னைப்போலத் திரும்பி வருதா இல்லையா பார்த்துக் கிட்டே இரு'' என்று கூறிய அஞ்சலை அடுப்படியில் அரைகுறையாக விட்ட வேலையைக் கவனிக்கச் சென்றாள்.

ஓர் ஓலைத் தடுக்கை எடுத்துப் போட்டுக் கொண்டு அங்கேயே ஒரு பக்க மாக உட்கார்ந்தாள் வள்ளி.

''அத்தை.......!''

''என்ன வள்ளிக் கண்ணு?''

''சம்பாதேவிக் கோயில்லேயிருந்து திரும்பி வரும் போது நீ ஒரு கேள்வி கேட்டயே, நினைவிருக்கா அத்தை ?''

''ஆமாம். வழியிலே அந்த ஐயாகூட அத்தனை நேரம் என்ன பேசிக்கிட் டிருந்தேன்னு கேட்டேன்.''

''அதைப்பத்தி அப்புறம் விவரமா சொல்றேன்னு உன்கிட்டே நான் சொன்னேன் இல்லையா ?''

''அதுக்கென்ன கண்ணு! உனக்கு எப்ப தோணுதோ அப்ப சொல்லு.''

''இப்ப அதைச் சொல்லித்தான் ஆகணும்ங்கற நிலைமை வந்திடுச்சு, அத்தை'' என்று கூறும் போதே வள் ளிக்கு விம்மல் வெடித்துவிடும் போல் ஆகிவிட்டது. (தொடரும்)

# வெற்றிக் கொடி

ரா. வேங்கடேசுவரன்

"இன்று சார். கிளம்பிட்டீங்களா?"

தினசரி அவன் இந்தக் கேள்வியைக் கேட்கிறான்! அலுவலகத்துச் சேவகன் கண்ணாயிரம்தான் கேட்டான். "இப்படி உட்கார்ந்து ஏன் என் பிராணனை வாங்குகிறீர்கள்? எல்லாரும் ஐந்து மணி அடித்தவுடன் போய்விடவில்லையா? உங்களுக்கு மட்டும் ஏன் இப்படி? சீக்கிரம் கிளம்பித் தொலையுங்களேன்" என்று அதற்கு அர்த்தமா? உண்மையில் கண்ணாயிரத்தைச் சொல்லிக் குற்றமில்லை. அவனுக்கு வீட்டில் எவ்வளவு கவலைகளோ? எங்களால்தானே அவன் தினசரி ஏழரை மணிக்கும் எட்டு மணிக்கும் அலுவலகத்தை விட்டுப் போக வேண்டியிருக்கிறது? திருவல்லிக்கேணிக்கு அவன் தினமும் பஸ்ஸில் போவதற்கு அவனுக்கு என்ன சம்பளம் அப்படி அள்ளியா கொடுக்கிறார்கள்?

செயின்ட் ஜார்ஜ் கேட் வழியாக வெளியே வந்தேன். வந்தேனா — வந்தோம் என்று சொல்ல வேண்டும். இன்னும் கண்ணாயிரத்துக்குக்கூட எங்கள் இருவரிடையே இருக்கும் உறவைப் பற்றிய உண்மை தெரியாது. அதைப்பற்றி எனக்கும் அக்கறை இல்லை. அக்கௌண்டெண்ட் ஜெனரல் அலுவலகத்தில் நானும் அவளும் சுதந்திர



சர்க்காருக்காக அவ்வளவு சிரத்தையாகத் தொண்டு புரிந்து கொண்டிருந்தோம் – அதுவும் ஒரே பகுதியில்! அவளுடைய மேஜையின் மேல் கலபமாகச் சத்தம் கேட்காமல் பைல்களை வீசியெறியலாம். அவ்வளவு சமீபத்தில் அவளருகே என்னுடைய இடம் அமைக்கப்பட்டிருந்தது. மாலை ஐந்து மணிக்கெல்லாம் 'டாண்' என்று கிளம்பி விடுவார்கள். நானும் அவளுந்தான் ஐந்து மணிக்கப்பாலும் அலுவலகத்தில் அடைபட்டுக் கிடப்போம். அவளுக்காக நான் உட்கார்ந்திருந்தேனா அல்லது எனக்காக அவள் உட்கார்ந்திருந்தாளா, அல்லது இருவருமே வேலைக்காக உட்கார்ந்திருந்தோமா என்பதைப் பற்றியெல்லாம் பலர் பலபடியாகப் பேசிக் கொள்ளலாம், பேசிக் கொள்ளவும் செய்கிறார்கள்! அவையெல்லாம் எங்கள் செவியில் விழவில்லை என்று நான் பொய் சொல்ல விரும்பவில்லை. இவையெல்லாவற்றையும் விட எங்கள் காதில் விழுந்தது ஒன்றுண்டு. அதுதான் ''வேலை வேலை'' என்ற ஓலம்!

சூரியன் அஸ்தமித்து எவ்வளவு நாழிகை ஆயிற்று என்று எங்களுக்குத் தெரியாது. என்னிடம் கைக்கடிகாரம் கிடையாது. அவளிடமும் கிடையாது! செயின்ட் ஜார்ஜ் வாசல் கேட்டைத் தாண்டி வெளியே வந்து திரும்பிப் பார்த்தேன். எவ்வளவு உணவு கொண்டு வந்தாலும் பசி ஆறாத அரக்கன் வாய் போல அது காட்சியளித்தது.

பின்னால் காலடி ஓசை கேட்டது.

''இன்னு சார், சினிமாவா ?''

ஆம் அலுவலகத்தை இழுத்துப் பூட்டி விட்டுக் கண்ணாயிரந்தான் வந்து கொண்டிருந்தான். அவள் பின்னால் திரும்பினாள். தலையை அசைத்தாள். அந்த இருட்டில் அவனுக்கு அவளுடைய தலையசைப்பின் அர்த்தம் விளங்கியிருக்க நியாயம் இல்லை. எனவே அவனுடைய கேள்விக்குச் சரியான விடைகூறி விட்டால் அவனுடைய மனிதத்துவத்துக்குப் பெருமை வழங்கியதாக ஆகாது என்று நான் நினைத்தேன். ''சினிமா இல்லையப்பா, நேரே வீடுதான்!'' என்றேன். அவன் அதை நம்பினானா அல்லது மனத்தில் என்ன நினைத்துக் கொண்டானோ என்பதையெல்லாம் பற்றி நான் கவலைப்பட்டுக் கொண்டே போனால் கவலைக்கு முடிவு ?

கோட்டை ரயில்நிலயத்துக்குப் போனோம். எங்களுடைய இலட்சியம் மாம்பலமல்லவா? பிளாட்பாரத்தில் இருக்கும் பெஞ்சியில் போய் உட்கார்ந்தவுடன்தான் சாவித்திரிக்குத் தோன்றியது போலும்! ஒரு வேளை கண்ணாயிரத்தின் கேள்விதான் தூண்டுகோலாக அமைந்ததோ? ''பிராட்வே பக்கம் போனால் என்ன?'' என்றாள்.

பெஞ்சியிலிருந்து எழுந்து விட்டோம்.

மௌனமாகப் பாலத்தில் ஏறி இறங்கினோம். பூக்களின் வாசனை, பழங்களின் வாசனை. மூக்குப் பொடியிலிருந்து காப்பிப் பொடி வரை – வாசனை! நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு! ஆனால் என்ன? சைனா பஜார் சைனாபஜார்தானே? அதன் வாசனையும் கெடுபிடியும் பிரத்தியேகமானதல்லவா ?

''ஐஸ்கிரீம் பார்லர்'' ஒன்றில் சிலர் – கல்லூரி மாணவ மாணவியர்கள் என்று நினைக்கிறேன் – ஐஸ்கிரீம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நாம் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபொழுது இந்த மாதிரி பொறுப்புள்ள அற்புதமான காரியங்களையெல்லாம் செய்யவில்லையே என்று எண்ணினேன்! நான் சாவித்திரியை நோக்கினேன். என் பார்வை எதனால் இப்படி மங்கி விட்டது ? அவள் இதழ்களிலே வற்றாத செல்வமாகத் திகழும் அந்தச் சிரிப்பை இப்போது காணோம். அந்தக் கீழ் இதழ் தான் எப்படித் தளர்ந்து நீண்டு விட்டது? வேலைக் களைப்பாலான விளைவா அது? அல்லது வேறு காரணங்களுண்டா? நடந்தோம்.

பிராட்வே பக்கம் போனாலென்ன என் றல்லவா சாவித்திரி கேட்டாள்? எதற்காக என்று நான் கேட்கவில்லை. அவளுக்குத்தான் இப்பொழுது அதிகாரம், தலைமைப் பதவி எல்லாம்! வெளியில் மட்டுந்



# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

முனையில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை அழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்




...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

தானு. அலுவலகத்திலும் அவள் எனக்குத் தலைவிதான். அவள் தீர்மானம் செய்யட்டும் என்று அவளைப் பின்பற்றி நடந்தேன்.

அவள் என்னை எங்கே அழைத்துக் கொண்டு போகிறாள்? ஏதோ ஒரு வெறியிலே அவள் கையைப் பற்றினேன். அவள் மறுக்கவில்லை. ஆபீஸ் சேவகன் கன்னையிரத்நான் இங்கு இல்லையே ? ஐயோ, பாவம்! உண்மை அறிந்திராத அப்பாவி கன்னையிரம் !

கையைக் கோத்துக் கொண்டு நாங்கள் நடந்தோம். எதிரே வந்த சிலர் — கள்ளம் நிறைந்த கபடிகள் — எங்களைப் பார்த்துச் சிரித்தார்கள் என்று தோன்றியது. ஒரு கண்டல் விற்பவர் எங்கள் எதிரே வந்தார். சாவித்திரி, அவரிடம் ஓரணுவுக்குச் கண்டல் வாங்கிக் கொண்டாள் "பாவம்! மனிதரைப் பார்த்தீர்களா, சோகமே உருவாக இருக்கிறார். அவருக்குப் பொறுப்புக்கள் எத்தனையோ!" என்று அவள் முக பாவம் சொல்லாமல் சொல்லியது.

பிறகு ஒரு பூக்காரன் வந்தான். அவனிடம் ஒரு முழம் மல்லிகை வாங்கினேன். சாவித்திரி முதன் முதலாகச் சிரித்தாள்! அப்பாடா, தெய்வத்துக்கு நன்றி! அக்கம் பக்கத்தில் ஒருவரும் இல்லை என்ற தைரியம் கொண்டு அவள் தலையில் அதைச் சட்டென்று சூட்டினேன்! என்ன கல்நெஞ்சு? ஏன் இப்பொழுது அவள் தன் முக பாவத்தைக் கடுமையாக்கிக் கொள்ள வேண்டும்? ஆனால் அதிலும் ஓர் அழகு இருந்தது ! நீல விளக்கொளியில் அவளுடைய ரோஜா அதரங்கள் கருஞ் சிவப்பாகக் காட்சியளித்தன. அவள் கேசம் ஜொலித்தது. ஆஹா, அந்தக் கழுத்தும் தோள்களும்! அப்படியே அவளை வாரியணைத்துக் கொள்ள வேணும் போல் தோன்றியது எனக்கு! ஆனால்....

"இன்று சார், இங்கே இவ்வளவு நேரத்துக்கப்பாலே ?"

கன்னையிரமா? இல்லை. அவன் எதற்காக இங்கு வருகிறான்? ஒரு போலீஸ்காரர்! நல்ல வேளை, அவர் விட்டு விட்டார். "இல்லை, திரும்புகிறோம்" என்றேன் நான். அது அவர் காதில் பட்டதோ என்னமோ, அவர் கவலை அவருக்கு. 'பெற்றோம் பிழைத்தோம்' என்று கோட்டை ரயில் நிலையத்துக்கு விரைந்தோம். இருவரும் மூன்றாவது வகுப்பில் ஏறினோம். வரும் போது காலையில் சாவித்திரி ஒன்றாவது வகுப்பில்தான் வருவாள், கூட்டத்துக்குப் பயந்து. காலைக் கூட்டத்தில் ஒரு பெண்ணால் மூன்றாவது வகுப்பில் தனியாக ஏறிவிட முடியுமா ? இப்பொழுது அந்தக் கவலையில்லையே? மாம்பலம் வந்த பிறகும் நாங்கள் பேசவில்லை. பாலத்தைக் கடந்து இறங்கி பஸ் டர்மினலையும் கடந்து பர்கிட் ரோட் பக்கம் நடந்தோம். கோடியில்தான் வீடு. கீழேதான் ஒரு பகுதி. வீட்டுக்காரர்கள் மாடியிலிருந்தனர். தொந்தரவு அதிகம் கொடுக்காத நல்ல மனிதர்கள்!

பையிலிருந்து சாவியை எடுத்துப் பூட்டைத் திறந்தாள் சாவித்திரி. களைப்புக் காரணமாக அப்படியே ஊஞ்சலில் உட்கார்ந்தாள். அவளருகே அவளை அணைந்த மாதிரி நான் போய் அமர்ந்து கொண்டேன்.



அவன்: நான் போனால் எத்தனை வீடுகளில் என்னைத் திரும்பத் திரும்ப வரச் சொல்கிறார்கள் தெரியுமா?

நண்பன்: அப்படியா?

அவன் : இல்லாவிட்டால் கேட்ட உடனேயே வரிப் பணத்தை என்னிடம் கொடுத்து விடுவார்களாக்கும்?

- ஏ. கே. கந்தசாமி

திடீரென்று ஊஞ்சலை விட்டு இறங்கிக் கீழே தரையில் அமர்ந்து கொண்டு என் காலிலிருந்து 'ஷூ'வை அவிழ்த்தாள். ஆம், சாவித்திரிக்கு ஒரு குணம். திடீர் திடீரென்று அவளுடைய செய்கைகள் விநோதமாக அமையும்! காலுறையைக் கழற்றிப் பாதங்களை வன்மையாகப் பிடித்து விட்டாள் ! நான் தடுக்கவில்லை. அது எனக்கும் இதமாக இருந்தது. பிறகு எழுந்து நின்றாள். என் கன்னத்தைத் தன் உள்ளங் கையில் தாங்கிக் கொண்டு என்னையே நோக்கினாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது!

"எதற்காக அழுகிறாய் சாவித்திரி?"

அவள் பதில் சொல்லவில்லை. ஒரு பி. ஏ. பட்டதாரி. அதிலும் அக்கௌண்டெண்ட் ஜெனரல் ஆபீஸ் சூப்பிரண்டெண்டெண்ட் ஒருத்தி என் முன் கண்ணீர் விடுவதா?

"வீட்டில் நான் சூப்பிரிண்டெண்டெண்ட் இல்லை. இங்கே நான் சாவித்திரி. அதாவது ஸ்ரீநிவாசன் அவர்களின் வாழ்க்கைத் துணைவி."

எதற்காக இப்படி விநோதமாகத் தன்னை ஞாபகப்படுத்திக் கொள்கிறாள் என்று நான் யோசிக்கவில்லை.

அவள் உடனடியாக என்னைச் சமையலறைக்கு அழைத்துச் சென்றாள். மோரும் சாதமும் மட்டுந்தான் சாப்பிட்டோம். சாப்பிடும்போது பேசவில்லை. காரியங்களை அமைதியாக, ஆனால் வேகமாகச் செய்தாள் !

வெளியே வராந்தாவில் நின்று கொண்டிருந்தேன். முன் பனிக் குளிர் ஆரம்பித்து விட்டது. உடல் சிலிர்த்தது.

அப்பப்பா, சாவித்திரியின் கரந்தான் எவ்வளவு உஷ்ணமாக இருக்கிறது ?

"ஏன் இப்படிச் சுடுகிறது உன் கை?"

"ஜுரக்கும், தெரியாதாக்கும்!"

ஆ, ஆபீஸில் தலைமைப் பதவி வகிக்கும் சாவித்திரியா அவள்? கையை வேகமாக இழுத்துக் கொண்டு வந்து என்னைப் படுக்கையில் தள்ளினாள். சிரித்துக் கொண்டே, "நிம்மதியாகத் தூங்குங்கள் !" என்றாள்.

'நிம்மதியாகத் தூங்குவதா? எப்படி முடியும் சாவித்திரி?' நான் வாயால் கேட்கவில்லை. சாவித்திரி என் கால்களைத் தன் மடியில் எடுத்து வைத்து வருடிக் கொண்டிருந்தாள். இதமாக இருந்தது. ஆனால் அது தூக்கத்தை வருவித்துவிட முடியுமா?

''நான் ராஜிநாமா செய்யப் போகிறேன்.''

அடிக்கடி இது ஒரு பயமுறுத்தல், இது அவளுடைய ஆயுதம்!

''எதற்கு சாவித்திரி? விடுமுறை எடுத்துக் கொண்டால் போகிறது. மெட்டர்னிடி லீவு!''

''போதும்; நான் சம்பாதித்தது போதும்; கிடைக்கும் உங்கள் சம்பளத்திலே நாம் வாழ்ந்தால் போதும். இருநூறு ரூபாயில் தான் எப்படி வாழ்கிறோம் என்று பார்த்து விடுவோமே ?''

''சாவித்திரி! நீ என் சாவித்திரியில்லை? வருகிற லட்சுமியை யாராவது காலால் உதைப்பார்களா ? அப்படியெல்லாம் செய்து விடாதே. போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம்'' என்று நான் குழைந்தேன்.

சாவித்திரியின் வாயிலிருந்து சொற்கள் வெடித்துக் கிளம்பின: ''எதைப் போகப் போகப் பார்க்கப் போகிறீர்கள்? உங்கள் அதிர்ஷ்டத்துக்குத் தகுந்த மாதிரிதான் உங்கள் ரெத்தையும் இருக்கிறது. உங்களுக்கு வெட்கமில்லை ? நீங்கள் எந்த விதத்தில் என்னைவிடக் குறைந்து விட்டீர்கள்?''

''பதற்றப்படாதே, சாவித்திரி. இதெல்லாம் சிலர் தலையிலெழுத்து. பிரமன் எழுதுகிறானே தலையில், அந்த எழுத்துக்கல்லவோ முதற் பரிசு? உண்மையில் சாவித்திரி என்னுடையவள் ஆனளே, அதையுந்தான் பிரம தேவன் எழுதினான் ?''

''போதும், இதை அடிக்கடி உங்களிடம் கேட்டாகி விட்டது. நாம் புதுத் தம்பதிகள் இல்லை. கல்யாணமாகி இரண்டு குழந்தைகள் வேறு இருக்கின்றன.''

''இல்லை, மூன்றுவருக்கும் ஆயத்தம்செய்து கொண்டிருக்கிறோம் என்று சொல்லு....''

''போதும், உங்கள் சொற்களால் இனியும் நான் மயங்கப் போவதில்லை. கையாலாகாதவர் என்றுதான் உங்களை எனக்கு அன்றே தெரியுமே ?''

''என்றே ?''

சொன்னேனே தவிர, சாவித்திரி என் கண்களில் மயங்கிக் கொண்டுதான் இருந்தாள் ! ஒரு விதத்தில் நான் பாக்கியசாலிதான் !

ஆம், பிரமதேவன் எழுத்து எப்படிப் பட்ட எழுத்து? சாவித்திரி மட்டும் நினைத்திருந்தால் அவளுடைய அழகுக்கும் புத்தி சாதுரியத்துக்கும் ஓர் ஐ. ஏ. எஸ். அவளுக்கு மாலையிட்டிருப்பான். அவளுடைய பிடிவாதம் தான் காரணம் ஐ.ஏ.எஸ்.கூடத் தேற முடியாத ஒரு யு.டி.ஸி. அவளுக்குக் கணவனாக வாய்த்தான். ''எதைக் கண்டு நீ இச்சை கொண்டாயடி மகளே?'' — அடிக்கடி நான் என்னையே ஏமாற்றிக் கொள்கிறேனா?

ஊரில் இரண்டு குழந்தைகளை விட்டிருந்தோம். பட்டணத்தில் இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு, பள்ளிக்கூடம் அனுப்பி சம்ரட்சிப்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை என்று நான் சொன்னதைச் சாவித்திரி கஷ்டத்தின் பேரில் ஒப்புக் கொண்டாள். அவளால் குழந்தைகளின் பிரிவைத் தாங்க முடியவில்லை. அடிக்கடி. ''குழந்தைகளை அழைத்து வந்துவிட வேணும், வந்துவிடவேணும்'' என்று தொண தொணத்துக் கொண்டேயிருப்பாள். ஆனால் பணம் வேண்டாமா? சாவித்திரிக்கு இருபத்தைந்து வயதாகிறது. குழந்தைகள் எங்களுக்குப் போதும் என்று மனம் சோர்ந்து இன்றும் நாங்கள் சொல்ல ஆரம்பிக்க வில்லையே ?

**க**ல்யாணம் ஆன புதிதில் —

எங்கள் கல்யாணம் காதல் கல்யாணம் தான்; ஆம், ஊகித்துக் கொண்டிருப்பீர்களே! நாங்கள் நிச்சயித்த பிறகுதான் பெரியோர்கள் நிச்சயித்தார்கள்! ஆனால் அவளிடம் எதற்கும் ஒரு வரம்பு உண்டு. அத்துடன் திடசித்தமும், வைராக்கியமும் அதிகம். உணர்ச்சிவசப்படுபவர்கள் பெண்கள் என்று நான் நினைத்திருந்ததை அவள் பொய்யாக்கி விட்டாள். குடித்தனம் வைத்து, சில நாட்களுக்கெல்லாம் அவள் ஒரு விநோதமான திட்டத்தை வெளியிட்டாள்.

''காலையில் நீங்கள் போய்விட்டால் அப்புறம் நான் சும்மாத்தானே இருக்கிறேன். நானும் ஏதாவது செய்கிறேனே, பணம் வந்தால் நமக்கு நல்லதுதானே. கஷ்டங்களை யாவது சௌகரியமாக அநுபவிக்கலாம்'' என்று அவள் பேசினாள். எதைக் கஷ்டம் என்று அவள் நினைக்கிறாள்?

நான் சேர்ந்து ஒரு வருஷத்துக்கெல்லாம் அவளும் அக்கௌண்டெண்ட் ஜெனரல் ஆபீசில் யு. டி. ஸி.யாகச் சேர்ந்துவிட்டாள். நான் இருந்த ஸெக்ஷனுக்கே அவளும் வந்து சேர்ந்தாள்!

நான் வேலை செய்த பகுதியில் அவள் ஒருத்திதான் பெண். ஆரம்பத்தில் மிகவும் கஷ்டப்பட்டாள். அலுவலகத்துப் பத்ததிகளையெல்லாம் அவளுக்கு நான்தான் கற்றுக் கொடுத்தேன். எளிதில் பிடித்துக் கொண்டாள். ஆனால் ஐந்து மணிக்கு மேல் உட்கார மாட்டாள். எழுந்து விடுவாள். நான் மட்டும் எப்படி உட்கார்ந்திருப்பது?

காரணம் என்னால் சொல்ல முடியாது. ஏன் அதை வெகுநாட்கள் மறைத்தோம் என்று இப்பொழுது கூறுவதற்கில்லை. சாவித்திரிக்கு நான் கணவன் என்ற விவரம் அலுவலகத்தில் ஒருவருக்குமே தெரியாது. கொடியில் திருமாங்கல்யத்தைக் கோத்துக் கொண்டு அணிந்து கொண்டிருக்கவில்லை அவள். முதுகைப் போர்த்தி, கழுத்தை மறைத்து நிற்கும் அந்தச் சேலைத் தலைப்புத் தான் நகருவதேயில்லையே! பின் திருமாங்கல்யச் சரடை யார் காண முடியும்?

''பி. ஏ. படித்த பெண்ணாயிருந்தும் பத்தாம் பசலியாயிருக்கிறாயே?''

பயமுறுத்தினாள் அவள். மடிசார் வைத்துக் கட்டிக் கொண்டு அவள் அலுவலகம் வருவதாம்! எப்படியிருக்கிறது? அவளைக் கெஞ்சிக் கூத்தாடினேன். ''அப்புறம் உன்னைப் பாட்டி என்று எல்லாரும் சொல்வார்கள்.''

''உங்களை என் பேரர் என்று சொல்லிக் கொள்கிறேன்!''

''பார், நாம் இப்பொழுது எவ்வளவு சிக்கனமாக இருக்க வேண்டுமோ, அவ்வளவுக்கவ்வளவு நல்லது! ஆறு கஜம் புடவை மலிவு இல்லையா? என்ன சொல்லுகிறாய்?''

அவள் சிரித்தாள்.

"உங்களை நான் என்ன செய்தால் என்ன?"

"என்ன வேண்டுமானாலும் செய்யலாம்; கல்யாணமே செய்து கொண்டிருக்கிறீரே?" என்றேன் நான்.

மீண்டும் சிரித்தாள் அவள்.

**கா**லையில் மின்சார வண்டியிலிருந்து இறங்குவதைத்தான் பலர் பார்த்திருக்கிறார்கள். அவளோ முதல் வகுப்பில் வருவாள். இருவரும் தனித் தனியாகத்தான் இறங்குவோம். பாலம் ஏறும் பொழுதுதான் ஒன்று சேர்வோம். அதனால் பலர் எங்கள் உறவைப் பலபடியாகக் கற்பனை செய்தார்கள். அதைப் பற்றி நான் கவலைப்படாமல் உற்சாகப்பட்டேன். ஆனால் அவள் கவலைப்பட்டாள்.

ஏனென்றால், பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. உண்மையில் பரீட்சைக்குப் பேர் கேட்ட பொழுது, அவளுக்கு நம்பிக்கையே இல்லை. "நான் ரொம்ப ஜூனியர்; என்னை எங்கே எடுக்கப் போகிறீர்கள்?" என்று முதலில் நினைத்தாள். ஆனால் அவளுக்கு அதி உத்தமமான ரிப்போர்ட். அதனால் எளிதில் கிடைத்து விட்டது. எஸ். ஏ. எஸ். பரீட்சைக்கு உட்காருவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தாலே ஒரு கண்டம் தப்பின மாதிரி தானே?

மும்முரமாகப் படிக்க ஆரம்பித்தோம். சாவித்திரியிடம் ஒரு குணம். ஒரு காரியத்தை எடுத்தால் சிம்மந்தான். அதைச் செய்து முடிக்கும் வரை விடமாட்டாள். அதில் எனக்கு நேர் எதிரிடையானவள். எனக்கு இரவு ஒன்பதரை மணிக்கெல்லாம் தூக்கம் கண்ணைச் சுழற்றிக் கொண்டு வந்துவிடும். அவளுக்கு அப்படியில்லை. வைராக்கியம் அதிகம். என்னைக் கேள்விகள் கேட்பாள். தெரிந்ததைச் சொல்வேன். "ஜனஹாம் தவறு. அதற்கு ஒரு திருத்தம் வந்திருக்கிறது" என்பாள். "இதோ பாருங்கள், தூக்கம் கலைவதற்கு ஒரு வழி சொல்லுகிறேன். இந்தத் திருத்தங்களையெல்லாம் இந்தப் புத்தகத்தில் ஒட்டுங்கள்; இந்தாருங்கள். கோந்து பாட்டில்" என்பாள்.

**ப**ரீட்சை எழுதி விட்டோம். முடிவும் வந்தது. ஓரளவுக்கு நல்ல முடிவுதான். ஆம், சாவித்திரி வெற்றிபெற்று விட்டாள்! ஆபீஸில் எனக்கே சூப்பிரண்டெண்டாகவும் நியமிக்கப்பட்டாள்! ஆம் இனி அவள் பார்த்துத்தான் நான் எழுதுபவையெல்லாம் உள்ளே அதிகாரி அறைக்குச் செல்லும்! என் முடிவு என்ன ஆயிற்று என்று கேட்கிறீர்களா? இன்னுமா நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை?

என்னிடம் மூன்று நாட்கள் சாவித்திரி பேசவில்லை. யந்திரம் மாதிரி காரியங்களைச் செய்தாள். வெற்றி எனக்குக் கிடைக்காததில் நான் ஒன்றும் ஆயாசப்பட்டுவிடவில்லை.

மூன்றும் நாள் இரவு சாப்பிட்டுக்கொண்டிருக்கும் பொழுது ரசம் வார்த்துக் கொண்டிருந்த அவள் கரத்தைப் பிடித்தேன். "சாவித்திரி, என் மேல் கோபமா?" அந்த



"என் மனைவியை உங்க மனைவியிடம் பயிற்சி பெற அனுப்பட்டுமா?"
"என்ன சமாசாரம்?"
"பக்கத்துப் போர்ஷன்காரர்களிடம் தைரியமாகப் பேசிக் கடன் வாங்கத் தெரியல்லே!"

நிலையில் அந்தக் கேள்வி பாந்தமில்லாத கேள்வி என்று எனக்குத் தெரியும். ஆனால் எப்படித்தான் அவளிடம் பேச்சைத் தொடங்குவது? அதைவிடச் சிறந்ததாக எனக்கு வேறு உபாயம் தெரியவில்லையே?

அவள் மௌனமாகப் பரிமாறினாள். "உழைப்புக்கு ஏற்றபடிதானே கூலியும் கிடைக்கும். நீ நன்றாகப் படித்தாய்; பாடுபட்டாய்; பாஸ் செய்தாய். அதை நான் செய்யவில்லை. அவ்வளவுதானே, இதற்காக வருத்தப்பட்டு என்ன செய்வது?" என்றேன் நான். அவள் பேசவேயில்லை.

மறு நாள் அலுவலகம் போகும் போது கூட நாங்கள் மௌனமாகத்தான் இருந்தோம். மத்தியானம் இடைவேளையில் செய்தியைக் கண்ணாயிரம் சொன்னபோது திடுக்கிட்டுப் போனேன்!

"இன்று சார், அம்மா ராஜிநாமா பண்றாங்களாமே. உங்களுக்கு இனிமே துணை கிடையாது" என்றான் அவன். அவன் வார்த்தைகளில் கல்மஷம் இருந்ததா? அதுவா அப்பொழுது என் கவலை? அப்பொழுதாவது, "சாவித்திரி, என்னுடைய மனைவி" என்று நான் சொல்லியிருக்கலாம். ஆனால் சொல்லவில்லை. காரணம்?

அது போகட்டும். சாவித்திரி ராஜிநாமா செய்கிறாளா? ஏன், எதற்காக?

அதிகாரி டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். இருந்தும் உள்ளே ஓடினேன். "சார், மன்னிக்க வேண்டும்."

"என்ன சமாசாரம்?"

"சார், ஸ்ரீமதி சாவித்திரிதேவி ராஜிநாமா செய்கிறார்களாமே?"

"ஆமாம்; அதைப் பற்றி உமக்கென்ன?"

"அதை ஒப்புக் கொள்ளக் கூடாது சார்?"

"என்னய்யா இது, வந்து ரகளை பண்றீர்; ஒரு கௌரவ குடும்பத்துப் பெண்ணின் வாழ்வில் குறுக்கிடுகிறீர். மேலும் நான் என்ன செய்ய வேண்டும் என்பதை நீர்தான் எனக்குச் சொல்லித் தர வேண்டுமா ?"

"அப்படியில்லை சார். உங்களுக்குச் சொல்லித் தர எனக்கு உரிமை கிடையாது சார். ஆனால் அவள் இன்னதுதான் செய்ய வேண்டும் என்று சொல்ல மட்டும் எனக்கு உரிமை உண்டு!"

"என்னய்யா, உளறுகிறீர்? உரிமை கொண்டாடுவதற்கு உமக்கு என்ன உரிமை?"

"இருக்கிறது சார்."

"...... ............ .........."

"அவள் என் மனைவி சார்!"

"ஆ!" என்று வாயைப் பிளந்தாரே தவிர எடுத்த இட்டிலித் துண்டை வாயிலே போடவில்லை. அவர் முகத்திலிருந்த ஆச்சரியக் குறி விலகுவதற்கு நீண்ட நேரம் ஆயிற்று. சாங்கோபாங்கமாய் நான் சொன்னதை அவர் கவனமாகக் கேட்டார். வளர்த்துவானேன்? முத்து முத்தாக எழுதப்பட்டிருந்த சாவித்திரியின் ராஜிநாமாக் கடிதத்தை என் பையில் திணித்துக் கொண்டு 'செக்ஷனுக்கு' வந்தேன்.

வீடு வந்தவுடன் அன்று முதன்முதலாகப் பேசினாள்: "நான் ராஜிநாமா செய்துவிட்டேன், தெரியுமோ?"

"ஏன்?"

"வருகிற தொகையில் இருவரும் கூழோ கஞ்சியோ குடித்தால் போதும்; நான் உங்கள் சம்பளத்தில் வாழ விரும்புகிறேன்."

"நாம் நம் சம்பளத்தில்தானே வாழ்கிறோம்? திருடவில்லை, பொய் சொல்லவில்லை. உண்மையாக உழைத்துத்தானே சம்பாதிக்கிறோம்?"

"நீங்கள் என்ன வேணுமானாலும் சொல்லுங்கள்; நாளை என் ராஜிநாமாக் கடிதம் ஏற்றுக் கொள்ளப்பட்டு விடும்!"

"ஏற்றுக் கொள்ளப்படாது!"

"ஏனாம், நீங்கள்தான் ஏற்றுக் கொள்ளப் போகிற அதிகாரியா?"

"இதோ பார்!"

அவளுடைய ராஜிநாமாக் கடிதத்தை வெளியே எடுத்தேன். "சாவித்திரி, கோபித்துக் கொள்ளாதே; இன்னும் கொஞ்ச நாட்கள்தாம். அடுத்த தடவை நான் நிச்சயம் தேறிவிடுவேன். அதுவரை நீ உத்தியோகத்தில் இரு. இது என் வேண்டுகோள்" என்றேன்.

ஆனால் —

நான் சொன்னபடி நடக்கவில்லையே ? அடுத்த தடவையும் எனக்குத் தோல்வி ஏற்பட்டு விட்டதே? சைனபஜாரையும் கடற்கரையையும் என்னுடன் மனம் வெறுத்துப் போய்த்தான் சுற்றினாள் என்று நான் எண்ணினேன். நடுவில் பூச்சரம் ஒன்றை அவளுடைய கேசத்தில் வாங்கி வைத்தேனே, அப்பொழுதும்கூட அவளுடைய ஏமாற்றத்தை என்னால் அகற்ற முடியவில்லையே? வீடு வந்தவுடன் மீண்டும் ராஜிநாமாப் பிரச்னை எழுந்து விடுமே? அவளுடைய மனத்தை மாற்றி எப்படிப் பணிய வைப்பது? பிரமதேவன் என் தலையெழுத்தை மாற்றி அமைத்தாலொழிய அவளுடைய மனத்தை மாற்றுவது சாத்தியமில்லையே ?

இந்த நிலையில்தான், வயதானால்கூடப் பாதகமில்லை, சர்க்கார் ஊழியர்களும் எழுதலாம் என்று விசேஷ ஐ. ஏ. எஸ். பரீட்சையைப் பற்றிய அறிக்கை வந்தது. அதைப் பார்த்தவுடன் துள்ளிக் குதித்தாள் சாவித்திரி.

"ஆம், உனக்கு வைராக்கியம் அதிகம். அதற்கும் உட்கார்ந்துவிடு!" என்றேன்.

"ஆமாம், இப்போது நான் சூப்பரின்டெண்டாக இருந்து உங்களை வேலை ஏவுவது போதாது என்று அதிகாரியாகி விரட்ட வேண்டுமா என்ன? வெட்கமில்லை உங்களுக்கு?"

இதுவரை சாவித்திரி இவ்வளவு உரத்துப் பேசி நான் கேட்டதில்லை. ஆனால் அவளுடைய உணர்ச்சிக்குத் தடை போட விரும்பினேன். "வீட்டிலும் நீதான் அதிகாரி. அதுதான் எனக்குப் பிடிக்கிறது" என்று சொல்லிச் சிரித்தேன் நான்.

" 'எனக்குப் பிடிக்கிறது, எனக்குப் பிடிக்கிறது' என்று உங்களுக்குப் பிடித்ததையே செய்து கொண்டிருக்கிறீர்களே, எனக்குப் பிடித்தது என்று இந்த வீட்டில் ஒன்றுமே கிடையாதா?"

சாவித்திரி உண்மைதான் சொன்னாள்.

அடுப்பை மெழுகிச் சமையல் பண்ணிக் கணவனுக்குப் போட்டு அவனை நிம்மதியாக வைத்திருக்க வேண்டும். அவ்வளவுதான் அவள் வேண்டுவது. அவள் ஆசை எனக்குத் தெரியாது என்பதல்ல. அதற்கு அவள் பி. ஏ. வரை படித்திருக்க வேண்டாமே ?

அவள் பேசினாள். "உங்களைக் கல்யாணம் செய்து கொண்டேன். கல்யாணம் செய்து கொள்வதற்குப் பி. ஏ. வரை படித்திருக்க வேண்டாமே; இப்படி யெல்லாமா உங்கள் வாதம் போக வேண்டும்?" என்றாள். நான் மௌனமானேன்.

கடைசியில் அவள் ராஜிநாமா செய்தே விட்டாள்! அலுவலகப் பரீட்சைக்குப் படிக்க முடியாதவனை ஐ. ஏ. எஸ். படிக்க வைத்து விட்டாள். பார்க்கப்போனால் அவளும் என்னோடு ஐ. ஏ. எஸ்.ஸுக்குப் படித்தாள் என்றே சொல்ல வேண்டும். உண்மையில் எனக்காக அவள் எவ்வளவு உழைத்தாள், எவ்வளவு குறிப்புகள் சேகரித்தாள் என்பது முடிவு தெரிந்தபிறகுதான் புரிந்தது.

"பார்த்தீர்களா? ராஜிநாமா செய்யாதிருந்தால் இதெல்லாம் சாத்தியமாகுமா?"

முடிவு என்ன என்று கேட்கத்தானே ஆசைப்படுகிறீர்கள்? கையாலாகாதவனை வைராக்கிய சித்தனாக்கிய பெருமை என் அருமை வாழ்க்கைத் துணைவியுடையதுதான். என் வெற்றி அவள் வெற்றிதான். ஆம்! பிரமன் தலையெழுத்து அப்படி மாறிற்று! யமனை வெற்றி கொண்ட புராண காலத்துச் சாவித்திரியின் சாதனை ஒருபுறம் இருக்கட்டும். ஆனால் என் சாவித்திரி அதைக் கொண்டாடிய விதம்தான் விநோதமாக அமைந்தது. அறு கஜச் சேலையிலிருந்து ஒன்பது கஜத்துக்கு மாறிவிட்டாளே?

ஆம் இனி சிக்கனம் எதற்கு?







# அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

## தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்- அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள்!



இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*... வளர்ச்சிக்கு மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

Lederle லெடர்லி* டிவிஷன், ஸயனமிட் இந்தியா லிமிடெட்

CYCL-34 TAH

# தில்லியில் ராஜாஜி

சில புஷ்பங்கள் பூத்த சிறிது நேரம் வரை தான் மணம் கமழும். பிறகு வாடிவிடும். வாடினால் நாற்றம்தான்! மல்லிகை எவ்வளவுமணம்! ஆனால் சிறிது நேரத்தில் வாடிவிடும்! ரோஜாவும் அப்படித்தான்.

ஆனால் மகிழம்பூ அப்படியா? நாளாக ஆக அதன் மணம் அதிகரிக்கும்.

சென்ற மாதம் தில்லியில் நடைபெற்ற அகில இந்திய சுதந்திரக் கட்சி மகாநாட்டைப் பற்றிய நினைவுகளும், நாளாக நாளாக மகிழம்பூ போல மனத்தில் மணம் கமழ்ந்து கொண்டே யிருக்கின்றன.

இந்த மகாநாடு எப்பொழுதோ பல மாதங்களுக்குமுன் நடந்திருக்க வேண்டியது. பல்வேறு காரணங்களால் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்து டிசம்பர் மாதத்தில் தில்லியில் நடத்துவது என்று தீர்மானித்தனர். தீர்மானித்த சிறிது நாட்களிலேயே ராஜாஜிக்கு உடல் நலம் குறைந்தது. திருமலானி அவர்கள் சென்னைக்கு வந்து 'டிசம்பரில் தில்லி குளிராக இருக்கும். மகாநாட்டை நடத்தும் இடத்தை வேண்டுமானால் மாற்றலாமா?' என்றுகேட்டார் ராஜாஜியை. பிடிவாதமாகத் 'தில்லி என்பதை மாற்றக் கூடாது; நாம் டிசம்பரில் தில்லிக்கு வரும் அளவுக்குச் சக்தி பெற்றுவிடக் கூடும்' என்று உறுதியாகச் சொன்னார் ராஜாஜி. டாக்டர்களும் நம்பிக்கையூட்டினர். அதே போல் ராஜாஜி மகாநாட்டில் பங்கெடுத்துக்கொண்டு வெற்றிகரமாக நடத்திக் கொடுத்தார்.

சுதந்திரக் கட்சியின் மேலிடத்தார் இந்த மகாநாட்டைப் பெருவிழாவாகக் கொண்டாட விரும்பவில்லை. தேர்தல் விஞ்ஞாபனம் பற்றியும், இன்னும் சில நிர்வாக விஷயங்கள் பற்றியும் சில முடிவுகள் எடுக்க வேண்டிய பணிகள் இருந்ததால், இம்மகாநாட்டை முழுக்க முழுக்கக் காரியக் கமிட்டிக் கூட்டம் போல்நடத்தத்தான் திட்டமிட்டிருந்தார்கள். அதனால்தான் சுதந்திரக்கட்சி அங்கத்தினர்களுக்கு அனுப்பிய தகவல்களில் 'தில்லியில் குளிர் அதிகமாக இருக்கும். ஹோட்டல்களில் இடம் கிடைப்பது கஷ்டமாக இருக்கலாம்' என்று மகாநாட்டுக்கு வர விரும்புவோரின் உற்சாகத்தைக் குறைக்க எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவும் செய்தார்கள். தேச மக்கள் இதற்கெல்லாம் பயந்துவிடுவதாக இல்லை. கன்னியாகுமரியிலிருந்து ஹிமாசலப் பிரதேசம் வரை தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஏராளமான பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். வந்தது மட்டுமின்றி விவாதங்களில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டு உருப்படியான பல தீர்மானங்களும் செய்திருக்கிறார்கள். அத்துடன் தில்லிக் குளிரைத் தாங்க முடியாதோ என்று கருதிய இந்த அங்கத்தினர்கள் தில்லி ஆட்சி பீடத்திலுள்ள காங்கிரஸ்காரர்களுக்கு உண்மையிலேயே குளிர் நடுக்கம் உண்டாக்கி விட்டுத் திரும்பியிருக்கிறார்கள்.

''நான் சுபாவத்திலேயே மந்த புத்தியானேன் அல்லது வயதின் காரணமாக அப்படியாகி விட்டேனோ தெரியவில்லை'' என்று ராஜாஜி தமது மகாநாட்டுத் தொடக்க உரையில் கூறியபோது, மகாநாட்டில் ஓர் இனம் தெரியாத நிசப்தம் நிலவியது. அவ்வாக்கியத்தைத் தொடர்ந்து, ''கோவாவில் தேர்தல் நடக்கவிருக்கிறது என்ற காரணத்தால் மந்திரி சபையைக் கலைத்து விட்டு ஜனாதிபதி ஆட்சியை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இதைச் செய்தவர்கள் இதே போன்ற சூழ்நிலைதான் தேசத்தில் தேர்தல் நடக்கும்போது ஏற்படக் கூடும்; அதனால் தில்லியிலும் ராஜ்யங்களிலும் மந்திரி சபைகளையும் சட்ட சபைகளையும் கலைத்து விட்டு ஜனாதிபதி ஆட்சி ஏற்படுத்துங்கள் என்று நாம் கோரி வருவதைப் பிடிவாதமாக மறுத்து வரும் காரணத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை!'' என்று சொன்னபோது சபையில் பலமான கரகோஷமும் பெருமூச்சும் எழுந்தன. மகாநாட்டுத் துவக்க உரையாக ராஜாஜி பத்து நிமிஷங்கள்தான் பேசியிருப்பார் — இல்லை— எழுதிப் படித்தார். அந்தப் பத்து நிமிஷமும் எவ்வளவோ விலை மதிக்கவொண்ணாத நேரம் என்று பெருமிதத்தோடு போற்றினர்.

''என்வரை இந்தப் போராட்டத்தை, ஒரு தார்மீகப் போராட்டமாகவே கருதுகிறேன்— கட்சி அரசியலாக அல்ல. மனித மன அபிலாஷைகளை அரசாங்கத்துக்கு அடிமையாக்குவது, அரசாங்கத்தின் உத்தரவுப்படி மனிதன் இயங்க வேண்டும் என்ற நிலையை ஏற்படுத்துவது மிகவும் அபாயகரமானது!'' என்று கடுமையான எச்சரிக்கை செய்தார். அத்துடன், ''நம் போராட்டம் காந்திஜி வகுத்த பணியைத் தொடர்ந்துசெய்வதாகும். அதனால் போராட்டத்தில் தோல்வியோ, இடையூறுகளோ ஏற்பட்டால் நாம் மனம் தளர்ந்து போய் விடக் கூடாது!'' என்று சோர்ந்து போகும் உள்ளங்களுக்கு அமிருத வர்ஷம் பொழிந்தாற்போல் ஊக்கமூட்டினார்.

மறுநாள் 13ந் தேதி சுதந்திரக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனம் பல திருத்தங்களுடனும், பல காரசாரமான விவாதங்களுக்குப் பின்பும் அங்கீகரிக்கப்பட்டது.

இதில் திருத்தங்கள் பலவற்றைப் பிரேரித்தவர் ராஜாஜியேதான்! அவற்றில் பலவற்றை ஏற்ற அங்கத்தினர்கள் சிலவற்றை ஏற்கவில்லை.

இதிலிருந்து சுதந்திரக் கட்சியில் எத்தகைய ஜனநாயகப் பண்பு நிலவுகிறது என்பதைக் காண முடிந்தது.

சுதந்திரக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனத்தின் முன்னுரையில்: ''தென் கிழக்கு ஆசியாவின் பாதுகாப்பு சம்பந்தமாக (அரசாங்கம்) எவ்வித கவனமும் செலுத்தவில்லை. இப் பாதுகாப்பு உடன்படிக்கை சீனா, பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக்கு எதிராக விளங்கக் கூடியதாகும். இதில் ஒரு சிறிதும் கவனம் செலுத்தவில்லை'' என்றிருந்தது. இதில் வரும் ''சீனா, பாகிஸ்தான் என்ற வார்த்தைகளை எடுத்துவிட்டு, அவற்றுக்குப் பதிலாக, 'பேராசையும், பெருங்கோபமும்

கொண்ட அண்டை நாடுகள்' என்ற வார்த்தைகளை அமைக்க வேண்டும்'' என்று திருத்தம் பிரேரித்திருந்தார் ராஜாஜி.

சீனு ஒருகால் நிரந்தர விரோதியாக இருந்தாலும், நேற்றுவரை நம்முடன் இருந்த பாகிஸ்தானிடம் நேச பாவத்துடனும், நல்ல ராஜதந்திரத்துடனும் அரசாங்கத்தார் நெருங்கினால் பாகிஸ்தானின் பகைமை நீங்கி நட்பு வளரலாம் என்ற நம்பிக்கை ராஜாஜிக்கு இருப்பதால் எதிரி நாடுகளைப் பெயரிட்டுக் குறிப்பிடாமல் பொதுவாகக் குறிப்பிடலாம் என்பது அவர் கருத்து.

ஆனால் திரு டாண்டேகர் அவர்கள் ''பொதுவாக 'அண்டை நாடுகள்' என்று குறிப்பிட்டால் இப்போது நம்முடன் நேசமாக இருக்கும் பர்மா, இலங்கை போன்ற நாடுகளை நாம் விரோதி நாடுகள் என்று குறிப்பிடுவதாகத் தோன்றும். இந்தக் குழப்பத்துக்கு வழி இல்லாமல் இன்று நம்முடன் விரோதமாக உள்ள நாடுகளின் பெயர்களைக் குறிப்பிடுவதே மேல்'' என்றார். ராஜாஜி, திரு டாண்டேகரின் ஆட்சேபத்தை ஏற்றுத் தமது திருத்தத்தை வாபஸ் பெற்றுக் கொண்டார்.

ராஜாஜியின் இன்னொரு தோல்வியைப் பற்றியும் இங்கு குறிப்பிட வேண்டும்.

''சுதந்திரக் கட்சிக்கு வோட்டளித்துக் குறைந்தபட்சம் நூறு சுதந்திரா எம்.பி.க்களையாவது மக்கள் சபைக்கு வரும் பிப்ரவரியில் அனுப்புங்கள். நாங்கள் காங்கிரஸ் ராஜ் (ஆட்சி)யின் முடிவையும், புதிய கொள்கை கொண்ட புது அரசாங்கத்தையும் அளிக்க உறுதி கூறுகிறோம்'' என்று கூறுகிறது சுதந்திரக் கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனம்.

இதில், ''காங்கிரஸ் ராஜ்'' என்பதற்குப் பதில், '' 'பர்மிட் லைசென்ஸ் கோட்டாராஜ்' என்று திருத்த வேண்டும்'' என்றார் ராஜாஜி.

இதற்குத் திரு மஸானி ஆட்சேபம் தெரிவித்தார். ''வேண்டுமானால், 'காங்கிரஸின் தவறான ஆட்சி' என்று ஏற்றுக் கொள்ளலாமே தவிர காங்கிரஸ் என்ற வார்த்தையை அகற்றக்கூடாது'' என்று வாதாடினார். ''சுதந்திரக் கட்சி பெர்மிட் லைசென்ஸ் கோட்டா ஆட்சியை ஒழிப்பதில் அக்கறை கொண்டிருப்பது மட்டுமல்ல, இன்று ஆட்சி செலுத்துவோரின் எல்லாக் கொள்கைகளிலும் முற்றும் மாறுபட்ட ஆட்சியை ஏற்படுத்துவதிலும் அக்கறை கொண்டிருக்கிறது'' என்றார்.

இதற்கும் ராஜாஜி உடன்பட்டுத் தம் திருத்தத்தை வாபஸ் பெற்றுக் கொண்டார்.

இன்னும் பல ரஸமான திருத்தங்கள் வந்தன. சில ஏற்றுக்கொள்ளப்பட்டன; சில நிராகரிக்கப்பட்டன.

பம்பாய் விரேன்ஷா அவர்கள் திட்டக் கமிஷன் பற்றிய தீர்மானத்தின் மீது ஒரு திருத்தம் கொண்டு வந்தார். அதாவது சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கையில், ''திட்டக் கமிஷனைக் கலைத்துவிட்டு, அபாயகரமான நான்காவது திட்டத்தைக் கைவிடுங்கள்!'' என்றிருக்கிறது. இப்படியிருந்தால், சுதந்திரக் கட்சி எவ்வித திட்டத்துக்கும் இணங்காதோ என்ற எண்ணம் ஏற்படக்கூடும். ஆகவே அதைப் பின்வருமாறு மாற்ற வேண்டும் என்றார். ''திட்டக் கமிஷனைக் கலைத்து, அதற்குப் பதில் நிபுணர்கள் குழுக்கள் அமைத்து, இப்பொழுதுள்ள அபாயகரமான நான்காவது திட்டத்தைக் கைவிட வேண்டும்'' என்று பிரேரேபித்தார். இது சம்பந்தமாகக் காரசாரமான விவாதம் நடந்தது. கடைசியில் இருக்கிறபடியே இருக்கட்டும் என்று முடிவு செய்யப்பட்டது. திரு மஸானி ''திட்டக் கமிஷன் அங்கத்தினர்களே திட்டக் கமிஷனைக் கலைக்க வேண்டும் என்று சொன்னார்கள். திரு அசோக்மேத்தா அப்படிச் செய்தால் காங்கிரஸுக்குப் பெரும் அவமானமாகப் போகும் என்று எடுத்துக் காட்டியபின்தான் கலைக்கும் திட்டம் கைவிடப்பட்டது. இப்படிக் காங்கிரஸ்காரர்களே திட்டக் கமிஷனைக் கலைக்க வேண்டும் என்று சொல்லும் போது நாம் கூடாது என்று சொல்வதும், அப்படிப் பொருள்படும்படி திருத்துவதும் சரியல்ல'' என்று வாதித்தார். திருத்தம் கைவிடப்பட்டது.

இப்படிப் பல விஷயங்கள் பற்றிப் பல ரஸமான சர்ச்சைகளில் தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்திருந்த அங்கத்தினர்கள் பங்கு எடுத்துக் கொண்டார்கள். இதை நான் முழுவதும் கண்ட யாருக்குமே சுதந்திரக்கட்சி நன்கு வளர்ந்து வேரூன்றி விட்டது என்ற திருப்தி ஏற்பட்டிருக்கும். ராஜாஜிக்கும் ஏற்பட்டதில் வியப்பில்லையல்லவா ?

ஆனால் ராஜாஜியின் இயல்பு, எப்பொழுதும் சற்று எதிர்காலத்தைப் பார்ப்பதேயல்லவா ! சுதந்திரக் கட்சியின் பெருவளர்ச்சியைக் கண்ட திருப்தியில் தம்மை இழந்துவிடாமல் ஓர் எச்சரிக்கையே செய்தார்.

''நண்பர்களே, நீங்கள் காங்கிரஸிடமிருந்து ஒரு பாடம் தெரிந்து கொள்ளுங்கள். ஒரு காலத்தில் காங்கிரஸ் எவ்வளவு மகோன்னத நிலையிலிருந்தது. அது இன்று எவ்வளவு தாழ்ந்து சரிந்து கிடக்கிறது. அது சத்தியத்தையும் தர்மத்தையும் யோக்கியமான நடத்தையையும் கைவிட்டது. அதனால் அதற்கு இந்த இழிநிலை ஏற்பட்டது. யோக்கியமாக இருங்கள். உங்கள் நேர்மைப் பண்பைக் காப்பாற்றி வாருங்கள். மக்கள் உங்களுக்கு ஆதரவு நல்குவார்கள்.''

மறு நாள் பல பத்திரிகைகள் சுதந்திரக் கட்சி மகாநாட்டைப் பெருவாரியாகப் புகழ்ந்து பாராட்டி எழுதியிருந்தன.

கிழவர்களின் கட்சி, பணக்காரர்களின் கட்சி, பத்தாம்பசலிக் கொள்கை என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள் எல்லாம், இன்று நாட்டில் நேர்மையான ஆட்சி நல்கக்கூடிய கட்சி ஒன்று உண்டெனில் அது சுதந்திரக் கட்சிதான்; பொருளாதாரத்தில் காங்கிரஸ் செய்த அட்டூழியத்தை ஒழுங்கு படுத்தக்கூடிய கட்சி உண்டெனில் அது அகில இந்தியக் கட்சியான சுதந்திரக் கட்சி தான் என்று எங்கும் பேசுகிறார்கள்!

ராஜாஜி, ரங்கா, மஸானி போன்றோரின் ஏழு வருஷ கால இடைவிடா முயற்சி, இன்று உலகம் பாராட்டும் கட்சியாகச் சுதந்திரக் கட்சி வளர்ந்துவிட்டது. நீலவானில் நீலத் துகிலில் நட்சத்திரக் கொடி கம்பீரமாக வெற்றிப் பெருமிதத்துடன் பறக்கிறது !

— எஸ். வி. எஸ்

# பொங்கலுக்கு விசேஷ தள்ளுபடி

# 10%

# கோ-ஆப்டெக்ஸ்

## கைத்தறித் துணி விற்பனையில்

## 3–1–67 முதல் 16–1–67 வரை

இந்த தள்ளுபடி எல்லா "கோ-ஆப்டெக்ஸ்"
விற்பனை நிலையங்களிலும், பிரதம நெசவாளர்
கூட்டுறவு சங்கங்களிலும் கிடைக்கும்.

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்.
எழும்பூர், சென்னை-8



ELEGANT




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி. அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர். 10031, பம்பாய்.




**COUPON** K-6

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ........................................

*Address* ........................................

........................................

# கடல்தாய்

கருநீலப் பட்டாடை தன்னில் முத்தைக்
காலத்தின் மூத்தமகள் கவினாய்க் கோர்த்தே
ஒருஞாலம் தனைவளைக்கும் கடலாம் தாயின்
உடல்மறைக்கப் போர்த்தினளோ? அவ்வண் ணந்தான்
வருநீர்கொள் கடல்தாயுள் கரைந்தே அன்னாள்
வடிவத்துள் கலந்ததுவோ? கலந்த நட்பில்
திருநீலக் காட்சிதனை உலகுக் கீந்து
தனித்தெய்வ மாய்த்தரணி காக்கின் றாளோ?

அவ்வழகு நீலப்பட் டாடைச் சாயம்
ஆழ்நீரின் பரப்பனைத்தும் கலந்த போது
ஒவ்வாது உதிர்ந்தோடும் முத்துத் தாமோ
ஓங்கார அலைமேவு வெண்ணுரைகள்!
தெவ்வரென நிலமகளைச் சிந்தை எண்ணித்
தினம் அலையால் படையெடுக்கின் றாளோ? அன்றிக்
கொவ்வையிதழ் மங்கையெனத் தனைநினைத்துக்
கொடுத்தாளோ முத்தங்கள்! குமரன் மண்ணில்

மேலமுழக் கோசைஇசை வென்று கொட்டி
மிளிர்கின்ற அலைக்கரத்தாள் ஆர்க்கின் றாள்; தன்
நீலங்கொள் வண்ணத்தைக் காய்ச்சும் செவ்வான்
நெருப்பாகக் கதிரவனும் தோன்றும் போது
காலம்வெல் கூத்தையெலாம் நாட்டி இன்பக்
கட்டழகை விரிக்கின்றாள்: ஆ! ஆ! அந்தக்
கோலத்தில் விண்தொட்டு வளைவாய் ஓடிக்
கூத்தாடி விளையாடி மயக்கு கின்றாள்!

கடலைத்தாய் என்றால்வான் தந்தை ஆகும்
கலந்தொன்றாய் இருபேரும் காதல் பேசி
உடலோடு உடலிணைந்தால்; இடியும் மின்னும்
உதவிபுரி காற்றென்னும் தோழி யோடு
அடலேறாய் ஆர்த்துக்காண்! அந்தப் போதில்
ஆழியொடு கூடிவரும் இன்ப நிரை
நடம் செய்யும் இயற்கைமகள் சிரிக்கப் பெய்தாள்
நானிலத்தின் வளம்உய்தல் அதனால் அன்றோ?

கவிஞர் வா. மு. சேதுராமன்



## மேதை அறியாதது!

விஞ்ஞான மேதை ஐன்ஸ்டீன் ஒரு சமயம் அமெரிக்கா சென்றிருந்தபோது, 'ஒலியின் வேகமென்ன' என்று ஒருவர் அவரைக் கேட்டார்.

அதற்கு ஐன்ஸ்டீன் அளித்த விடை:

"எனக்குத் தெரியாது. கலைக்களஞ்சியம் ஒன்றை எடுத்துப் பார்த்தால் எளிதில் தெரியக் கூடியது இது. இத்தகைய குறிப்புகளைத் திணித்து என் நினைவை நான் குழப்பிக் கொள்வதில்லை!"

—'மாயூரம் ராஜு'

## அரசியல் கிரிக்கெட் வர்ணனை!

இந்த 'சீஸ'னில் எந்த வீட்டில் நுழைந்தாலும், ரேடியோவிலிருந்து வரும் கிரிக்கெட் வர்ணனை காதைத் துளைக்கிறது. சமீபத்தில் வெளியான சில செய்திகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றை ஒரு 'கிரிக்கெட் விமரிசக'ரிடம் ('காமண்டரி' சொல்பவர்) கொடுத்தால் அவர் இச்செய்திகளை எப்படி விமரிசிப்பார் என்று ஊகியுங்கள் பார்க்கலாம்!

செய்திகள்

1. வடபம்பாய்த் தொகுதியில் போட்டியிட மேனனுக்கு டிக்கெட் கொடுக்கவில்லை பட்டேல்.

2. மேயர் தேர்தலில் ஆறுமுகத்தைச் சம்பந்தம் தோற்கடித்தார்.

3. டி. டி. கே. தீவிர அரசியலில் ஈடுபடப் போவதில்லை.

4. வில்சனின் பயமுறுத்தல்களை ரொடீஷியப் பிரதமர் ஸ்மித் சட்டை செய்யவில்லை.

## சிந்தனைக்கு ....

● அடித்துத் துவைப்பதைத் தாங்க முடியாமல் சில துணிகள் கிழிந்து போகின்றன; தாங்கக் கூடிய துணிகள் அழுக்கு நீங்கி ஒளி பெறுகின்றன. வாழ்க்கையால் அடித்துத் துவைக்கப்படும் மனிதர்களிலும் அவ்வாறே.

● உணர்ச்சிகளை அறிந்து சொல்பவன் கவிஞன். அவற்றை உணர்ந்து வெல்பவன் அறிஞன்.

த. சங்கரபாண்டியன்

---

○ அடிபட்டவன் உன்னைத் திருப்பி அடிக்க விட்டால் அவனிடம் எச்சரிக்கையாக இரு. அவன் உன்னை மன்னிப்பதும் இல்லை; நீ அவனை மறக்க முயல்வதும் இல்லை.

○ ஒவ்வொரு நாளும் சிறிய நன்மைகளுக்காக ஆன்மாவை விற்பதைத் தவிர வேறு என்ன செய்கிறார்கள் மனிதர்கள்? - பெர்னார்ட் ஷா.

- வி. ஸ்ரீதரன்.

---

## வேண்டாத அதிகாரம்!

கணவனைக் கலந்தாலோசிக்காமல் எதை வேண்டுமானாலும் செய்யலாம் மனைவி. ஆனால் ராணுவத்தில் சேருமுன் கணவனுடைய அனுமதியைப் பெற்றுத் தீர வேண்டும். கணவனுக்கு அரசாங்கம் இப்படி அதிகாரம் அளித்திருப்பது சுமத்திரா தீவில். 'இந்த விஷயத்தில் கணவனுக்கு அதிகாரம் எதற்கு? ராணுவத்தில் சேர விரும்பும் மனைவியின் குறுக்கே எந்தக் கணவன் வந்து நிற்பான்' என்று கேட்டுவிடாதீர்கள்!

தகவல்: ஏ. கே. கந்தசாமி
ஆதாரம்: ஈஸ்டர்ன் ஹொரைசன்

## புள்ளி விவரம்

"ஒரு மனிதன் இறந்தால் அது பரிதாபத்துக்குரிய விஷயம். நூறாயிரக்கணக்கானவர் இறந்தால் அது வெறும் புள்ளி விவரம்தான்."

-- ஜோஸப் ஸ்டாலின்

ஆதாரம்: "படியுங்கள் -- சுவையுங்கள்"
தகவல்: வி. சம்பத்குமார்



# அரசியல் கிரிக்கெட் வர்ணனை!

**விடை**

1. பாட்டீல் போட்ட வேகமான பந்து ஒன்றில் மேனன் 'ரன்' ஏதும் எடுக்காமல் ஆட்டம் இழந்தார்!

2. ஆறுமுகம் போட்ட 'கூக்ளி' கனைத் திறமையுடன் சமாளித்து, சம்பந்தம் 'செஞ்சுரி' போட்டார்!



3. டி. டி. கே. 'அரசியல்' டெஸ்ட் மாட்சிலிருந்து ரிடையராகப் போகிறார்!



4. வில்லன் வீசிய பந்துகளை ஸ்மித் சளைக்காமல் 'பௌண்டரி'கள் அடித்து, இன்னும் 'அவுட்' ஆகாமல் ஆடிக் கொண்டிருக்கிறார்!

- வி. சம்பத்குமார்





தோழி: உனக்கு எப்படிப்பட்ட கணவன் வேண்டும்?
அவள்: எனக்கு எப்படிப்பட்ட கணவனும் வேண்டாம். ஒரு பிரம்மச்சாரியைத்தான் நான் கல்யாணம் செய்து கொள்வேன்.

-- ஏ. கே. க.

---

## 17 வயதில் 'ரிடையர்' ஆனவர்



பிரிட்டிஷ் ராணியின் எடுபிடிப் பணியாளர் வேலையிலிருந்து ரிடையராகும் ஜார்ஜ்போர்டு என்ற 17 வயதுப் பையனுக்குப் பதில், டேனி காலின் (14 வயது) நியமிக்கப்பட்டிருக்கிறான். பதினேழு வயதுக்கு மேல் உள்ளவர்கள் இந்தப் பதவியை வகிக்க முடியாது.

- 'டெல்லி டெலிகிராப்' - தகவல்: என். ஸ்ரீ.

---



"மின்னல்களையும் பெண்களையும் பார்க்கும்போது பெருமையாக இருக்கும், பேரன்களையும் பேத்திகளையும் காணும்போது உச்சி குளிர்ந்து விடுமே?...." என்று ஒரு பெரியவரைப் பார்த்து இன்னொருவர் கேட்டதற்கு அந்தப் பெரியவர் பதில் சொன்னார்: "அதெல்லாம் சரிதான். ஆனால் நான் ஒரு பாட்டிக்குப் புருஷனாகி விட்டேனே என்று நினைக்கும்போதுதான்...."

---

## பேரைச் சொல்லலாமா?

டில்லியிலுள்ள இந்தியப் பிரதிநிதிகள் சபையைப் பாராளுமன்றம் எனத் தமிழ்நாட்டில் நாம் அழைக்கிறோம். அதுபோல் பிரிட்டன், ஜப்பான், ஜெர்மனி, அயர்லாந்து, பாரசீகம், அமெரிக்கா ஆகியவற்றில் எப்படிச் சொல்வார்கள்?

| | | | |
|---|---|---|---|
| பிரிட்டன் | - பார்லிமெண்ட் | அயர்லாந்து | - டெய்ல் |
| ஜப்பான் | - டயட் | பாரசீகம் | - மஜ்லிஸ் |
| ஜெர்மனி | - ரீச் | அமெரிக்கா | - காங்கிரஸ் |

தகவல் : புதுவை அமலன்




திருமுருக கிருபானந்தவாரியார்

# 36. வைராக்கிய சிகரம்

"அப்பரே! எல்லையில்லாத அன்புடன் திருநீற்றைப் போற்றும் இருவரையும் சென்று காண விரும்புகிறேன். அதோடு அங்கு தீமை புரியும் சமணரது தருக்கையடக்கிச் சைவத்தை நிலை நாட்டாது இனி ஒன்றும் செய்யேன். உமது ஆணை" என்று வாகீசரை நோக்கிக் கூறினார் சம்பந்தர்.

அதனைக் கேட்ட அப்பர் அடிகள், "நாளும் கோளும் நன்னிலையில்லை" என்றார். உடனே திருஞான சம்பந்தர் கோளறு பதிகம் பாடினார். "தேவரீர் இரும்; அடியேன் ஒருவன் சென்றாலே அமையும். பரசமய இருளை நீக்கி, சைவ சமய ஒளியை ஏற்றி வருவேன்" என்று கூறிப் புறப்பட்டுச் சென்றார். அதனை அப்பரடிகள் மறுத்துக் கூற முடியாது இருந்தார்.

திருஞான சம்பந்தர் சென்றபின் அப்பரடிகள் பல பதிகளில் தங்கித் திருப்பணி செய்தார்; திருப்பதிகங்கள் பாடியருளினார்.

நாவுக்கரசர் பழையாறை என்னும் பதியை அடைந்தார். பழையாறை வடதளியில் எழுந்தருளிய சிவலிங்கத்தைச் சமணர்கள் மறைத்துத் தங்கள் கோயிலாகச் செய்திருந்தனர். அந்தச் செய்தியை அங்குள்ளோர் சொல்லக் கேட்டு மிகவும் வருந்தினார் அப்பர். அக் கோயிலின் விமானத்தின் அருகில் ஓரிடத்தில் அமர்ந்து "எம்பெருமானே! உமது திருவுருவத்தை வடதளியில் கண்டாலன்றி இங்கிருந்து அகலேன்" என்று வேண்டினார். தமது கருத்து நிறைவேறும்வரையில் உண்ணாவிரதம் மேற்கொண்டார்.

கருணைக் கடலாகிய கண்ணுதற் கடவுள் அரசருடைய கனவில் தோன்றினார். "அறிவில்லாத அமணர்கள் நம்மை மறைக்க நாம் உள்ளிருந்தோம். திருநாவுக்கரசன் எம்மை வணங்கக் காத்துக் கொண்டிருக்கிறான். அவன் நம்மை வணங்கும் பொருட்டுச் சமணரை அங்கிருந்து அகற்றுவாய்" என்று மறைத்துள்ள இடத்தின் அடையாளங்களைக் கூறியருளினார்.

கனவு தெளிந்து எழுந்த மன்னன், அமைச்சர்களிடம் இறைவரது ஆணையை அறிவித்தான். அமைச்சர்களுடன் எம்பெருமான் கூறியருளிய அடையாளத்தின் வழியைக் கண்டு வாகீசப் பெருந்தகையை அடைந்தான். அவரது திருவடிகளைப் பணிந்தான். ஏவலரைச் சமணர் மேல் ஏவினான். ஆங்கு குவிந்திருந்த சமணர் மாய்ந்தனர். சமணர் மறைத்த மறைப்பை நீக்கிய மன்னன் விடையவருக்கு விமானம் புதுக்கினான். நித்திய நைமித்திகங்களுக்கு ஏராளமான நிலபுலங்களை விடுத்தான். திருநாவுக்கரசர் இறைவரைக் கண்டு களித்து இனிய திருப்பதிகம் பாடித் துதித்தார்:

"தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே"

பின்னர், அங்கிருந்து புறப்பட்ட அப்பரடிகள் காவிரிக்கு இரு மருங்கிலும் உள்ள தலங்களைத் தரிசித்தார். ஆங்காங்கு முக்கட் பரமனுக்கு மொழி மாலை புனைந்தார். உழவாரப் படையினால் காயத் தொண்டும் புரிந்து கொண்டு, அடியார்கள் எதிர் கொள்ளத் திருவானைக்காவை அடைந்தார்.

அங்கே காவிரியில் மூழ்கினார். செழுநீர்த் திரளாகிய சிவபெருமானைத் தரிசித்தார். சிலந்திக்குச் சிவபெருமான் அருள்புரிந்த திருவருள் திறனைப் புகழ்ந்து பாடினார்.

"எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர்நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லல் கண்டங் கொண்டடியேன்
என்செய்கேனே"

காவிரியைக் கடந்து திருப்பைஞ்ஞீலிக்கு வழி நடந்து செல்கையில் வாகீசர் இளைத்து வருந்ினார். அவரைப் பசியும், தாகமும் வந்து நெருக்கின. ஆயினும் அவர் உள்ளம் கலங்காது சென்றார். தொண்டர் நாயகரது பசியையும், தாகத்தையும் மாற்றி அருள் புரியத் திருவுளங்கொண்ட அண்டர் நாயகர் வாகீசர் நடந்து சென்ற வழியில், குளிர்நீர்ப் பொய்கையையும், பூங்காவையும் உண்டாக்கினார். அத்துடன் அவர் செந்தண்மை பூண்ட அந்தணர் வடிவில் பொதி சோறு வைத்துக் கொண்டு திருநாவுக்கரசரை எதிர் நோக்கி யிருந்தார்.

அந்தணர் வடிவில் வந்த சிவபெருமான் அப்பரைப் பார்த்து, "அன்பரே! நீர் நடந்து வருந்தியிருக்கின்றீர். என்னிடத்தில் பொதி சோறு இருக்கிறது. அதனை உண்டு, இந்தக் குளத்தின் தண்ணீரைப் பருகி, இளைப்பாறிச் செல்லுங்கள்" என்று கூறியருளினார். 'இதுவும் நம்பன் திருவருள்' என்று எண்ணிய நாவுக்கரசர் வேதியர் தந்த பொதி சோற்றை உண்டு, இனிய நீரைப் பருகினார். அவரது தளர்வு நீங்கியது.

மெலிவு நீங்கிய மெய்யன்பரை நோக்கிய மறையவர், "நீர் எங்கே போகின்றீர்?" என்று கேட்டார். "அடியேன் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்" என்றார் திருநாவுக்கரசர். "நானும் அந்த ஊருக்குத்தான் போகிறேன்" என்று கூறிய இறைவர், வாகீசருடன் புறப்பட்டுச் சென்றார். திருப்பைஞ்ஞீலிக்கு அருகில் இருவரும் வந்தனர். அதுவரை தொடர்ந்து வந்த விடையவர் மறைந்தருளினார். அதனை உணர்ந்த அப்பரடிகள், "ஆ! மாலும் அயனும் காணாத மணிகண்டப் பெருமான் அடியேனைப் பொருளாக எண்ணிப் பூங்காவும் சோலையும் அமைத்துப் பொதி சோறு தந்த கருணைதான் என்னே?" என்று பாடிப் பரவசமானார்.

பல தலங்களை வணங்கிச் செந்தமிழ்ப் பதிகங்கள் பாடியவாறு யாத்திரை புரிந்த நாவரசர், திருவண்ணாமலையை யடைந்து வழிபட்டார். தொண்டை நன்னாட்டுப் பதிகளைத் தரிசிக்க விரும்பிக் காஞ்சிப் பதியை யடைந்தார். கச்சியம்பதியில் உள்ள அன்பர்கள், கதிரவனைக் கண்ட கமலம் போல் மகிழ்ச்சியுடன் நகரை அலங்கரித்து அவரை வணங்கி வரவேற்றனர். திருநாவுக்கரசர் திருக் கோவிலுக்குச் சென்று தயாபரனைக் கண்டு விண்ணருவியெனக் கண்ணருவி பெருகப் பணிந்தார்; தமிழ்ப் பதிகம் சாத்தி வழிபட்டார். திருக்கழுக்குன்றம் சென்று வேதங்கள் பூசித்த வேதகிரீச்சுரரைத் தரிசித்தார். கடற்கரையில் விளங்கும் திருவான்மியூரை அடைந்து மருந்தீசரை வழிபட்டார். அங்கிருந்து மருவார் மலர்ச்சோலை மயிலாப்பூரை யடைந்து கபாலீசரைத் தொழுது திருவொற்றியூர் சென்றார். அங்கே படம்பக்க நாதரை வணங்கினார். திருவொற்றியூர் வாழும் பெருமானைப் பல தமிழ்ப் பதிகங்கள் பாடிப் பரவினார் நாவுக்கரசர்.

"மனமெனும் தோணி பற்றி
மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச்
செறிகட லோடும்போது
மதனெனும் பாறை தாக்கி
மறியும்போ தறிய வொண்ணாது
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூ ருடைய கோவே"

திருவொற்றியூரிலிருந்து திருமுல்லைவாயில் முதலிய பல தலங்களை வணங்கிக் கொண்டு, திருவாலங்காடு சென்று, ஊர்த்துவ தாண்டவம் புரியும் அருட்கடலைத் தொழுதார். வடதிசை நோக்கிச் சென்று திருக்காளத்தி மலையை அடைந்தார். பொன்முகலி நதியில் மூழ்கி, வேத நாயகரைக் கண்டு மெய்ம் மறந்து பாடினார்; ஆடினார். ஆங்கே,



கண்ணுதற் பெருமான் அருகில் நிற்கும் கண்ணப்ப நாயனாரது பாதங்களில் வீழ்ந்து வணங்கினார். இனிய தமிழ்ப் பதிகங்கள் ஓதினார்.

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றி
னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தியான் அவன் என் கண்ணுளானே"

திருக்கைலாய மலையில் வீற்றிருந்தருளும் திருக் கோலத்தைக் காண்பதற்கே காதல் கொண்டு விட்டார் வாகீசர். வடதிசை நோக்கிப் புறப்பட்டு விட்டார். மலைகளையும், காட்டாறுகளையும் கடந்த அவர், திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்) என்னும் திருத்தலத்தை அடைந்தார். ஆங்கு எழுந்தருளியுள்ள மல்லிகார்ச்சுனரைக் கண்குளிரக் கண்டு தமிழ்ப் பதிகம் பாடினார். பின் அங்கிருந்து புறப்பட்டு, தெலுங்கு நாடு, மாளவ தேயம், மத்திம பைதிரம் முதலியவற்றையும் கடந்து காசியை அடைந்தார். அங்கு கங்கையில் மூழ்கித் தடங்கண்ணித் தாயாரையும், விசுவலிங்கத்தையும் வணங்கினார். உடன் வந்தவர்களை அவ்விடத்தில் விட்டு விட்டு மேலும் வடதிசை நோக்கி நடந்து, காடுகளையும், மலைகளையும் அடைந்தார். மனிதர்கள் செல்ல முடியாத அடர்ந்து, உயர்ந்த காட்டு வழியில் தனிப் பெருங் காதலுடன், தனியே நடந்து செல்கிறார் அவர். காய், கனி, கிழங்கு, இலை, சருகுகளை உண்பதையும் அவர் நிறுத்திவிட்டார். இரவில் அவர் செல்லும் பொழுது, கொடிய விலங்குகளும் அவரைக் கண்டு அஞ்சி, துன்புறுத்தாமல் அகன்றன. நல்ல பாம்புகள் படமெடுத்துப் பணமருடத்துள்ள நாகமணிகளால் விளக்கு எடுத்தன. தேவரேயாயினும் தனித்துச் செல்ல அஞ்சும் அக்காட்டு வழியே அப்பர் அடிகள் சென்றார்.

இரவும் பகலும் எல்லையில்லாத ஆர்வத்துடன் ஏகும் அப்பரடிகளின் பாதங்கள் பரடுவரை தேய்ந்தன. குருதி பெருகிற்று. பாதங்கள் தேய்ந்தும், அன்பு தேயாதவராகிய அப்பரடிகள் கரங்களை ஊன்றித் தாவித் தாவிச் சென்றார். கரங்களும் மணிக்கட்டு வரை தேய்ந்தன. ஆயினும் அவர் தளராமல் மார்பினால் தவழ்ந்து சென்றார். அதனால் மார்பும் தேய்ந்து, சதைப் பற்று அற்று எலும்புகள் முறிந்தன. அந்த நிலையிலும் அப்பரடிகள் சிந்தையன்பு குன்றாமல், உடம்பு முழுவதும் உள்ள தசைகள் கெடும்படி புரண்டு சென்றார்.

அப்பரடிகள் செந்தமிழ் நாட்டிலிருந்து செந்தமிழ்ப் பாடல்களைப் பாடுவதையே பாம்பணிந்த பரமேசர் விரும்பினார். அவரைக் கயிலை மலைக்கு வராது இருக்கும்படி செய்ய எண்ணினார். அருகில் குளிர்நீர்ப் பொய்கை ஒன்றை உண்டாக்கி முனிவர் கோலத்தில் அவர் எதிரில் தோன்றியருளினார்.



அப்பரை நோக்கி அந்தணனாய் வந்த இறைவன் கூறுவார்:

''அன்பரே! கயிலை மலையைப் பூமியில் உள்ள மானுடர்கள் சென்று காண இயலாது. அமரர்கட்கும் அது அரிது. வழியின் அருமையை அறியாமல் வந்து விட்டீர். இனி திரும்பிப் போவதே நல்லது'' என்று கூறியருளினார்.

''ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடன் கொண்டு மீளேன்'' என்று மறுத்துரைத்தார் திருநாவுக்கரசர்.

அவரது உறுதியைக் கண்ட சிவபெருமான், விண்ணில் மறைந்து நின்றார். ''ஓங்கு புகழ் நாவுக்கரசனே! எழுந்திரு'' என்று அசரீரியாக அருளிச் செய்தார். நாவுக்கரசரின் தேய்ந்த உடல் உறுப்புக்களெல்லாம் வளர்ந்து அழகு பூரித்தன. உடனே அவர் திருவருள் ஒளியுடன் எழுந்து, ''ஐயனே! நீர் கயிலையில் இருக்கும் திருக் கோலத்தை அடியேன் கண்டு வணங்க அருள்வீர்'' என்று பணிந்தார்.

**அண்ணலேஎனை ஆண்டுகொண் டருளிய அமுதே**
**விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே!**
**கண்ணி னால்திருக் கையிலையில் இருந்தநின் கோலம்**
**நண்ணி நான்தொழ நயந்தருள் புரி''எனப்**
**பணிந்தார்.**

''இப் பொய்கையில் மூழ்கினால் திருவையாற்றில் எழுந்திருப்பாய். அங்கு நாம் கயிலையில் வீற்றிருக்கும் காட்சியைக் காண்பாய்'' என்று அண்ணல் விண்ணிலிருந்து அசரீரியாகக் கூறியருளினார்.

சிவபெருமானது கட்டளையைச் சென்னி மேற்கொண்ட நாவுக்கரசர் செந்தமிழ்ப் பதிகங்களால் துதித்தார். ஐந்தெழுத்தை ஓதி, அப் புனித வாவியில் மூழ்கினார்.

இறைவர் திருவருளை யாரே அறிய வல்லார்? திருநாவுக்கரசர், திருவையாற்றில் உள்ள திருக்குளத்தில் வந்து எழுந்தார். கண்ணுதற் பெருமானது கருணையை எண்ணிக் கண்ணீர் சொரிந்த வாறே திருக் கோயிலின் முன் சென்றார் திருநாவுக்கரசர். அக் கோயிலே கயிலை மலையாயிற்று. தேவர்களும், சித்தர்களும், ஞானிகளும் பக்கங்களில் நெருங்கி யிருக்க, தெய்வப் பெண்களின் இசையும், இயங்களும் ஒலிக்க, சிவ கணங்கள் போற்ற, பூத வேதாளங்கள் வணங்க, இடப தேவர் எதிர் நிற்க, நந்தி தேவர் நடுவில் நிற்க, வெள்ளி மாமலைமேல், மரகதக் கொடி போல் பார்வதி தேவி அருகில் இருக்கச் சிவ பெருமான் கயிலைக் காட்சி அருளினார். அக்காட்சியைக் கண்டு தரிசித்த அப்பரடிகள், ஆனந்தக் கடலைக் கண்கள் என்னும் கரங்களால் மொண்டு, மொண்டு பருகினார். பாடினார்; ஆடினார்; விழுந்தார்; எழுந்தார்; அழுதார்; தொழுதார். அவர் அடைந்த மகிழ்ச்சியையும், வியப்பையும் அளவிட்டுச் சொல்ல வல்லார் யார்? அப்பரடிகள் திருத்தாண்டகப் பதிகங்கள் பாடித் துதித்தார். பின்னர் கயிலைக் காட்சி யகன்று திருவையாற்றின் திருக் கோலம் திகழ்ந்தது. அதனால் வருந்திய நாவரசர், ''எந்தை யருள் இதுவோ?'' என்று தெளிந்து பல பதிகங்கள் பாடியருளினார்.

(தொடரும்)



## சிறு தொழில்களுக்கு நிதி உதவி அளிப்பதில்

# ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் பங்கு–



ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா — கிண்டி கிளையின் புதிய கட்டிடம்

நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கு சிறு தொழில்களின் வளர்ச்சி அத்யாவசியமாகும் என்பது இப்போது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. இந்த அவசியத்தை பத்து ஆண்டுகளுக்கு முன்பே ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா உணர்ந்து, முன்னோடித் திட்டமாக சில குறிப்பிட்ட இடங்களில் சிறு தொழில்களுக்கு நிதி உதவி செய்தது.

அதற்குப் பின் திட்டத்தில் பல மாறுதல்கள் செய்யப்பட்டன. இப்போது ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் எல்லா கிளைகளும், அதன் சப்ஸிடரி பாங்குகளும் சிறு தொழில்களுக்கு குறைந்த வட்டி விகிதத்தின் பேரில், விரிவான நிதி உதவி அளித்து வருகின்றன.

தொழிலைத் துவக்குவதிலிருந்து ஆலைக்கு வரவேண்டிய தொகைகளை வசூலிப்பது வரை முழுமையான திட்டமொன்றை இப்போது பாங்க் உருவாக்கியுள்ளது. உற்பத்தியின்போது ஒவ்வொரு கட்டத்திலும் பாங்க் கடனுதவி செய்கிறது. விவரங்களை கவனிப்போம் :

1. தொழில் அதிபர் தொழிலைத் துவக்கும்போது இயந்திரங்களின் விலையிலும், நிலம் கட்டிடங்களின் பெறுமானத்திலும் பெரும் பகுதியை பாங்க் கடனாகத் தந்து உதவுகிறது.

2. மூலப் பொருள்களை வாங்குவதற்கு பாங்க் கடன் தருகிறது.

3. மூலப் பொருள் வாங்கப்பட்டு, சாமான்கள் ஆலையில் உருவாகின்றபோது, பாதி வேலை முடிந்த சாமான்கள் மீதும், முழு வேலை முடிந்த சாமான்கள் மீதும் பாங்க் கடன் உதவி செய்கிறது.

4. சாமான்கள் முழுமையாக செய்யப்பட்டு, அவை வாங்குவோருக்கு அனுப்பப் பட்டு, பில்களைப் போடும்போது, பில்கள் மீதும் பாங்க் கடன் தருகிறது.

5. புதிய இயந்திரங்கள், கட்டிடங்கள் முதலிய சொத்துக்களை வாங்க பாங்க் நீண்ட காலத் தவணை கடன்களைத் தருகிறது.

எல்லாவற்றையும்விட முக்கியமான, புரட்சிகரமான அம்சம் ஒன்று உண்டு. அது தான், செக்யூரிட்டியின் பேரில்தான் கடன் தருவது என்ற கொள்கையில் ஏற்பட்டுள்ள மாறுதல். கடன் தருவதில் செக்யூரிட்டியின் முக்கியத்துவம் இரண்டாம் பட்சமாகி விட்டது. கடன் வாங்குகிற ஆலையின் உற்பத்தித்திறன், தொழில் நுட்பத்திறன், வியாபார அம்சம், பொருள்களின் விற்பனை வாய்ப்புகள், தொழில் அதிபரின் நாணயம் ஆகியவற்றையே முக்கியமாக பாங்க் இப்போது கருதுகிறது. இந்தத் திட்டமே பாங்கின் ஒளி விளக்கு. எப்படி! நல்லதொரு திட்டம்தானே இது!



# ஆறு பைசாத் திட்டம்



தமிழ் நாட்டின் ஆரம்பப் பள்ளிகளில் பகல் உணவுத் திட்டம் நடத்தப்படுகிறது. ரூபாய்க்கு இரண்டரை லிட்டர் அரிசி விற்றுக் கொண்டிருந்த காலத்தில் இத்திட்டம் தொடங்கப்பட்டது.

பள்ளி நாளொன்றுக்கு ஒரு குழந்தைக்கு ஆறு பைசா விதம் அரசாங்க மானியம் அளிக்கப்படுகிறது. இந்த ஆறு பைசாவுடன் நாலு பைசா நன்கொடை வழங்கி மொத்தம் பத்து பைசாவுக்கு உணவு அளிக்கப்படுகிறது.

இத்திட்டம் முதன் முதல் தொடங்கிய பொழுது பொதுமக்கள் ஆர்வத்துடன் நன்கொடை வழங்கியது உண்மை. ஆனால் விலைவாசி உயர்வின் காரணமாகவும், உணவுப் பொருள்கள் விளைச்சல் குறைவின் காரணமாகவும் பொதுமக்கள் பாதிக்கப்பட்டதனால் இப்பொழுது நன்கொடை என்பது கிடைப்பதே யில்லை.

தமிழ் நாட்டு அரசாங்கம் ரூபாய்க்கு இரண்டரை லிட்டர் அரிசி விற்றுக் கொண்டிருந்த காலத்தில் கொடுத்துக் கொண்டிருந்த அதே ஆறு பைசாவைத்தான் இப்பொழுதும் கொடுக்கின்றது.

ரூபாய்க்கு ஒரு லிட்டர் அரிசிகூடக் கிடைக்காத இந்தச் சமயத்தில் ஆறு பைசாவுக்குப் பள்ளிகளில் பகல் உணவு அளிக்கப்படுகின்றது என்பதை நம்ப முடியுமா?

ஆனால் முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் சர்க்கார் கொடுக்கும் ஆறு பைசாவுடன் நன்கொடை வசூலிக்கப்பட்டு, பள்ளிகளில் அளவிலும் தரத்திலும் உயர்ந்த உணவு அளிக்கப்படுவதாகக் கூறியுள்ளார்.

இதன் ரகசியம் என்னவென்றால் ஆறு பைசாவைக் கொண்டு ஒரு வாரத்தில் எத்தனை நாட்களுக்கு உணவு அளிக்க முடியுமோ அத்தனை நாட்களுக்கு அளித்து விட்டு, மற்ற நாட்களுக்கு உணவு அளிக்காமல், அளிக்கப்படுவதாகக் கணக்குகள் எழுதப்படுகின்றன. அல்லது தரத்தில் நாய்கூடச் சாப்பிட முடியாததும், அளவில் எறும்புக்குக்கூடப் போதாததுமான உணவு வாரத்தின் எல்லாப் பள்ளி நாட்களுக்கும் அளிக்கப்படுகிறது.

ஆறு பைசாவைத்தான் செலவழித்துவிட்டுப் பத்து பைசா செலவழிக்கப்படுவதாகக் கணக்குகள் தயாரிக்கப்படுகின்றன. அப்படிப் பத்து பைசாவுக்குக் கணக்குகள் காண்பிக்கப் பட்டால் தான் அரசாங்க மான்யம் ஆறு பைசா கிடைக்கும். பத்து பைசாவுக்குக் குறைவாகச் செலவழித்ததாகக் கணக்குகள் காண்பிக்கப்படுமாயின் மானியத் தொகை கிடைப்பதில்லை.

எனவே, நாலு பைசா விதம் நன்கொடை கிடைப்பதாகப் பொய்க் கணக்குகள் எழுதப் பட்டு, உணவுப் பண்டங்கள் வாங்கப்பட்டதாகப் பொய் வவுச்சர்கள் தயாரிக்கப்படுகின்றன.

மேலும் ஆறு பைசா விதம் கணக்கிடப் பட்ட மானியத் தொகையானது ஆரம்பத்தில் பொதுமக்களால் நியமிக்கப்பட்ட ஒரு முக்கியமான மனிதருக்குக் கொடுக்கப்பட்டது. 'பகல் உணவுக் குழு' என்று பெயரளவில் இருக்கும் குழுவின் தலைவராக நியமிக்கப்படும் அந்த மனிதர் அரசாங்கம் சம்பந்தப் படாதவராக இருந்தார். எனவே, அவர் மானியப் பணத்தைக் கையாடச் சந்தர்ப்பம் இருந்தது.

குற்றச்சாட்டுகள் கிளம்பவே, அரசாங்கத்துக்குச் சம்பந்தப்பட்டவர் என்ற முறையில் ஊராட்சி மன்றத் தலைவர்களுக்குக் கொடுத்தார்கள். இவர்கள் மீதும் குற்றச் சாட்டு மனுக்கள் பறந்தன.

கடைசியில் இப் பொறுப்பைப் பள்ளித் தலைமை ஆசிரியர்களின் தலையில் சுமத்தினர்.

ஒரு சில நேர்மையற்ற ஆசிரியர்கள் விலைவாசி உயர்வையும், நன்கொடை இல்லாமையையும் காரணமாகக் கூறி, கிடைக்கும் ஆறு பைசாவையும், ''கூறு'' போட்டுக் கொண்டதனால், எல்லாத் தலைமை ஆசிரியர்கள் மீதும் குற்றச்சாட்டுக்கள் கிளம்பியுள்ளன. இதனால் நேர்மையுள்ள தலைமையாசிரியர்களின் நிலை பரிதாபத்துக்குரியதாக ஆகிவிட்டது.

ஆறு பைசாவைக் கொண்டு உணவு அளிக்கவும் முடிவதில்லை. உணவு அளிக்காமலிருந்தாலோ குற்றச்சாட்டுகள்; திருட்டுப் பட்டம். ஏற்கனவே ஆசிரியர்களுக்குச் சமுதாயத்தில் மதிப்பு இல்லை. இப்பொழுதோ...? கூற வேண்டியதேயில்லை!

ஆக, சுருக்கமாகக் கூறினால் தமிழ்நாட்டு அரசாங்கத்தின் பகல் உணவுத் திட்டம், ஊழல்கள் நிறைந்ததாகவும், பெயரளவில் நடக்கக் கூடியதாகவும், ஆசிரியர்களின் நிலையைத் தாழ்த்தக் கூடியதாகவும் உள்ளது.

இதை அரசாங்கம் பரிசீலனை செய்து, ஒன்று, சிரிய முறையில் நடத்த வழிமுறை களை வகுக்க வேண்டும்; இல்லை, இந்தத் திட்டத்தைக் கைவிட்டு விட்டு, இதற்கென்று செலவிடப்படும் பணத்தை வேறு பயனுள்ள முறையில் செலவிட வேண்டும். செய்வார்களா?



நீலகிரி பி. என். இராமன்
24–12–66 (தலைமையாசிரியர்)


காற்றினிலே
வரும்
கீதம்
ரா. கணபதி

## அத்தியாயம் 25

# சிருங்கார சந்நியாசினி

**தா**ம்பத்தியமே செய்யாத அதிசயத் தம்பதியர் வைத்தியத்தில் ஒன்றுகூடிக் 'குடித்தனம்' செய்யத் தொடங்கிய பின் சித்தோரே மாறியது. கிரிதர ஆலயத்தில் நித்திய உத்சவமாயிற்று. அடியார் கூட்டம் பெருகிற்று.

சித்தோர் மாநகர் மட்டும்தானா மாறிற்று? மேவார் சாம்ராஜ்யமே மாறிற்று. ஒரு சிறிய குயிலின் கண்டத்தில் பிறக்கும் குரல் சோலை முழுதும் பரவுகிறது. மீராவின் குரலோ மேவார் முழுதும் பரவியது. சித்தோரில் அவளது குரல் கேட்ட ஆண்டியர் தமது சஞ்சாரத்தின்போது அவளது சங்கீதத்தையும் தூக்கிச் சென்று பரப்பினர் - தென்றல் சுகந்தத்தைப் பரப்புவது போல். வீரம் செறிந்த ராஜஸ்தானத்தில் பண்ணின் ஈரம் கூடலாயிற்று. ஆடவரும், பெண்டிரும், முதியோரும், இளையோரும், உழவர் - ஆயர் - உழைப்பாளர் தொடங்கி அந்தணேத்தமர் வரை அனைவர் அதரங்களையும் மீராவின் கானம் அலங்கரித்துப் பாவனப்படுத்தியது. ஒரு பேரரசின் உயிரோட்டத்தையே மாற்றி விட்டாள் ஒரு பெண். மாற்றும் நோக்கம் அவளுக்கு இல்லாததாலேயே இவ்வதிசயம் நிகழ்ந்தது.

ஆண்டிப் பரதேசிகளிடையே மகாராணி நிருத்தமிட மகாராணா அதற்கு வீணை வாசிப்பான். பரமேசுவரனும், துர்கா தேவியும் அளித்த கத்தியையும் கேடயத்தையும் முன்பு தாங்கிய அவனது கை அதைவிட லாகவமாக வீணையிலும், ஜாலராவிலும் மேவின. ராஜ லக்ஷணப்படி ஆய கலைகள் அறுபத்து நான்கும் கற்றிருந்த கும்பன் இப்போது தனது ரசிக உள்ளத்தைத் தீட்சண்யமாக்கிக்கொண்டான். முன்பு சதுர் வேதமும் அர்த்த சாஸ்திரமும் படித்தவன், இப்போது பாகவதத்தையும் ஸ்வரார்ணவத்தையும் விழுந்து விழுந்து படிக்கலானான். அதையெல்லாம்விட அதிசயம், முன்பு படையெடுப்புத் திட்டங்களைத் தீட்டியவன் இப்போது பிரேம பக்தியின் வேதமாகிய கீத கோவிந்தத்துக்கு உரை எழுதத் தொடங்கினான்.

லீலாசுகர் கிருஷ்ண கர்ணாமிருதத்தை இயற்றியபோது தமக்குப் பக்தியுணர் வூட்டிய சிந்தாமணியை முதலில் பாடினாரல்லவா? அப்படியே கும்பனும் தனக்குப் பிரேம பக்தி போதித்த குருவான மீராவுக்கு மரியாதை தெரிவித்து உரையைத் தொடங்க நினைத்தான். ஆனால் மீரா பிடிவாதமாக மறுத்தாள்.

''உங்களது மூத்த மனைவிகளான கும்பவா தேவியைப் பற்றியும், அபூர்வ தேவியைப் பற்றியும் எழுதுங்கள். அதுதான் நியாயம்'' என்றாள் அழுத்தம் திருத்தமாக.

''மீரா, நீயா இப்படிப் பேசுகிறாய்? தெய்விகக் காதல் நூலிலா மானுடக் காதலைச் சேர்ப்பது? அபசாரமல்லவா அது?'' என்று மறுத்தான் ராணா.

''ஸ்வாமி, நீங்கள் உங்கள் மனைவிகளை மானுடமாகப் பார்த்திருக்கலாம். ஆயின் அவர்கள் உங்களைத் தெய்வமாகப் பார்த்தல்லவா அன்பு செய்தார்கள்? அந்தக் கற்பரசிகளைச் சொல்லும் கீத கோவிந்த நாயகி ராதா தேவியே மகிழ்வாள்'' என்றாள் மீராபாய்.

மீராவின் வாக்கிலிருந்து அப்படி வந்தது கும்பனுக்கு அதிசயத்திலும் அதிசயமாக இருந்தது. அவள் சொன்னவாறே செய்தான்.

கும்பராணா கீத கோவிந்தத்துக்கு எழுதிய விரிவுரையைத்தான் 'ரஸிகப்ரியா' என்று ரசிகருலகு கொண்டாடியது.

'சங்கீத ராஜ' என்ற இசை நூலை இயற்றிய கும்பனை ஆடல் பாடல் அரசனாக ராஜஸ்தானம் காணத் தொடங்கியது. 'நரபதிகளையும், அச்வபதிகளையும், கஜபதிகளையும் வென்ற தோடர்மல்' என்று முன்பு பட்டம் பெற்றிருந்த கும்பாஜீ ராணாவுக்கு இப்போது மேவாரின் வித்வத் ஜனங்கள் 'அபிநவ பரதாசாரியர்' என்ற விருதினை அளித்தனர்.

ஆனால் அவனது உள்ளமோ பேரையும் புகழையும் ஒதுக்கியது. அரசாங்க உத்தரவுகளைக்கூடத் தன் பெயரில் வெளியிட அவன் விரும்பவில்லை. என்றுமே பெரியப்பா சண்டன் பெயரில்தான் அவன் உத்தரவுகளைப் பிறப்பிப்பது வழக்கம். அடியில் மட்டும் ஒப்புக்குத் தன் ராஜ முத்திரையைப் பதிப்பான். ஆனால் இப்போது அதைக் கூட விரும்பவில்லை அவனது உள்ளம். எனினும் உத்தரவுகள் அதிகார பூர்வமாக இருக்க வேண்டுமல்லவா? அதற்காகத் தன் பெயரை முத்திரையிடாமல் வெறுமே 'ஸஹீ' என்றே கையெழுத்திட்டான். 'ஸஹீ' என்றால் 'ஒப்புக்கொள்ளப்பட்டது' என்று பொருள். கை 'ஒப்பம்' என்றே தமிழிலும் சொல்லுகிறோமல்லவா?

முன்பு மாளவ கில்ஜியை வென்ற பெருமையில் சித்தோரில் நீண்ட நெடிய கீர்த்தி ஸ்தம்பம் நிர்மாணிக்கத் தொடங்கியிருந்த அவன் இப்போது கீர்த்தியே வேண்டாம் என்று நினைக்கத் தொடங்கினான். மீராவின் வற்புறுத்தலின் மீதே கீர்த்தி ஸ்தம்பத்தைப் பூர்த்தி செய்தான். நூற்றிருபதடி உயரமுள்ள அந்த வெற்றித் தம்பத்தின் உச்சியான ஒன்பதாம் மாடத்தில் மகாராணாவின் பிரதாபங்களைச் சிலை வடிவில் பொறிக்கவே முதலில் திட்டமிடப்பட்டிருந்தது. ஆனால் இப்போது அவனது உள்ளம் மாறிவிட்டதே! ''கண்ணனின் ராஸமண்டலத்தையே கீர்த்தியின் உச்சமாகப் பொறியுங்கள்'' என்று ஆணையிட்டான். ராஜஸ்தானத்தின் தலைசிறந்த சிற்பியான மண்டனும் அவனது சோதரன் நாதனும், ஜைத்ரனும் அவனது அருமைப் புதல்வர்கள் நாபாவும் புஞ்சாவும் தங்கள் கலைத் திறனை யெல்லாம் காட்டிக் கீர்த்தி ஸ்தம்பத்தில் முகுடமாகக் கிருஷ்ண லீலையைச் செதுக்கினர்.

'கோட்டை எனில் சித்தோர்க் கோட்டை' (கர் தோ சித்தோர் கர்) என்று பெயர் வாங்

கிய சித்தோர்க் கோட்டையையும், கும்பல்கரையும் முன்பு கட்டியிருந்த மகாராணா இப்போது அவற்றிலும் கும்பஸ்வாமி என்று பெயரிட்டுக் கண்ணனுக்கு ஆலயங்கள் எடுத்தான். முன்பு வீரர்களுக்குப் பெரு மானியங்கள் அளித்தவன், இப்போது அடியார்களுக்கு வாரி வழங்கினான்.

கண்ணனின் அன்பினால் ராணாவுக்கு எல்லோரிடமுமே அன்பு சுரந்தது. இதன் எல்லையாக, தான் சித்தோரில் சிறை வைத்திருந்த மாளவ சுல்தான் கில்ஜியையும் எந்த நிபந்தனையுமின்றி அவன் விடுவித்துவிட்டான். மீண்டும் அவனது மாளவ ராஜ்யத்தையும் தந்தான். நண்பனாக்கிக் கொண்ட பகைவனுடன் ஒன்றாக அமர்ந்து மதுவில் மாதுளை முத்தையிட்டு, 'மூனவர் ப்யாலா' அருந்தினான். ராஜ குடும்பமும், மந்திரி பிரதானிகளும் இப்படியும் ஒரு முறையீனம் உண்டா என முணுமுணுத்தனர்.

“ஏன், அந்த மிலேச்சனுக்கு 'தாறு' கூடத் தரவாமே!” என்று வெட்டிப் பேசினான் ஊதா. ராஜப் பிரமுகர்களுக்கு ராணா செய்யும் மிகப் பெரும் மரியாதை தன் கலத்திலிருந்தே பணியாரம் எடுத்துத் தருவது. இதை 'தாறு' என்பார்கள்.

வென்ற அரசனுக்குக் கப்பமும் காணிக்கையும் தருவது போல் தோற்றுப்போன கில்ஜிக்காக ராஜஸ்தானத்தின் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுத்த வெள்ளியையும், வெள்ளிக் கட்டிகளையும் பல ஒட்டகங்களின் முதுகில் ஏற்றி மாளவத்துக்கு அனுப்பினான் ராணா. இத்தனை பெற்றும் இன்னொன்றுக்கு ஆசைப்பட்டது கில்ஜியின் உள்ளம்.

“ராணாஜி, தங்களை அன்பு வழிக்காக்கிய தேவி மீராபாயைக் காண வேணுமே!” என்றான் சுல்தான்.

“மன்னிக்கவும். குறிப்பிட்ட சில இனங்களைத் தவிர எங்கள் பெண்டிர் வெளி வருவதில்லை. மீராபாய் மட்டும் ஆலயத்தில் அனைவருடனும் ஆடுவதுண்டு. எனினும் தங்களைத் தேவாலயத்தில் அநுமதித்தால் என் தேசமே எதிர்க்கும். இதை மட்டும் மறந்துவிடுங்கள்” என்றான் ராணா.

மீரா தெருத் தெருவாகப் பஜனை செய்யப் புறப்படாத காலம் அது.

ராணா மறக்கச் சொன்னாலும் கில்ஜி மறக்கவில்லை. எப்படி மறப்பான்? சரித்திரம் திரும்பவேண்டுமே! பத்மினியைப் பார்க்க அலாவுதீன் இச்சித்ததால் சித்தோரில் நிகழ்ந்த உற்பாதம் மீண்டும் நேர வேண்டும் என விதி இருந்ததே!

“எல்லோரையும் விட எங்கள் மேர்தா சோதிடருக்குத்தான் அதிக மானியம் தர வேண்டும். அவர்தான் என் மனோரதம் ஈடேறும் என்று தீர்மானமாகச் சொன்னவர்” என்றாள் மீரா.

அந்த மனோரதத்தின் மர்மத்தைக் கும்பன் முற்றும் அறிய முடியாவிடினும் சோதிடரை வரவழைத்துப் பொன்னும் பொருளும் வழங்கினான். அவற்றிலும் மேலாக மீரா அவருக்குப் பண்ணும் பணுவலும் வழங்கினாள்.

சோதிடரே, உமக்குக் கோடி நன்றி
ஆதிமூலப்பிரான் இன்று இங்கே வந்தான்

ஆனந்தவாரிதி ஆர்த்து எழுந்தது
வானந்த வீட்டினில் வாழ்வு கொண்டேன்
ஐம்புலன் நம்மை அன்புச் சேடியராக்கி
ஐயனைத் தொட்டேன் அணுஅணு களித்தேன்

நாதனைக் கண்ணால் நேயம் மிக நோக்க
வேதனை ஒழிந்தது: வேட்கை மறைந்தது
மீராவுக்(கு) இன்ப சாகரம் வழங்க
மாறாத நெஞ்சுடன் நாகரன் வந்தான்

அவன் வந்தது உண்மை! ஆனால் வந்து வந்து மறைந்து விடுவான் அவன். மீராவின் மனத்தை மலர்த்தியவனே அதனை அவ்வப்போது வாடவிட்டு மகிழ்ந்தான். ஏன் என்று எப்படிக் கேட்க முடியும்? மீராவின் மனமலரை மட்டுமல்ல; எந்த மலரையுமே மலர்த்துபவன் அவன்தான். ஆயினும் மலர்ந்த மலர்கள் அப்படியே இல்லாமல் வாடித்தானே விடுகின்றன? மலர்த்தியவன் தானே அவ்வாறு வாடவும் வைக்கிறான்?

வாடிய சமயங்களில் மீரா பாடிய பாட்டுக்களின் அழகைச் சொல்லி முடியாது. இதற்காகவே வாடவைத்தானோ என்னவோ?

நகருவதில்லை கணமும்
நாகர, நின்னைக் காணமல் (நகருவதில்லை)
நீயே எனதுயிர் அன்றோ?
நின்னையல்லால் வாழ்வேது ?

குலையில் அம்பு பட்டாற்போல்
நிலையில்லாமல் தவித்தேன்
பிரிந்து வருந்தும் என் நாமம்
புரிந்து கொள்வாரெங்கும் காணேன்

தூங்குவதில் இராப் போக்க
ஏங்குவதில் உயிர் போக்க
கழுவி வயிற்றைப் பகல் போக்க
அழுது அழுது கண்ணும் போக்க

காதல் செய்திடுவதன் விளைவு
நோதல் ஒன்றே எனக் கண்டேன்
“அண்ட வேண்டாம் அன்பை” என்றே
அண்டம் முழுதும் முரசறைவேன்.

வழியினை நோக்கியே நிதமும்
மெழுகிக் கோலமும் இட்டேன்
தழுவி மோட்ச நிலைமை - எப்
பொழுது அருளுவாயோ ?

இப்படிக் கேட்டுக் கதறினாலும் அவன் வரமாட்டான். அதற்காக அன்பு செய்வதை மீராவால் விட்டுவிட முடியாது. விரக சோகத்தின் சிகரத்தில் நின்று மீரா கதறிப் பாடுவாள்:

ராமனுக்கே என்னை
ஹோமம் செய்து கொள்வேன்
அணுஅணுவாய் என்னை
அன்பில் அவிகொடுப்பேன்

ஐயனின் ஆணையை
ஐயமின்றிக் கொண்டேன்
பிறவி அழிந்திடினும்
ப்ரேமை மார்க்கம் விடேன்

யமுனைப் பெருக் கெனவே
அமுதக் கண்ணீர் விட்டு
சோகக் கரை தருவாய்
தேகம் பரிணமிப்பேன்

அன்பனை அருச்சிக்கும்
சம்பக புஷ்பமாய்
சோகக் களைத் தருவில்
மோக கீதம் மலர்வேன்

மெய்யில் பிறந்த பூவைக்
கையடாமல் கொய்து நீ
நேமம் தவறிடாமல்
ராமன் பதமிடுவேன்

பிரேமை வெறியைப் பாருங்கள்! சோக நதியைப் பெருக்கியவள் அவள்; அதன் கரையில் நிற்கும் தரு அவள்; அதில் மலரும் பூவும் அவளே. இந்த வெறியிலும் நேம ஆசாரங்களை அவள் விடமாட்டாளாம். 'கையடாமல் பூவைக் கொய்வேன்' என்கிறாள். ஆம், இந்திரியத்துக்கு அப்பாற்பட்ட தாம்பத்தியமல்லவா கண்ணனைக் கூடுவது? சூரியனும் வெயிலும் ஒருமிப்பது போன்ற அத்வைதக் காதலே அல்லவா மீரா கானம் செய்தாள்?

தழுவி உந்தனை நான்
அழுந்துவேன் ஆனந்தம்
சொரிய ஆசையின்
முழுமையை நுகர்வேன்

மதி உலகும் எனக்கும்
இடையில் வெளியும் உண்டோ?
கதிரவனும் வெயிலும்
தனித்து நிற்பதும் உண்டோ?

என்று இந்த அத்வைதத்தைத்தான் மீரா பாடுகிறாள். அத்வைத முழுமையை அன்பு வழியில் கண்டவள் அவள். 'கண்டவள்' என்பது முற்றிலும் உண்மை. ஏனெனில் தத்துவங்களைத் தான் கண்டதாகவே அவள் பாடியிருக்கிறாள். கண்ணன் என்பதே பார்வையைக் குறிப்பதுதான். கண்ணை உடைய எல்லோருமே கண்ணன்தான். ஆனால் எவன் எதிலும் பட்டுக் கொள்ளாமல், வெறும் கண்ணாக — சாட்சி மாத்திரமாக — நிற்கிறானோ அவன்தானே உண்மையான கண்ணன்? சாட்சி என்பதன் நேர் பொருள் கண்ணன். நம் கண்ணாகவே இருப்பவனை எப்படிக் காண முடியும்? கண் பிற பொருளைத்தான் பார்க்குமே அல்லாமல் தன்னையே பார்த்துக்கொள்ள முடியாதே! ஆயின் ஞானத்தினாலும் யோகத்தினாலும் உள்முகமாக அவனைப் பார்க்க முடியும். அவ்வாறு மீரா பார்த்திருக்கிறாள். அவளுடைய பாடலே சாட்சி:

காண வழியுமுண்டோ?
கண்ணினுள் வந்துவிட்ட
கண்ணனைக் கண்ணாக் (காண)
இமையினுள்ளே அவனை
இசைய உறைந்தானடி
வெளியில் வரவிடாமல்
விழி மூடியும் விடேன் •
காண வழியில்லை

புருவ மத்தியினில் இருதளத் தாமரை
மலரும் மாளிகையின் பலகணி திறந்து
ஆசைதீர எந்தன் நேச மணாளனும்
கிரிதரனை நிதம் தரிசனம் செய்தேன்
காணும் வழி தொட்டேன்

சூனிய மாளிகையில் ஞான நிலவு கொண்டு
மணக்கின்ற சிங்கார மணவறை சமைத்தேன்
நேசம் என்னும் மலர்ப் பாயல் விரித்திட்டேன்
இருமையற்ற இன்பத்(து) உறக்கம் கொண்டேனடி
சாட்சி இனி எதற்கு?

இப்படிச் சொல்லிவிட்டதால் மீரா அருவத் தத்துவமாகத்தான் அவனைக் கண்டாள் என்பதில்லை. உருவ சுந்தரத்தையும் நேருக்கு

## எதற்காக?

தன் மகனை வளர்த்து ஆளாக்குவதற்காக இருபத்தோரு வருடங்கள் பாடுபடுகிறாள் ஒரு பெண். எதற்காகத் தெரியுமா? இன்னொரு பெண்ணால் அவன் இருபத்தோரு நிமிடங்களில் முட்டாளாக்கப்படுவதைப் பார்க்கத்தான்!



ஆதாரம்: ''கன்னக்கோடுகள்''
தகவல்: ஏ. கே. கந்தசாமி

நேராகக் கண்டவள் அவள். இங்கே இரண்டுக்குமிடையே பிரிவே கிடையாது. கண்ணனின் ரூப லாவண்யத்தை முகமுகமாகப் பருகிய மீரா பகர்கிறாள்:

அந்த சுந்தரமாம் நந்த நந்தனை
எந்த நாளில் கண்டேனோ!
இந்த உலகத்திலும் இந்திர உலகிலும் — ஆ
னந்தம் ஏதும் காணேன்

கடலின் நீலத்தரங்கம் — அது
மகர மீன்நடன அரங்கம்
கண்ணனின் கன்னம் பளிங்கம் — அதில்
மகர குண்டலநிழல் துளங்கும்

புருவம் வில்லினுடைய போக்கு — மான
மந்திர சக்தி நிறை நோக்கு
கஞ்சனும் வஞ்சம் மாறும் மீறும் — இவன்
அஞ்சனக் கண் கண்டு நாளும்.

நாசிகையோ அதி சுந்தரம் — தங்க
ரேகை மூன்று தங்கும் கந்தரம்
நட்டமிட்டு வரும் தாண்டவன் — தள(து)
இட்ட வேடமிதும் ஆண்டவன்

மாவிளம் பூவினில் மின்கதிர் — இக
மாந்தர் கண்டறியாதோர் புதிர்
மாதுளை மொட்டென அதரம் — மரபு
மூரல் மின்னல் அதில் சிதறும்

இடையில் சிறுமணி குலுங்கும் — அதில்
உவமையில்லா ஒலி துலங்கும்
கிரிதரனின் அங்க அங்கம் — என்றும்
மீரை(யு) என்னுயிர் மூழ்கும்.

சுந்தரனாகவும், ஞான அந்தரமாகவும் அவன் ஒரேபோதில் இருந்தான் அல்லவா? இதைக் கொண்டே மீரா பாய் அவனை யோகியாகப் பொய் வேடமிட்ட கபடபுருஷன் என்கிறாள். அவன் வேஷத்தை அம்பலப் படுத்தப் போவதாக அச்சுறுத்தவும் செய்கிறாள்:

ஆண்டி வேஷமிட்டே — முறை
தாண்டி விட்ட தூர்த்தா
சீண்டிச் சிரித்து ஆசை
தூண்டிவிட்டு மறைந்தாய்

மானின் தோலினை உடுத்தாய்
மேனியில் நீறு புதைத்தாய்
மோன விரதம் என்று சொன்னாய்
மானம் வாங்கி விடுவேன்

தொண்டு செய்யும் எந்தமக்கு
பண்டு நீ செய்த வினை
அண்டோர் அனைவரும் அறியத்
தண்டோரா அறைந்திடுவேன்

அன்றலர்ந்த கமலத்தை
வென்ற முகத்தின் ஒளியாக்
ஒன்றி யோக வேஷம்
முன்றில் முன்பு நின்றாள்.

ஏது சொல்லிடினும் என்ன?
ஆதி உல்லாசன் உள்ளிடத்தே
ஸ்வநியம் ஏது மில்லாமல்
ஸ்வாமியம் புரியலானேன்

உத்தமமாகவே, உரிமையாகவே வந்த வாக்கு இனிக்க முடிகிறது.

இப்பாட்டில் பிட்சாடனைப் பரமேசனையே மீரா பாடுவது போலல்லவா இருக்கிறது? மால் தோழனையும், வெண்ணீற்றனையும் சொல்கிறாளே! எந்த சித்தாந்தத்தாலும் கட்டுப்படாதவள் மீரா! தானுமே வெண்ணீறணியப் போவதாகக்கூடப் பாடியிருக்கிறாள். அவளால் ஆசை எரிந்த யோக நிலைக்கும் பஸ்மத்தைத்தான் உருவமாகப் பார்க்க முடிந்திருக்கிறது. தனது இறுதிப் பாடலில் தானே விபூதியாக வேண்டும் என்று பாடியவள் மீரா.

மீரா இசைத்த ஹோலிப் பாடல்களில் மூன்றினைப் பார்த்தால் நடைமுறை, தத்துவம், இவற்றின் இடையிலே ஆகிய மூன்று பாவங்களும் ஒன்றையொன்று கவ்வியிருப்பதைக் காணலாம். ஹோலியில் வண்ண நீரைப் பீச்சியும், தமார் கானம் செய்தும் மகிழ்வது ராஜஸ்தான வழக்கு. இதை வைத்தே மீரா பாடுகிறாள்:

கசந்ததடி ஹோலி
வசந்த மாதவனின்றி (கசந்ததடி)

வாசலும் வீடும் பாழாச்சு
தேசமும் உலகும் பாழாச்சு
பாயல் சதங்கையும் பாழாச்சு
நேயனில்லாமல் நோகின்றேன்

தாளம் தம்புரா தன்னுடனும்
மேளமும் முழங்கின மேளாவில்
வேனில் வந்தது வெந்துவிட்டேன்
ஏனின்னும் ஏந்தல் வரவில்லை?

இது ஒரு பாவம். ஐயன் வராத பாவம். அவன் வந்து நடைமுறையில் வாஸ்தவமாய், நேருக்கு நேராய் ஹோலி செய்ததை இன்னொரு பதாவளியில் பார்க்கிறோம்.

பாவித்திடும் கிரிதாரி
ஹோலியில் இன்பம் செய்தான்

நாளும் நங்கையை நயமுறவே தொடர்ந்து
வேணுவும் மத்தளமும் வித்தகமாய் இசைத்து
(பாவித்திடும்)

தனது சிருங்காரத்தால் சந்தனத் துகளினை
மனது குளிர எங்கள் மேனியிலே பூசி
(பாவித்திடும்)

பீடுப் பிடியாய் வண்ணப் பொடியை எடுத்தே
அடுத்துத் திசைகளையும் அமர்வுறச் செய்தான்

உல்லாசம் நிறை மௌன நாதமும்
சல்லாபம் செய்து சிவன் கூத்தை கொண்டான்

குழல் எடுத்தே தமார் இசையினை ஓதினான்
கரதாளமும் கொட்டிக் குதித்துக் கூத்தாடினான்

பண்டிகை நினைவினில் பண்டைத் தோழமைப்
பிரான்
என்புசையும் மகிழ என்னைச் சேர்த்தானடி

இந்த நடைமுறையே தத்துவமாகப் பரிணமிக்கும் பாவத்தையும் மீராவின் பாவில் பார்த்து விடுவோம்.

நாளும் பக்தனின் தேகத்திலே
ஹோலி கொண்டாட வருவீரே!

சுநாத தாளமும் மேளமும் வேண்டா;
அநாகத லயத்தை அநுபவிப்போம்!

சுரமற்ற பண்களைப் பாடுவோம்!
சுரரும் பெறு இன்பம் சூழ்ந்திடுவோம்!

சீலந்தோறுமே கோலப்பொடி
காலமற்ற அன்பு பீச்சாங்குழல்
விண்வெட்ட வண்ணம் தெளித்திடுவோம்
கண்ணன் நிறத்தில் மண்ணைக் கரைத்திடுவோம்

மது, மாயா, வெட்கம் உதறிய பின்
இதய மாளிகைக் கதவம் திறந்திடும்
இன்பன் உள்ளே புகுந்(து) இனிதமர்வான்
அன்பர் அறிவைப்பேசு அன்புசெய்வார்

யோகமும் போகமும் கண்ணனிடம் சேர்ந்தது போலவே மீராவிடமும் சேர்ந்து விட்டன. அதனால்தான் சிருங்கார நாயகியாயினும் தான் யோகினியாகக் கிளம்பி விட்டதாகப் பல பாடல்களில் அவள் திரும்பத் திரும்பக் கூறுகிறாள். உலகத்தார் செய்து கொள்ளும் சிருங்கார எழிலை அவள் எவ்வளவு நிர்த்தாட்சிண்யமாகக் களைந்து எறிகிறாள் என்பதைக் காண நமக்கு அச்சமாகக்கூட இருக்கும். ராணா அளித்த பாஜு பந்துவை மட்டுமின்றி, மற்ற சுமங்கலச் சின்னங்களைக் கூடக் கூசாமல் விட்ட சந்நியாசினி அவள்.

யோகியின் அழைப்பு வந்தது
போகிறேன் சடையினை முடிந்து.

சிலம்பைக் கழித்துக் கந்தலை உடுத்து
சில உபதேசம் பெற்றிடுவேன்

என்று மீரா பாடுகையில் 'ஒரு ஞான பத்தினியைத் திசம் மார்புறத் தழுவு மயில்வீரா' என்றும் 'ஒரு குறமான் வனத்தில் மேவியவள் கால்பிடித்து ஓம் எனுபதேசித்தொடமில வோனே' என்றும் அருணகிரி பாடியது நினைவு வரும். மீரா தொடர்ந்து,

துப்பரிய ஜபமாலையும் முத்திரையும்
கப்பரையும் ஏந்திக் காவலனிடம் செல்வேன்
மன்னர் மன்னவனின் சந்நிதானம் பெற
மண்ணுலகெங்கிலும் யோகினியாக அலைவேன்

என்கிறாள்:

ஆனால் இந்த யோகினி போல் விரகத் தீயில் தவித்தவர் யாருமில்லை. சிருங்காரச் சக்ரவர்த்தினியான ஆண்டாள் குயிலை நோக்கிச் சினந்து பாடினாள் அல்லவா? அதை விட உக்கிரமாக மீரா அன்றில் பட்சியை நோக்கிப் பாடியதையும், திடுமென உக்கிரம் மாறி அன்பு மயமானதையும் ஒரு பதாவளியில் பார்க்கிறோம் :

அன்றிலே, அன்பனின் நாமத்தினை
இன்றிலிருந்து சொல்லாதே

விரகிணி உந்தன் குரலினை கேட்டால்
சிறகினை ஒடித்துத் தெருவினில் எறிவாள்

அன்றிலே, உனது குன்றிமணி அலகைச்
சப்பையாக வெட்டி உப்பை அழுத்துவாள்

அவன் என்னுடையவன். அவனுடையவள் நான்
மத்தியில் நீயார், கத்த அவன் பெயரை?

உன்றொலி கேட்டு இன்பன் வந்தெய்திடில்
சின்ன அலகிறுக்கும் பொன்னைக் கவசம் செய்வேன்

அன்றியவிட, சிறகில் நந்தலாலனை நினைவுறுத்தும் காகமே சிறந்த தூதியாக மீராவுக்குத் தோன்றுகிறது. சட்டென்று பாட்டை மாற்றுகிறாள்:

**காகமே நீசற்று வேகமே சென்(று) அநு**
**ராக மடலதனை நாகரனிடம் சேர்**
**''பியன் பியன் என்று இயம்பி இளைக்கிறாள்;**
**ஊணுறக்கம் இல்லை; காணுமி'' என்பாய்.**

விரகத்தில் இப்படியெல்லாம் மீராவை நரக வதை செய்ததுடன் கண்ணன் திருப்திப் பட்டுவிட வில்லை. உலக வாழ்விலும் அவளை வதைக்கக் காலம் வந்து விட்டது!

## அத்தியாயம் 26

# கணகௌரி நோன்பு

அன்று கணகௌரி விரதம்.

ராஜஸ்தானத்தின் அரச போகமனைத்தும் சிறக்கப் பொலிவுற திருவிழா அது. பெண்டிருக்கே அதில் தலைமை ஸ்தானம். மேஷ ராசியில் சூரியன் பிரவேசிக்கும் சித்திரைப் பிறப்பில் கொண்டாடும் வசந்த நவராத்திரிக்கு உயிர் ஊட்டுவது கணகௌரி விரதம். அப்போது அன்னபூரணியாகக் கௌரி தேவியை வழிபடுவார்கள்.

முதலில் தேவியின் பிரீதிக்காக மகாராணாவும், ராஜ குடும்பத்தினரும், ஜாகீர்தார்களும் காட்டுப் பன்றியை வேட்டையாடுவர். பிறகு சித்தோர் நகருக்கு வெளியே இருந்து ஒரு புனித நிலத்திலிருந்து கௌரியின் பதுமை செய்ய மண் கொண்டு வருவார்கள். கௌரியின் பிரதிமை பாங்குற அன்னபூரணியாக அமைக்கப்படும். மிகுந்த மண்ணைக் கொண்டு அவளெதிரே சிறிய உருவத்தில் கப்பரை ஏந்திப் பிச்சை கேட்கும் சிவபெருமானையும் சமைப்பார்கள்! பெண்மகிமைப் பண்டிகையாயிற்றே!

ராஜக்குல மைதானத்தில் ஒரு சிறிய சதுரத்தை அகழ்வார்கள். அதில் தானியம் தூவித் தண்ணீர் வார்ப்பார்கள். வெயில் காயாவிடினும் பதமாக நெருப்பு மூட்டி வெப்பமும் அளிப்பார்கள். முளை விளம்பியவுடன் கோலாகலம்தான்! இறைவனுக்குத் தேவி பிச்சை யிட்டது போலவே, ஆடவர்களுக்குப் பெண்டிர் தானியங்களை வழங்க அவர்கள் அதனைத் தலைப்பாகையில் தரித்துக் கொள்வார்கள். கௌரிதேவி சிம்மாதனத்தில் பவனி புறப்படுவாள். பட்டும் பொன்னும் ரத்தினமும் அவளை ராணியாக அழகு செய்ய, மேவார் ராணியே அவளுக்கு நவரத்தின கசிதமான சாமரம் இரட்டி வருவாள். வேறு பல ராஜஸ்திரீகள் தங்கக் கைத்தடி தாங்கிக் கட்டியம் கூறிச் செல்ல, ராணாவும் குறுநில மன்னர் சூழ தேவியுடன் ஊர்வலம் வருவான். ஊர்வலம் சித்தோரின் மகத்தான ஏரிக் கரையை அடையும்.

அங்கு தேவியின் சிம்மாதனத்தை வைத்து மக்கள் அனைவரும் வழிபடுவர். அதோடு ராணாவையும் ராணியையும் பொதுமக்களோடு சேர்ந்து குறுநில மன்னரும் வணங்குவர். பிறகு பெண்டிர் தேவியைச் சுற்றி வளையமாகக் கைகோத்துக் கொண்டு ஆடிப் பாடுவர். அம்பிகைக்கு ராணியும் மற்ற ராஜஸ்திரீகளும் ஏரி நீரினால் திருமுழுக்காட்டுவார்கள். அதன்பின் ஏரியில் படகுப் போட்டி நடைபெறும். ராணா உட்பட அனைவரும் ஏரியோரமாகவே படகில் சென்று ஆங்காங்கே பிரதிஷ்டையாகி யிருக்கும் தேவியின் பல பிம்பங்களை வழிபடுவார்கள். கடையில் முன்போலவே கோலாகலமாகக் கௌரியின் திருவுருவை அரண்மனைக்கு எடுத்துச் செல்வர். வாண வேடிக்கைகளுடன் விழா முடிவுறும்.

இந்த விழாவில் மீராவும் பங்குகொள்ள வேண்டுமென்று கும்பராணா விரும்பினான்.

''ராஜஸ்தானத்தின் நீண்ட கால சம்பிரதாயங்கள் சேர்ந்து உருவாக்கிய சுப நாள் இது. சிற்றரசர்களும் படைத் தலைவர்களும் பொதுமக்களும் தங்கள் மன்னனுக்கும் அரசிக்கும் தேவியின் திருமுன்னர் அன்புடன் காணிக்கை தரும் தினம் இது. இன்று நீ கௌரியின் பவனியில் கலந்து கொண்டு ஏரிக் கரைக்கு வந்தால் நம் மரபுக்கே அது அழகு. உனக்கும் கௌரவம்'' என்றான் மீராவிடம்.

''ஸ்வாமி, இதைப் பற்றித் தாங்கள் இவ்வளவு சொல்ல வேண்டுமா? எத்தனை எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் என்னுடைய விருப்பங்களை யெல்லாம் நீங்கள் நிறைவேற்றித் தரவில்லையா? உங்களுடைய ஒரு விருப்பத்தை நான் நிறைவேற்றாமல் போவேனா? கட்டளையிட்டாலே போதும். இப்படியேனே!'' என்று மதுரப் பணிவுடன் மீரா கூறினாள்.

''என் மீராவே மீரா'' என்று அகமகிழ்ந்தான் கும்பாஜி.

நகராக்கள் முழங்க நகர பவனி வந்தாள் கௌரிதேவி. மீராவின் தந்தக் கை அவளுக்குத் தங்கச் சாமரம் வீசும் அழகைக் கண்டு வானில் பறந்த வண்ணப் புறாக்களும்



''உங்களுக்காகவே ஸ்பெஷலாக புல்-பார்லி அரிசியிலே பொங்கல் பண்ணியிருக்கேன். சாப்பிட்டு விட்டுப் பிறகு உங்கள் பென்ஷனுக்குப் போங்கள்.''

வெட்கின. அன்புருவான அரசி நாட்டின் மரபை மதித்து உடன் வருவதில் மக்களுக்கெல்லாம் அன்று சொல்லி முடியாத ஆனந்தம். உதயா அப்படியே மீராவை ஆரத் தழுவிக் கொண்டு விட்டாள். ''இன்று போல் நீ என்றும் இருக்க தேவி அருளட்டும்'' என்று சௌபாக்யதேவி நாத் தழுதழுக்கக் கூறினாள். மாற்றுப் பெண்ணின் 'பைத்தியம்' தெளியத் தொடங்கியதில் அவளுக்கு அவ்வளவு திருப்தி.

ஆனால் பைத்தியம் பிடிக்கச் செய்வது தானே பகவத் லீலை? ஒளியில் இருளைப் பரப்புவதுதானே இறைவனுக்குப் பிடித்த விளையாட்டு ?

ஊர்வலம் ஏரிக்கரையை நெருங்குகையில் நிர்மலமாக வெயில் வீசிக் கொண்டிருந்த வானில் கருமேகங்கள் கூடின. ஆம்,ஒளியில் இருள் சூழத் தொடங்கியது!

மீரா வானத்தைப் பார்த்தாள். கருமுகிலைக் கண்டபின் அவள் எப்படிக் கண்ணனை நினையாதிருக்க இயலும்? போதாதற்கு அதில் வான வில் வேறு! மயில் பீலியேதான், சந்தேகமில்லை! பாழாகப் போகிற காற்று வேறு ஏரிக்கரை மூங்கில் புதரில் பாய்ந்து குழலிசையை உண்டாக்கி விட்டது. இதற்கெல்லாம் முத்தாய்ப்பாக, நகராக்களின் ஒலியையும் மீறி இடி முழங்கியது. ஆம், கண்ணன்தான் சினந்து அதட்டுகிறான். ''நீ உண்மையாகவே ராணாவின் ராணிதானா?'' என்று மிரட்டுகிறான்.

மீராவின் இதயம் பதைத்தது. நாத் துடித்தது. உதடு உலர்ந்தது. கண்கள் படபடத்தன.

''இல்லை, இல்லை. நான் ராணாவின் ராணி இல்லை; அன்றும் இன்றும் என்றும் உன் அடியாள்தான் கிரிதரா! வந்தேன் ப்ரபு; உன்னிடம்'' என்று உரக்கவே கூறினாள்.

சாமரத்தை அப்படியே போட்டாள். சூழ்ந்திருந்த பெண்களையெல்லாம் இடித்துத் தள்ளிக் கொண்டு ஓடத் தொடங்கினாள். மேவார் மகாராணி சித்தோரின் வீதிகளில் தனியளாக கிரிதரனின் ஆலயத்தை நோக்கி வெறி பிடித்தவள் போல் ஓடலானாள்.

ஊர்வலம் ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றது. கும்பராணா தன்னுடைய சமநிலை அவ்வளவையும் வரவழைத்துக் கொண்டான். குழுமியிருந்தவர்களைப் பார்த்துக் கம்பீரமாக, ''ஊர்வலம் தொடரட்டும். தேவி வழிபாடு தடைப்படாமல் நடக்கட்டும். சிருங்கார தேவி சாமரம் இரட்டி வரட்டும்'' என்றான்.

மீராவின் இடத்தை ராய்மல்லின் பத்தினி பெற்றாள். விழா தொடர்ந்தது. ஆனால் அனைவர் உள்ளத்தின் அடி ஆழத்திலும் இனம் தெரியாத அச்சமும், அருவருப்பும், வெட்கமும் நிறைந்திருந்தன.

ஏரிக்கரையில் தேவி வழிபாடு நடைபெறும் போது, சித்தோருக்குள் கிரிதரன் அதைவிட விமரிசையாக வழிபாடு பெற்றுக் கொண்டிருந்தான்.

வீதியோடு சென்ற மீராவின் கானம், ஊர்வலத்தில் கலந்து கொள்ளாத அனைவர் உள்ளத்தையும் கவ்வி இழுத்தது. அவர்களும் மீராவைத் தொடர்ந்தனர். இதமான இதயங்கள் தன்னைச் சூழ்ந்தவுடன் மீராவின் குற்ற உணர்ச்சியும் குன்றித் தேய்ந்தது. ஓட்டமும் நடையாயிற்று. தெருத் தெருவாகப் பஜனை செய்து கொண்டு மீரா நடந்தாள். கண்ணனை விட்டு இன்னொன்றைத் தேடிச் சென்றதை நினைத்துப் பாடினாள்:

ராதாக்ருஷ்ணனின் நாமத்தையன்றி
ஏதால் நாவே பிறபொருளை

அக்காரமதனைத் திக்காரம் செய்து
கசக்கும் வேம்பினை ருசிப்பாரோ?

கதிரவனொளிக்கு முதுகினைக் காட்டி
மின்மினி ஒளியை நண்ணுவரோ?

மாணிக்கம் வைரத்தைப் பூண மறுத்துக்
கண்ணாடி மணியின் பின்செல்வரோ?

உடற்கிடா உயிரை எடை நிறுப்பாரோ?
கிரிதரர்க்கிடாய் பிறிதுமுண்டோ ?

என்று கானம் செய்தாள். அந்தக் கிரிதரனே தன் எசமானன் என்பதை நினைந்து. ''மீரா ப்ரபு கிரிதாரி'' என்று திரும்பத் திரும்பக் கோஷித்தாள். அதில் ஊராரும் கரைந்து கொண்டனர். வானமும் மந்திர புஷ்பமாக நீர் தெளித்தது. நீரிலும் ஒளிவண்ணத்திலும் நனைந்தவாறு, ''மீரா ப்ரபு கிரிதாரி'' என்ற ஒலி விண்ணை எட்ட அனைவரும் ஆலயம் சேர்ந்தனர்.

அவர்களில் காதை மறைத்து முண்டாக கட்டிய ஓர் ஆண்டியும் இருந்தார். அவரது கண்களிலும் கதியிலும் பக்தியை விட அதிக அச்சமும் கள்ளத்தனமும் நிறைந்திருந்தன. இவரை எங்கோ நாம் பார்த்திருக்கிறோமே!

## அத்தியாயம் 27

# நஞ்சும் அமுதும்

கோயிலை அடைந்து, கண்ணனைப் பார்த்ததுமே மீரா, கைக்கு மெய்யாய் அவனைப் பிடித்து விட்டதுபோல் பாடத் தொடங்கினாள் :

கனகௌரி நோன்பின்று
கணவனும் வந்தருள்வான்

கனவேகத்துடன் கொண்டல் குமுறுது
கணமிடிக்கிடையே மினுக்குது மின்னல்
தாதூரம் அன்றிலும் மயிலும் கூவிட
ஆதுரமாய் குயில் அகவுதுவே

திருநாள் இன்றும் திரும்பிப் பாராயோ?
திருவடியில் எனைப் பொறுத்திக் கொள்ளாயோ?
மீராவின் ப்ரபுவே, கிரிதர நாகரனே
ஊரார் போல் நான் சேர்வேனோ பதியை ?

ஊரார் யாரை இவளது பதியாக எண்ணினார்களோ அவனை விட்டோடி வந்தே இப்படிப் பாடினாள் மீரா!

காதை மறைத்துத் தலைப்பாகை கட்டியிருந்த ஆண்டி மீராவிடம் வந்து வணங்கினார். ஏழையராகத் தோன்றிய அவர் கையில் முத்தாரம் ஒன்று மினிர்ந்தது. அதன் மையத்தில் ஒரு பெரிய வைரமும், அதில் தொங்கட்டானாக ஒரு ஸ்படிகமும் ஒளிவீசின.

"தாயே, எனக்கு ஜபமாலையாகக் குருநாதன் கொடுத்த ஆரம் இது. இனி எனக்கு ஜபத்தால் அவசியம் இல்லை. இதை கிரிதாரிக்கு அணிவியுங்கள்" என்று மீராவைப் பணிவுடன் கேட்டுக் கொண்டார் அவர்.

விஷயமறியா மீராவும் மகிழ்வுடன் அதை வாங்கிக் கொண்டாள். "சாதுவே! அவன் முத்துப் பல்லைக் காட்டி நகைக்க ரொம்பவும் பிகு செய்து கொள்கிறான். அந்தக் குறையை இந்த முத்தாரம் தீர்த்து விடும்" என்று சொல்லி மாலையை வாங்கிக் கொண்டாள். கிரிதரனுக்கு அதனை மண மாலை போல் இட்டு அழகு பார்த்தாள்.

சாதுவோ இவள் அழகையே பார்த்துக் கொண்டு நின்றார்.

நடுநிசி. கணகௌரி வைபவங்களும், கிரிதரன் ஆலய ஆர்ப்புக்களும் ஓய்ந்து ஊர் உறங்கியது. ராணா உறங்கவில்லை. அவமானத்தில் குமைந்த அவன் மீராவிடம் தன் மனத்தைத் திறந்து காட்டப் புறப்பட்டான்.

மீராவுக்கும் உறக்கம் கொள்ளவில்லை. ஆனால் அவள் இன்பச் சூழலில் சிக்கிக்கொண்டிருந்தாள். அவள் பிரார்த்தித்துக் கொண்டபடியே அன்று கண்ணன் அவளுடைய கணவனாக எழுந்தருளியிருந்தான். அவனுக்காக அவள் அறுசுவை விருந்து தயார் செய்து பரிமாறிக் கொண்டிருந்தாள். ஏழுசுவை நிறைந்த கானத்தையும் பரிமாறினாள்:

திரு அமுது கொள்வாய்
கிரிதர லாலனே !
உவந்தே அடியாள் உபசரிக்கின்றேன்
செவிசாய்த்தருள்வாய்! செல்வத் தலைவா !
ஐம்பத்தாறு விதம் அன்னமிட்டேன்;
முப்பத்தாறு வ்யஞ்சனமும் வைத்தேன்;
அகில உயிர்க்(கு) உண(வு) ஈந்தருளும்
சகல நாயகா, மகிழ்ந்துண்பாய்

திருமுகத்தெதிரே தாலமிட்டேன்
அறுசுவை உண்டியை அருந்திடுவேன்
அரசபோகமதை அநுபவிப்பாய்
தரிசனப் பேற்றினை எனக்களிப்பாய்

கண்ணன் உண்ணவில்லை. கணகண வென்று நகைக்க மட்டும் செய்தான். வெளியே ஆலயக் கதவின் மணிகளும் கண கண என்று ஒலித்தன. மீரா எழுந்து சென்று கதவைத் திறந்தாள். ராணாதான் அங்கு நின்றான். சப்பாத்திப் பழமாக அவன் முகம் சிவந்திருந்தது. சூழ்நிலைதான் எப்பேர்ப்பட்ட மாற்றங்களை உண்டாக்கிவிடுகிறது! நெருப்பில் நீராய் உருகிக் கொண்டிருக்கும் பாகு தண்ணீரில் விட்டவுடன் கல்லினும் கடினமாகிவிடுகிறதல்லவா? உருகிய ராணாவும் இறுகும் நாள் வந்துவிட்டது.

"இங்கே யார் சிரித்தது?" என்று அவன் கேட்ட போது அவன் குரலில் விஷ ஜ்வாலையே வீசிற்று.

அமுதமும் ஆலகாலமும் உடன்பிறப்பல்லவா ? அமுதும் ஒரே நொடியில் நஞ்சாகி விடும் போலும்! அன்பு ராணா விஷ ஜ்வாலை கக்கினான் !

"ஏன், கண்ணன் தவிர வேறு யார் அப்படிக் கீத கிண்கிணியாகச் சிரிக்க முடியும்? அதோ!" என்று கூறியவாறு மீரா திரும்பினாள்.

ஆனால் அந்தப் பொல்லாத கண்ணன் மறைந்து விட்டான். ஏனென்று கேட்க முடியுமா? வெண் சங்கத்தைச் சுட்டுச் சுட்டே தூய்மையாக்குபவன் அல்லவா அவன்?

விக்கிரகம் மட்டுமே நின்றது. அதன் கழுத்தில் தொங்கிய முத்துமாலையை, வைரமும் ஸ்படிகமும் இழைத்த அதன் பதக்கத்தை, கண்டவுடன் துணுக்குற்றான் கும்பாஜி.

ஆலயத்தின் மறுபுறம் திறந்திருந்த கதவத்தை ஐயத்துடன் நோக்கிய ராணா, "யாருக்கு இங்கே பரிமாறியிருக்கிறது ?" என்று உள்ளுக்குள்ளேயே சிக்கிக் கொள்ளும் குரலில் கேட்டான்.

மீராவோ பச்சைக் குழந்தை போல் நிர்மலமாக, "என் பிரபு கிரிதரனுக்குத் தான். அவன் திருஅமுது கொள்ளும் அழகை நான் பார்க்கவொட்டாமல் சமயத்தில் வந்து கெடுத்து விட்டீர்கள்! இந்த நடுநிசியில் வந்திருக்கிறீர்களே, என்ன விஷயம்?" என்று கேட்டாள்.

அவள் குரலின் தூய்மை ராணாவின் நெஞ்சைப் பிளந்தது. தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டான்.

'கண்ணன் நேரில் வருவதாவது? சிரிப்பதாவது? உண்பதாவது? இவள் ஏமாற்றுகிறாளா? இல்லை, பாவம் மீரா ஏமாற்றமாட்டாள். ஆனால் பச்சைக் குழந்தையான இவளை ஏமாற்றியிருக்கிறானோ?' — கும்பனுக்குப் புரியவில்லை.

கீதகோவிந்த காவியத்தில் மனமாரத் திளைத்து, கண்ணன் இவ்வுலகிலேயே ராதையோடு கூடியும் ஊடியும் லீலை புரிந்ததையெல்லாம் விமரிசனம் செய்தவன் ராணா. எனினும், அவனால் கண்ணன் மீராவுடன் நேருக்கு நேராக உரையாடுவதையும் உண்பதையும் நம்பத்தான் இயலவில்லை.

ஏன் அப்படி? அது மனித உள்ளத்தின் ஒரு மர்மம். நாம் நாடக மேடையில், சீலையில் எழுதிய ஒரு தெருக்காட்சியைப் பார்ப்போம். நாடகம் நடக்குமளவும் அச்சீலை

---

சக்கரவர்த்தி நெப்போலியனின் நெருங்கிய சிநேகிதர் ஒருவர் ஒரு விசித்திரமான வேண்டுகோளுடன் அவரை அணுகினார்: "கிளப்பில் ஒரு சர்ச்சை கிளம்பியது. நீங்கள் உங்கள் சுருட்டிலிருந்து என் சுருட்டைப் பற்ற வைத்துக்கொள்ள அனுமதி கொடுப்பீர்கள் என்று சொன்னேன். அது ஒருகாலும் நடக்காது என்று பந்தயம் கட்டியிருக்கிறார்கள். நீங்கள் எனக்கு உதவ வேண்டும்."

"பேஷாக உதவுகிறேன், பந்தயம் எவ்வளவு?" என்றார் நெப்போலியன்.

"இரண்டு பவுன்!"

நெப்போலியன் இரண்டு பவுனை எடுத்துக் கொடுத்தார். "இதைக் கொண்டு போய்க் கட்டு. நீ பந்தயத்தில் தோற்று விட்டாய்" என்றார்.

வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி
ஆதாரம் : 'டிட் - பிட்ஸ்'



''ராகம், தானம், பல்லவின்னு என்னவாம்?''

''மாசா, மாசம் டியூஷன் பீஸ்-க்காக உங்கப்பாவிடம் ஒரு குரல் அழுறனே அது ராகம். பிச்சைக்காரனுக்குப் போடற மாதிரி சம்பளத்தை வீசி எறிகிறாரே அது தானம். அடுத்த மாசத்துச் சம்பளத்துக்காக உங்க அப்பாகிட்டே மறுபடியும் அழுறேனே அது தான் பல்லவி!''

---

உண்மையான சாலை என்றே நம் புத்தி நம்பும். கலையுலகில் பிரவேசித்ததும் நாமே மனமார அவநம்பிக்கையை விட்டுவிடுவோம். Willing suspension of disbelief என்று இதைத்தான் சார்லஸ் லாம்(ப்) சொல்கிறார். ஆயின், நாடகம் முடியட்டும்; அடுத்த கணமே அந்தச் சிலையைத் சாலையாகப் பார்க்க முடியாமல் போகும். கலை உலகும் தெய்விக உணர்வும் ஒன்றிய நிலையில் கும்பராணா கீதகோவிந்தத்தில் பிரவேசித்தான். அப்போது அவனால் அதில் வரும் கண்ணன் காதல் சம்பவங்களை மனமார நம்ப முடிந்தது. ஆயினும் அதே சம்பவங்களைப் பிரத்தியட்சத்துடன் பொருத்திப் பார்க்க அவனால் இயலவில்லை.

மீராவுக்கு இடம் கொடுத்து ராஜ்யத்தின் பெயருக்கே, குலத்தின் பெருமைக்கே, குடியின் மேன்மைக்கே இழுக்குத் தேடி விட்டோமோ என்ற குற்ற உணர்ச்சி ராணாவைப் பிடுங்கி எடுத்தது. மீரா குற்றவாளியா, தானே குற்றவாளியா என்று அவனுக்குப் புரியவில்லை. தலையை அழுத்தியபடி அப்படியே சமைந்திருந்தான்.

மீராவால் அவன் நிலையை உணர முடியவில்லை. அவனுடைய மனத்தில் பஞ்சுப் பொதிகளைப்போல், சிறுசிறு மேக மந்தைகள் போல் திட்டுத் திட்டாக ஏதேதோ தோன்றி வியாபித்தன. அமைதி தேடி, ரவிதாஸர் உபதேசித்த ராம மந்திரத்தை ஜபிக்கலானாள். அப்படியே கற்சிலையானாள்.

மீராவையும் உண்கலத்தையும் பார்க்கும் போது ராணாவுக்கு அழுகைதான் வந்தது. 'ஐயோ, இப்படியும் ஒருத்தி வெள்ளையாக, பயமில்லாமல் உட்கார்ந்திருக்கிறாளே!' என்று எண்ணினான். அந்தத் தாலத்தை வேறு யாரேனும் பார்த்து விடப் போகிறார்களே என்ற அச்சம் அவனுள் ஈட்டியாகப்பாய்ந்தது. 'மீரா எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். அவளை இப்படி மட்டும் உலகம் நினைத்து விடக் கூடாது' என்று கருதி அந்தத் தாலத்தைக் கும்பனே அப்புறப்படுத்தினான். அவனுக்குச் சிரிப்பு வந்தது! தான் கதவத்தைத் திறக்கும் போது சிரித்தவனும் இப்போது சேர்ந்து சிரிப்பது போல் இருந்தது. தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அமர்ந்தான்.

நீண்ட நேரம் ஓடிற்று.

மணிக் கதவம் மீண்டும் கணகணத்தது.

ராய்மல் அவசர அவசரமாக ஆலயத்துள் நுழையும் போது காற்றில் அலைந்த அவனது ஆடை பட்டுத்தான் கதவின் மணிகள் கிணுகிணுத்தன.

''அப்பா, நடக்கக் கூடாதது நடந்து விட்டது'' என்றான் ராய்மல்.

ராணா தலையைப் பிடித்த கைகளை நீக்கவில்லை; ராய்மலின் முகம் தூக்கிப் பார்க்கவும் இல்லை.

ராய்மல் பதற்றத்துடன் தொடர்ந்தான்:

''அப்பா, மாளவசுல்தான் கில்ஜிக்கு நீங்கள் தயவுகாட்டியது பாம்புக்குப் பால் வார்த்த காரியமாகிவிட்டது. அவன் சித்தோர்க் கோட்டைக்குள்ளேயே ஆண்டி வேடத்தில் புகுந்து இஷ்டப்படி உளவுகள் பார்த்திருக்கிறான். இந்த நள்ளிரவில் சித்தோர்கர் பக்கத்தில் ஒரு சாது உலவுவதைப் பார்த்து நம் வேவுகாரர்கள் ஐயுற்றிருக்கிறார்கள். அவன் காதை மறைத்த முண்டாசு விலகியபோது, அவன் காது குத்தப்படாத ஒரு முஸ்லிம் என்று தெரிந்ததாம். அதையொட்டி அவன் கில்ஜி என்று கண்டுபிடிப்பதில் சிரமமிருக்கவில்லை. ஆனால் அவன் அத்தனை பேர் கண்ணிலும் மண்ணைத் தூவி விட்டுக் குதிரையேறி நம் எல்லையைத் தாண்டி விட்டான். அப்பா சொல்லவே நாத் தயங்குகிறது. அவன்.... அவன்..... ஆண்டி வேஷத்தில் இதோ இந்தக் கோயிலுக்குள்ளேயே...''

தலைக்கு மேல் வெள்ளம் வந்தபின் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன?

''தெரியும் குழந்தாய்'' என்றான் கும்பன் பதற்றமின்றி.

''தெரியுமா? எப்படித் தெரியும்?'' என்று படபடத்தான் ராய்மல்.

கிரிதரநாகரனின் கண்டத்தில் தொங்கும் முத்துமாலையைச் சுட்டிக்காட்டினான் கும்பாஜி.

ராய்மலின் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை உள்ள அணுக்கள் ஆட்டங்கண்டன.

'ஆகா! இது கில்ஜிக்கு மகாராணா அளித்த பரிசல்லவா? 'நீங்கள் சந்திரப் பிறையைத் தொழுபவர்; சந்திரனுக்கு அடையாளமாக இதில் ஒரு ஸ்படிகம். நாங்கள் சூரிய வம்சத்தினர். சூரியனுக்கு அடையாளமாக இதோ ஒரு வைரம். மாலை போட்டு மணம் செய்து கொள்வது போல் நம் இரு ராஜ்யங்களும் இந்த மாலையால் ஒன்றுபடட்டும்' என்று கூறிக் கும்பராணா முகமது

இல்ஜியின் கழுத்தில் இந்த ஆரத்தை அணிவித்தார். அது எப்படி விக்கிரகத்தின் கழுத்தில் வந்தது ?"

"என்ன புத்திசாலி ராய்மல்! உனக்குக் கூடப் புரியவில்லையா? உன் அப்பாவின் மண்டையில் செம்மையாக இரண்டு அடிகள் விழுந்து விட்டன. முகமது இல்ஜி அவர்கள் கிரிதர நாகரனிடம் பெரும் பக்தி கொண்டு உன் சித்தியிடம் இதைப் பரிசாகத் தந்திருக்கிறார். நான் 'உதார'மாக இருந்தது ராஜ தர்மத்துக்கு எவ்வளவு விரோதம் என்று எடுத்துக்காட்டி என் மண்டையில் அடிப்பதற்கே முகமது இல்ஜி சித்தோருக்கு மீண்டும் வந்து, அதற்கு அடையாளமாக இதைக் கொடுத்துப் போயிருக்கிறான். என் 'உதார' குணத்தினால் பதி தர்மத்தை நான் விட்டதை என் மண்டையில் அடித்துக் காட்டுவதற்காக உன் சித்தி இதைக் கிரிதரனுக்குச் சூட்டியிருக்கிறாள்" என்றான் ராணா — அவனது உடலில் ஒரு கம்பனம் பரவியது.

ராய்மல் சித்தியைப் பார்த்தான்.

சித்தியோ சித்தத்தை ராமன்பால் வைத்து, பாராது பார்க்கும் பரமாநுபவத்திலேயே இன்னமும் மூழ்கியிருந்தாள்.

"ராய்மல்! எனக்கு மூளை ஸ்தம்பித்து விட்டது. உடலும் செயலிழந்து விட்டது. இப்போது என் குற்றங்களை நீ எடுத்துக் காட்டினால்கூட அவற்றை நான் நன்றாகப் புரிந்து கொண்டு துடித்துப் பச்சாத்தாபப்பட முடியாது. ஆகையால் இப்போது என்னிடம் ஏதுமே பேசாதே. என்னை மாளிகைச் சயனத்துக்கு அழைத்துப் போ, அப்பனே" என்றான் ராணா.

புஜபல ராக்கிரமசாலியான தந்தை போர்க்களம் புகாமலே வைக்கோல் துரும்பாகி விட்டதைக் கண்டு ராய்மலின் நெஞ்சு குமுறியது. குழந்தையைப் பிடித்துத் தூக்கிச் செல்வது போல் தந்தையை அணைத்து ஆலயத்தை விட்டுக் கிளம்பினான்.

மறு நாள் காலை மகாராணாவின் திராணி மீண்டது. அதுவும் பயங்கரமாக மீண்டது. அவன் அழைத்திருந்தபடி பாய்ஜிராஜாவும் ராஜபேடியும் ராஜ குமாரனும் பிரதான மந்திரியும் அந்தரங்க ஆலோசனைக்காக வந்து விட்டனர். சண்டன் மட்டும் இன்னும் வரவில்லை. அவர் ஏன் வரவில்லை என்பதை அறிந்து வர ராய்மலை அனுப்பினான் ராணா.

சண்டன் அவரது மாளிகையில் இருக்கவில்லை. எங்கெல்லாமோ தேடிய ராய்மல் துர்காபரமேசுவரியின் சந்நிதியில் அவரைக் கண்டான்.

தேவியின் முன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தெழுந்த பெரிய தாத்தாவை நமஸ்கரித்தான் ராய்மல்.

"தாத்தா.... என்பதற்கு மேல் அவனால் எதுவும் பேச முடியவில்லை.

"நேற்று இரவே எனக்கும் சாரர்களிடமிருந்து செய்தி வந்து விட்டது. ஸௌம்யா! நீ எதும் சொல்ல வேண்டியதில்லை! மிலேச்சன் நம் நகரக் கோயிலுள் புகுந்துவிட்டான்; மகாராணியை வஞ்சித்து விட்டான். இது நம் குலத்துக்கே களங்கம். இதற்குப்




பிராயச்சித்தம் ஒரு 'பிராணத் தியாகம் தான். துர்காதேவியின்' முன் நான் பிராயோபவேசம் செய்து உயிரை விடுவேன். மேவாரின் பெருமைக்கு மரணத்திலும் உதவிய பாக்கியத்தைப் பெறுவேன். என் பிராயோபவேசத்தின் காரணம் நம்மைத் தவிர யாருக்கும் தெரிய வேண்டாம்" என்று கூறி அந்த முதுபெரும் கிழவர் ஜகன்மாதாவின் முன்பு அப்படியே வடக்கிருந்து உண்ணா நோன்பு தொடங்கி விட்டார்.

ராய்மல் வந்து ராணாவிடம் இதை அறிவித்ததுதான் தாமதம். ராணா தன்னிலையை முற்றிலும் இழந்து விட்டான். மென்மையான நீர்த் துளிகள் சூளையின் கமுக்கத்தில் இடியாகிவிடவில்லையா? அப்படிப்பட்ட ஓர் இடியாகவே ஆகிவிட்டான் கும்பராணா.

"ஏன் இது யாருக்கும் தெரிய வேண்டாம்? தெரிந்தேதான் ஆகவேண்டும். இந்த நாட்டில் சாமானிய பிரஜைகள் செய்த குற்றத்துக்கெல்லாம் பகிரங்கமாகத் தண்டனை விதிக்கும்போது ராஜ குடும்பத்தினரின் விஷயம் என்பதால் இதை மட்டும் ஏன் மூடி வைக்க வேண்டும்? ராய்மல், மேவாரின் அதிதேவதைக்கு இன்று உயிரோடுகிறது எனில் அதற்குக் காரணமாயுள்ளவர் தாதா சண்டன்ஜி. அவரது உயிர்ப்பலி உத்தேசத்தையும் அதன் காரணத்தையும் மறைத்து ஒன்றும் ஆக வேண்டியதில்லை. ஆம், இனி ஒளிவு மறைவே வேண்டாம். இப்போதே நம்முடைய யானைப் படைத் தலைவனுக்கு உத்தரவு அனுப்பு. எதிரிக் கோட்டைகளைத் தாக்கும் போது யானைகளுக்கு எப்படிப் போதையேற்றி அவற்றின் துதிக்கையில் உலக்கைகளைக் கொடுத்தனுப்புவோமோ, அப்படியே நூறு யானைகளை அனுப்பி அந்தக் கிரிதரன் கோயிலை இடிக்க வேண்டும் என்று கஜபதிக்கு உத்தரவிடு. போ!"

ராய்மல் பேசாமல் நின்றான்.

"ராவல்ஜியின் கட்டளை" என்று உறவுப் பசையற்ற குரலில் கும்பன் உறுமினான்.

சீதாதேவி தீக்குளிப்பதற்காக அக்கினி மூட்டிய லக்ஷ்மணனின் நிலையில் ராய்மல் அகன்றான்.

மதம் பிடித்த யானைகள் நெருங்கி வருவதைக் கண்டு ஆலயத்தில் கூடியிருந்த சாதுக்கள் அஞ்சி நடுங்கினார்கள்.

மீராவோ தெளிவாகப் பேசினாள். "கோயிலைக் கட்டிய மன்னர்தான் இடிக்கச் சொல்கிறார். கோயிலைக் கட்டும் எண்ணத்தையே அவருக்கு எழுப்பிய இளவரசர்தான்

இதோ இடிக்க வருகிறார். அவர்களுக்கு அந்த உரிமை உண்டு. உங்களுக்கு உயிர் மேல் ஆசையிருந்தால் வெளியேறுங்கள். நான் என் கிரிதரனுடனேயே — அவனுக்கு ஆவது எனக்கும் ஆகட்டும் என்று — இருப்பேன். அவன் தீனஜன பரிபாலகன், ஆபத்பாந்தவன் என்பதை உங்களில் பூரணமாக நம்புபவர்களும் இங்கிருக்கலாம்'' என்று சொல்லிப் பாடினாள்.

அறிந்தது இல்லையோ, ஹரி
ஆபத்(து) உத்தாரணன்
அனைத்துக்கும் காரணன்

வாரணம் அலறிட விரைந்(து) இன்னலே -- நி
வாரணம் செய்தவன் நாரணன் அன்றோ?
துருபதன் மகளுக்குத் துகிலினை அளித்து
கருவ து:சாஸனனை வெருவச் செய்தான் அன்றோ?
சரணம் புகுந்திட்ட ப்ரஹ்லாதனுக்காய்
இரணியன் உரத்தைப் பிளந்தவன் அன்றோ?
அகலிகை மீது பாதமிட்(டு) அவள் மா(சு)
அகலவே அருளிய பகவனும் அன்றோ?
ஏழைக் குசேலனுக்(கு) ஏழுலகும் அறிய
வாழ்வினைத் தந்த வள்ளலும் அன்றோ?
நையும் மீரா அவன் அன்பில் கைநாளுள்.
கைகொடுக்க நாழிகை செய்குவானோ?

ஆலயத்தை விட்டுப் பலர் வெளியேறினர். கிரிதரனுக்கு நேர்வது தனக்கும் நேரட்டும் என்று மீரா இருந்தது போல், மீராவுக்கு நேர்வது தங்களுக்கும் நேரட்டும் என்று சிலர் கோயிலினுள்ளேயே தங்கியிருந்தனர்.

ஆனால் எதுவுமே நேரவில்லை.

வாரணத்தை நாரணன் காத்த கதையை அந்த வாரணப் படை புரிந்து கொண்டு விட்டது போலும்! மத்த வெறியையும் மீறிய மதித் தெளிவுடன் யானைகள் ஆலயத்தின் வெளியே உலக்கைகளை எறிந்து விட்டு, தும்பிக்கையை வளைத்துக் கும்பிட்டன.

''என்ன! யானைகள் ஆலயத்தைத் தாக்க மறுத்தனவா ?'' என்றான் ராணா. விந்தை மீறும் விந்தையாக அவனுக்கு ஆத்திரம் முன்னிலும் பெருகியது. மீரா மேலும் மேலும் தனக்குத் தோல்வி கொடுக்கிறாள் என்றே அவனது ஆண் நெஞ்சு கருதியது.

''இதோடு விட்டு விடு; அவள் சூனியக்காரி. ஏதோ மாயமந்திரம் செய்கிறாள். அவளைப் பகைத்துக் கொண்டால் நமக்குத் தான் உற்பாதம் வரும்'' என்று சௌபாக்கியதேவியும் உதயாவும் முறையிட்டனர்.

''ஒரு நாளும் முடியாது. அவளுக்கு நான் பணிவதில்லை. என்னை எப்படியெல்லாம் மாய மந்திரம் கொண்டு அவளால் ஆட்டி வைக்க முடியுமோ, அவ்வளவும் செய்யட்டும்; நானும் அதற்கு மந்திரத்தால் எதிர் செய்வேன். அதோடு மன்னனாக உலக ரீதியில் என்ன செய்ய வேண்டுமோ அவ்வளவும் செய்வேன்'' என்று வெறி கொண்டு ஆர்ப்பரித்தான் கும்பன்.

பக்தி வெறி அவனுக்குப் பூரணமாகப் பிடிப்பது அசாத்தியமாயிற்று. கோப வெறியோ முழு உருவுடன் அவனில் ஆர்ப்பரித்தது! மீராவை மணந்ததிலிருந்து அவளிடம் அடைந்த ஏமாற்றங்களையெல்லாம் தானே அறியாமல் உள்ளத்தின் அடித்தளத்தில் அடைத்து வைத்திருந்தான் போலும்! எரிமலை வெடித்து விட்டது!

''நம்முடைய மந்திரவாதியைக் கூப்பிடுங்கள். அந்த சூனியக்காரியிடம் போய் அவன் சர்ப்ப மந்திரம் ஜபித்துப் பாம்பை வரவழைத்து ஏவட்டும்'' என்றான்.

அப்படியே மந்திரவாதியும் கூடையுடன் சென்றான். அவன் ஜபித்து முடித்ததும் கூடையைத் திறந்து கொண்டு பாம்பு வரவேண்டும்; அதை அவன் மீராவின் கழுத்திலிட வேண்டும் என்று ஏற்பாடு. மீராவுக்கு ராணா மரணத் தாலி கட்டுவதாக அதற்குப் பொருள். ஆனால் அவன் உச்சாடனம் முடித்ததும் கூடையில் எந்த அசைவும் இல்லை. முத்துக் கொத்துப் போல் துல்லியமாக விளங்கிய மீரா தானாகவே கூடையைத் திறந்தாள்.

ஆகா, அதற்குள் பாம்பில்லை. ஆனால் எவனுக்குப் பாம்பு அணையோ, எவனுக்குப் பாம்பு சிம்மாதனமோ, எவனுக்குப் பாம்பு குடையோ, அவனே சாலிக்கிராமமாகக் கூடையுள் பொலிந்தான். ஆதியிலே குழந்தை மீரா கல்லைத் தொட்டாள்; சாலக்கிராமமாயிற்று. இன்று மீண்டும் விஷ நாகம் வர வேண்டிய இடத்தில் அதுவே வந்தது.

மந்திரவாதி மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஓட்டம் பிடித்தான்.

''முடியாது. நான் ஒருகாலும் தோற்றுப் போக முடியாது'' என்றான் ராணா.

மனத்தில் ஆணவப் பேயாட்டத்துக்கு இடம் தந்த கும்பன் பேயுலாவும் காராக்கிருகம் ஒன்றில் மீராவை அடைத்தான். ''இந்த நாட்டைக் கெடுக்க வந்த கிரிதரனையும் அதில் சிறை செய்யுங்கள்'' என்று கூசாமல் முழங்கினான். மீராவோ காராக்கிருகத்தையும் பிருந்தாவனமாக்கக் கண்ணன் விக்கிரகம் வந்ததே என்று பூரித்தாள்.

கண்ணனுடன் கூடிச் சிறையிலும் மீரா கூத்தாடியது ராணாவின் நெஞ்சத் தீயில் நெய் வார்த்தது. அன்று 'சயனத்தில் ஈட்டி முனைகள்' என்று மணவறையில் அவள் பாடிக் கிரிதரனுக்கு ஏங்கியது இன்று ராணாவின் உள்ளத்தில் ஈட்டியாகக் குத்தியது. உண்மையிலேயே ஈட்டிப் படுக்கை ஒன்றைத் தயாரித்து மீராவுக்கு அதனை அனுப்பி வைத்தான்.

ஆனால் ஈட்டிப் படுக்கையில் மீரா சயனிக்க அதுவே மலர்ப் பாயலாயிற்று. விரகதாபத்தில் இந்நாள்வரை உறக்கம் கொண்டிரா மீரா நிம்மதியாக நித்திரை செய்தாள்.

''நாங்கள்தான் சொன்னோமே, அவள் ஒரு பேய்'' என்று கும்பனிடம் அன்னையும் தங்கையும் கூறினர். ஆனால் அவர்கள் வார்த்தையைக் கேட்கும் நிலையில் ராணா இல்லை.

மீராவிடமே அவர்களும் சென்று அவளுடைய போக்கை விடும்படி நயமாகக் கேட்டுக்கொண்டனர். அவளோ பிடிவாதமாக, ''நீங்கள் உங்கள் வழி செல்வதை நான் தடுக்கவில்லை. என்னை ஏதும் செய்

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 18-00 | 9 00 |
| இலங்கை | 30 00 | 15-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40-00 | 20-00 |

தனிப் பிரதி விலை 35 காசு

---

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

*மானேஜர்:*

கல்கி காரியாலயம் - சென்னை-10



வெளியே காட்டிய கோபம் மன்னிப்புக்கு வழி தேடும்; உள்ளேயடக்கிய கோபம் பழி வாங்க வழி தேடும் — புல்வெர்

—பாண்டியராசன்

---

யுங்கள். ஆனால் நான் என் வழி மாறமாட்டேன். ஏனெனில் அது என் கையிலுள்ள விஷயமில்லை'' என்றாள்.

''குலடா தகி'' என்று அவளை வைதுவிட்டு ராஜமாதாவும் உதயாவும் வெளியேறினர்.

எதிரிகள் தரப்பினர் போர்த் தருமம் மீறிவிட்டால் அப்போது மேவார் படைகள் நச்சு தீற்றிய அம்புகளை அவர்கள் மீது எய்வதுண்டு. இதற்காக வைத்திருந்த காலசர்ப்ப விஷத்தை ஒரு கோப்பையில் நிரப்பினான் ராணா. அதை மீராவிடம் கொண்டு கொடுக்குமாறு பணியாளருக்கு ஆக்ஞையிட்டான். ஒருவரும் அதற்குப் பணியவில்லை. ''வேண்டாம், பெண் பாவம்'' என்று ராஜமாதாவும், ராஜபேடியும் கூட மன்றாடினர்.

ரத்தினாவை அழைத்தான் ராணா. ''நான் சொன்னது எதையும் செய்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டவள் நீ! இந்தா, இந்த விஷக் கோப்பையை மீராவிடம் கொடுத்து இது துர்காதேவியின் பிரசாதம் என்று சொல்'' என்றான்.

''ராவல்ஜி. உங்கள் ஆக்ஞையில் ஒரு பாதியைத்தான் நான் கேட்பேன். அதாவது நச்சுக் கிண்ணத்தை ராணி சாஹேபாவிடம் தருவேன். ஆனால் அது துர்கா பிரசாதம் என்று சொல்ல மாட்டேன். கொலைக் குற்றத்தோடு பொய் சொல்லும் குற்றமும் சேர வேண்டாம். நீங்கள் அனுப்பிய விஷம் என்று சொன்னாலே தேவி அதை அருந்திவிடுவார். ராணி அன்பு யாகம் செய்பவர் மட்டுமல்ல; அவரே அதில் பலியும் ஆவார்'' என்று கூறிய ரத்தினா விஷக் கிண்ணத்துடன் மீராவிடம் பறந்தாள்.

''நானாக உயிரை மாய்த்துக் கொள்ள மாட்டேன் என்பதால் ராவல்ஜிதான் எவ்வளவு கருணையுடன் என் விடுதலைக்கு மீண்டும் மீண்டும் முயல்கிறார்? விஷத்தை ஆனந்தமாகக் குடிப்பேன். ஆனால் என் ப்ரபுவுக்கு நிவேதியாமல் நான் ஒன்றைப் பருகுவது இதுவே முதல் முறை என்பதுதான் என் குறை'' என்று கூறியபடி மீரா புத்தம் புதிய புஷ்பம்போல் மலர்ச்சியுடன் பேலாவை வாங்கிக்கொண்டாள். கிண்ணத்தின் விளிம்பு கிரிதரன் அதரத்தைத் திறந்து குவித்திருப்பது போலவே அவளுக்குத் தோன்றியது. அதிலிருந்த நஞ்சு கண்ணனின் திருவாயமுதமாகவே தோன்றியது. அவனது அதரம் பட்டுத்தான் அமுதுக்கு அவ்வளவு சுவை வந்திருக்க வேண்டும். அவனது அதரத்துக்கு எப்படி அவ்வளவு சுவை வந்தது தெரியுமா? துன்புற்றவரின் கண்ணீரை அவன் முத்தமிட்டுத் துடைப்பான். துன்பத்தின் இனிமைதான் அவன் அதரத்தில் ஊறிவிட்டது.

உலகத் துயரையெல்லாம் அநுபவிக்க ஆசைகொண்டு மீராவாக வந்த ராதா தேவி விஷத்தை ஆர்வமுறப் பருகினாள்.

அவ்வளவுதான்! இவள் நிவேதிக்காவிடினும் அவனே விஷத்தை முற்றிலும் தனக்கென எடுத்துக் கொண்டு விட்டான். அதிசயம் நிகழ்ந்தது! மீரா தொழும் கிரிதர விக்கிரகம் விஷச் சாயையில் அப்படியே நீல நிறமாயிற்று. அதே சமயத்தில் இந்த உற்பாதம் தாங்காமல் துவாரகாபுரியில் ரணசோட்நாதனாக உறையும் கண்ணனின் சந்நிதானக் கதவும் தானே மூடிக் கொண்டது—ராணாவின் உள்ளக் கதவம் மூடியதன் பிரதிபலிப்பாக.

மீரா சிரித்தாள். கண்ணனைப் பார்த்தே சிரித்தாள். கேலிச் சிரிப்புச் சிரித்தாள். ''உனக்கு வெட்கமாயில்லை? பண்டொரு நாள் உன் பெயரைச் சொல்லி ஆலகால விஷம் முழுவதையும் உண்ட சிவபெருமான் கண்டம் மட்டுமே கறுத்தார். நீயோ ஒரு கிண்ணம் விஷத்தில் உடல் முழுதும் நீலமாகி விட்டாயே!'' என்றாள்.

உடனே விக்கிரகத்தின் நீலம் மாயமாக மறைந்தது. பக்தைக்கு அருள் செய்த திறத்தை உலகுக்குக் காட்ட ஐயனது கழுத்தில் மட்டுமே நீல ரேகை நின்றது.

கல்யாணப் பரிசமாகக் கண்ணன் அளித்த காற்சிலம்பைக் கட்டிக்கொண்டு மீரா ஆடினாள்:

சலங்கை கட்டி மீரா
குலுங்க ஆடினாள்
நாரணர் எனக்கு; நானவர் தமக்கு
மீரா அடிமை ஆனாளே
திருமண் அளித்தார் கருநாகனிடம்
பருகிய மீரா முறுவலித்தேன்
உளறலென்(று) என்மொழியை உலகு சிரித்தது
குலபாதகி என்றார் மாமி
மீராவின் ப்ரபு கிரிதர நாகரன்
சரண கமலம் சரண் கொண்டேன்

ஆட்டமும் பாட்டமும் ஓய்ந்தபின் ரத்தினாவைப் பார்த்தாள்.

ரத்தினா விம்மிக் கொண்டிருந்தாள். ''இந்தப் பாழும் உலகை விட்டு உங்கள் உத்தம உயிர் இன்னும் போகவில்லையே, ராவல்ஜி இன்னும் எத்தனை அபசாரங்களுக்கு ஆளாவாரோ என்றுதான் அழுகிறேன்'' என்று மீராவிடம் கூறிவிட்டு மீண்டும் விம்மினாள்.

மீராவின் கண்ணிலிருந்து நீர் வழிந்தது. கிரிதரனைப் பார்த்தாள்.

''ப்ரபு, இந்த விஷத்தை அமுதாக்கினாய். ஆனால் ராணாஜியின் அமுத உள்ளத்தை விஷமாக்கி விட்டாயே! இது தருமமா?'' என்று கேட்டாள்.

'ஸர்வதர்மான் பரித்யஜ்ய' குரு அதற்கு விடை சொல்வானா, என்ன? (தொடரும்)

Benson/TI/CHO-410 TAM

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

3
சைஸ்களில்
கிடைக்
கிறது



ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.



# எதற்காக இப்படிப் படிக்கிறான்?

ர. வேங்கடரத்தினம்

ஜிலுங் ஜிலுங் ஜிலுங்'கென்ற சதங்கை ஓசையுடன் தலையை இப்படியும் அப்படியுமாக ஆட்டி ஆட்டிக் கொண்டு, வண்டியை இழுத்துச் செல்லும் மாடு, சரக்கென்று வண்டிக்காரனின் கைக் கயிறு ஒரு முறை இறுகித் தளர்ந்ததும் புரிந்து கொண்டு நிற்கிறது. வண்டிக்காரன் முன்புறம் குதித்துக் கீழே இறங்கிப் பின்னால் வந்து சாமான்களை எடுத்து இறக்கக் கைகொடுக்கிறான். மெயில், தெற்கே செல்வது, பிரயாணிகளை இறக்கிவிட்டு விட்டுப் புறப்பட்டுப் போய் ஒரு நாழிகை ஆகப் போகிறது. ஆனால், இப்போதுதான் மாட்டு வண்டி அக்கிரகாரத்தினுள் வந்து சேருகிறது.

வண்டிக்காரன் காசை வாங்கிக் கொண்டு நகர்கிறான். வந்தவர் திண்ணையிலேயே நிற்கிறார்; நின்று என்னவோ பார்க்கிறார்.

''உள்ளே வாருமேன். அப்படியே நின்னுட்டீரே ?'' உள்ளேயிருந்து வரும் பெண்மணி கேட்கிறாள்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்? உள்ளே வரப்படாதோ?'' அவள்தான் கேட்கிறாள். நீர், வருகிறீர், போகிறீர் என்பது அவர்கள் பாஷை.

''ஒன்னுமில்லே. யாராத்துப் பையன் அது? அப்படிப் படிச்சிண்டிருக்கான் ?''

''ஓகோ, அதைத்தான் பார்க்கிறீரா ? வாரும், உள்ளே. எல்லாம் சொல்கிறேன்.''

பெட்டியையும் பையையும் கையில் ஏந்திக் கொண்டு உள்ளே செல்கிறார். கதவு நிலையில் தலை மேலே பொறித்துள்ள பெருமாள் பாதம், சங்கம் — சக்கரம் — இவற்றுக்குக் கைகள் சற்றே குவிகின்றன.

''நீர் கல்கத்தாவிலேயிருந்து ஒரு வருஷம் கழிச்சு வந்து பார்க்கிறீர். உமக்கு ஆச்சரியமாயிருக்கு. நாங்களெல்லாம் தினமும் பார்த்துப் பார்த்துக் கண் மரத்துபோறோம்!''

''ஆச்சரியமாயிருக்கே. நம்மூரிலே ஒரு பிள்ளையாண்டான் இப்படிப் படிக்கிறான்னு ! இத்தனைக்கும் இது ஜூன் மாசந்தானே ? எனக்கே சந்தேகமாப் போச்சு, இது மார்ச்—ஏப்ரல் மாசமோன்னுட்டு.''

''சொல்லுவீர், சொல்ல மாட்டீரோ!''

''செப்டம்பர் பரீட்சைக்குப் போகிறானோ ஒரு சமயம்?''

''ராம ராமா! ஏதாவது உளறுநீர் உம்ம வாயாலே. அவன் ஏன் செப்டம்பருக்குப் போகணும்?''

''பின்னே, இப்பவே புடிச்சுப் படிக்கறான்னு சொல்லு.''

''ஆமாம், நீர் வந்தீரே வண்டிலே. வண்டிச் சத்தத்தைக் கேட்டுட்டுத் தலையைக் கொஞ்சம் தூக்கியிருப்பானா அவன்? கவனிச்சீரோ ?''

'' அதுதான் எனக்கும் அதிசயமாய் இருக்கு. அன்னண்டை, இன்னண்டை கவனிக்காமெ அப்பிடியே புஸ்தகமும் கையுமாய் இருக்கானே !''

''நீர் இப்ப வரப்போன்னுப் பார்த்துட்டுச் சொல்றீர்? அவன் உம்ம மெயில் வரப்போவே திண்ணையிலே வந்து உக்காந்தாச்சு!''

''யாராத்துப் பயல்? கேட்டேனே, சொல்லலியே இன்னும்?''

''நீரே யோசிச்சுட்டுச் சொல்லுமே!''

அவர் தலை சொறிபடுகிறதுதான் மிச்சம்.

''நானே சொல்லிடறேன். நம்ம கோவில் பூவராகன் இருக்கானோல்லியோ?''

''ஆமாம். பூவராகனைத் தெரியாமயா இருக்கும்? மேலே சொல்லு.''

''சாட்சாத் அவன் பிள்ளை சம்பத்துதான்!''

''நெஜமாவா?''

''போய் வேணாக் கேட்டுட்டு வாரும்.''

''அதுக்காகச் சொல்லலேடி. பூவராகன் பிள்ளையா அது?''

''சம்பத்தேதான்!''

''எப்பப் பாத்தாலும், கிட்டுப் புள்ளு விளையாடிண்டிருப்பானே?''

''அதெல்லாம் பழங்கதை!''

''அப்படீன்னு ?''

''இப்பல்லாம், புஸ்தகமும் கையுமாய்த்தான் அவனைப் பார்க்கலாம்.''

''தேவலையே. நம்மூர் முன்னுக்கு வந்துடும் போல் இருக்கே!''

கைகால் கழுவக் கிணற்றடிக்குப் போனவர், மேல் துண்டினால் முகத்தைத் துடைத்துக் கொண்டு புறக்கடையிலிருந்து வருகிறார்.

''ஆமாம், எனக்கொரு சந்தேகம்.''

''கேளுமேன்...இந்தாரும், டம்ளரிலே காப்பி வச்சிருக்கேன்.''

எதிரே வெள்ளிப் பாத்திரங்களில் காப்பி வந்து நிற்கிறது.

''ஆமாம், படிச்சுட்டு என்ன பண்ணப் போறானும் ?''

''அவனையே போய்க் கேளுமேன்.''

''ஏதாவது இஞ்சினியர், டாக்டரா வரணும்னுட்டு வச்சிருக்கானோ ?''

''இருக்கும். ஏன் படாது?''

''படாதுன்னு சொல்லலே. இவ்வளவு உசிரை விட்டு இப்பவே புடிச்சு நன்னு படிக்கிறானேங்கறயே.''

"அதென்னவோ 'அதிசயமா'த்தான் இருக்கு. என்னவோ சொல்வாளே, அந்த மாதிரி, எந்தப் புத்துலே எந்தப் பாம்பு இருக்கோ? பெருமாள் எப்படி வச்சிருக்காரோ ?"

"அடி சக்கை! பூவராகன் பிள்ளே டாக்டர் சம்பத்தாவோ அல்லது ஜிம்முனு இஞ்சினீயர் சம்பத்தாவோ வந்துடுவான்கிறே. பலே!"

"பின்னே, எதுக்காக இப்படிப் படிக்கிறான் சொல்லும் ?"

"**வா**சு மாமா!" கூப்பிட்டவண்ணம் நுழைகிறவன் சம்பத்துதான். நெற்றியில் கண்ணைப் பறிக்கும் ஸ்ரீ சூர்ணம் — திருமண் சாத்தியிருக்கிறது. தலையில் குடுமி எண்ணெயின் பளபளப்பில் மின்னுகிறது. எஸ் கட்டு எனும் பழைய வகையில் எடுத்துக் கட்டியிருக்கும் குடுமி, கட்டம் கட்டமாகக் கரும்புத் துண்டம் போல் காட்சியளிக்கிறது. காதுகளில் சிவப்புக் கடுக்கன்.

"உங்களைத்தான் மாமா."

"என்னடா வேணும், சம்பத்து?"

"ஒண்ணுமில்லே. உங்ககிட்டம் சேம்பர்ஸ் அல்லது ஆக்ஸ்போர்ட் டிக்ஷனரி இருக்கா?"

"......... ................. .......... !"

"பார்த்துட்டுத் தந்துடறேன், மாமா?"

"போடா, பைத்தாரா! அதுக்காக இல்லேடா, சம்பத்து. நீ திருப்பித் தராமயா இருந்துடப் போறே?" — ரிக்கிறார் வாசு.

விழிக்கிறான் சம்பத்து.

"ஆமாம், நீ எத்தனாவது படிக்கிறே ? எனக்கு அதே சந்தேகமாப் போச்சு."

"போங்கோ மாமா, உங்களுக்குத் தெரியாதா ?"

"இல்லே, லிடரேச்சர் ஆனர்ஸ் ஏதாவது படிக்கிறயா, ஒருத்தருக்கும் தெரியாமெ?"

"போங்கோ மாமா!" அவனுக்கு வெட்கம் தாங்கவில்லே.

"நெஜமாத்தான் சொல்றேன். இப்பத்



தான் போஸ்டல் ட்யூஷன் நிறையக் கிளம்பி யிருக்கே. நீபாட்டிலே, வெளியிலே எஸ். எஸ். எல். ஸி. படிக்கிறதாச் சொல்லிண்டு, பிரைவேட்டா ஏதாவது யுனிவர்சிடி பரீட்சைக்குப் பணம் கட்டி எம். ஏ. — பிஎச்.டி. படிச்சிண்டிருக்கியோ?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே, மாமா!''

''எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சைக்குத்தானேடா போப் போறே, சம்பத்து?'' — அதை உறுதிப் படுத்திக் கொள்கிறவர்போல் கேட்கிறார்.

''ஆமாம், மாமா!''

''பின்னே, என்ன பெரிய டிக்ஷனரியெல்லாம் கேட்க ஆரம்பிச்சுட்டே?''

''இல்லே, ஒரு வார்த்தைக்கு அர்த்தம் தெரியலே. அதுதான் பார்க்கலாமேன்னு'' என்று இழுக்கிறான்.

''என்ன வார்த்தை அது?''

சம்பத்து சொல்கிறான். இன்ன வார்த்தை யென்று. அவர் இன்னொரு முறை கேட்கிறார் — ''என்ன வார்த்தை ?''

மீண்டும் சொல்கிறான் அவன் அவ் வார்த்தையை.

''ஸ்பெல்லிங் என்ன?''

எழுத்துக்கூட்டிச் சொல்கிறான்.

அவர் விழிக்கிறார்.

''எங்கே வந்திருக்கு அந்த வார்த்தை ?''

''இன்னிக்கு 'ஹிந்து'ப் பத்திரிகையிலே வந்திருக்கு, மாமா, மூணும் பக்கத்திலே.''

மாமாக்காரர் வியப்பில் ஆழ்கிறார்.

'' அர்த்தம் தெரிஞ்சுண்டு என்னடா பண்ணப் போறே, சம்பத்து?''

என்னவோ கேள்வி இது.

சம்பத்து கையைப் பிசைகிறான். உள்ளே யிருந்து, பெண் குரல் வருகிறது—''குழந்தை, அவன் கேட்கிறான். டிக்ஷனரியை எடுத்துக் கொடுங்களேன். அத்தெ விட்டுட்டு, ஊர்க் கேள்வி யெல்லாம் கேட்டுண்டு !''

''அதுக்கு இல்லேடி. நாமும் அந்த வார்த்தையைச் சித்தெ தெரிஞ்சுக்கலாமேன்னு!''

குரலுக்கு உரியவள் வருகிறாள்—''அப்படிச் சொல்லுங்கோ. பார்த்தியாடா, சம்பத்து. உங்க மாமாவுக்கும் தெரியலே நீ சொன்ன வார்த்தை. மகா பி.ஏ. அவர் இத்தனைக்கும்!''

சம்பத்து அடக்கத்தோடு நிற்கிறான்.

உள்ளே சென்று அகராதியை எடுத்து வருகிறார் வாசு.

''மாமி சொல்றது கிடக்கட்டும். நான் நெஜமாத்தான் கேட்கிறேன். நீ எதுக்காகக் கேட்கறே அதுக்கு அர்த்தம்?''

''இல்லே, மாமா. நான் அந்த வார்த்தைக்கு அர்த்தம் என்னவாயிருக்கும்னு ஊகிச்சு வச்சிருக்கேன். அது மட்டும் சரியா யிருந்தாப் போதும். அதை, பாடத்துலே, ஒரு இடத்துலே உபயோகப்படுத்தலாம். அந்த இடத்துக்குப் பொருத்தமா யிருக்கும்!''

மாமா அயர்ந்து போகிறார், பையனின் பேச்சைக் கேட்டு.

''சரி, சொல்லு, நீ நினைக்கிற அர்த்தத்தெ. டிக்ஷனரிலே பார்க்கலாம் சரியான்னுட்டு.''

சம்பத்து சொல்கிறான் தயக்கத்தோடு தன் ஊகத்தை. அகராதியை அவர் புரட்டுகிறார். அதே பொருளைத்தான் அதுவும் சொல்கிறது.

''பலேடா, சம்பத்து! நீ சொன்னது சரிடா.''

''அவ்வளவுதான் மாமா. எனக்கு வேண்டியது.'' சம்பத்து நகர்கிறான்.

''சம்பத்து கிட்டேதான் இருக்கட்டுமே அந்த டிக்ஷனரி. குழந்தை பரீட்சைக்குப் படிக்கிறான். அவன் வச்சிண்டு கொடுக் கட்டுமே.''

''மாமி உத்தரவு போட்டாச்சு. இந்தாடா, சம்பத்து. பரீட்சை மட்டும் வச்சிக்கோ.''

சம்பத்துக்கு ஒரே மகிழ்ச்சி. ''ரொம்ப நன்றி, மாமா.''

''நன்றி மாமின்னு சொல்லுடா.''

''மாமிக்கும் மிக்க நன்றி!''

சம்பத்து புத்தகத்தோடு நடையைக் கட்டுகிறான். மனைவியிடம் சொல்கிறார் — ''எனக்கென்னவோ இந்தப் பிள்ளை ரொம்ப அதிசயமான பிறவியா யிருக்கு!''

''உங்களுக்கே தெரியாத வார்த்தையெல்லாம் இவனுக்குத் தெரியறது பாருங்களேன்.''

''இந்த ரேட்லே போனான்னா, நிச்சயம் இவன் மத்த எல்லாப் பசங்களையும் சாப்பிட்டுடுவான்னு நினைக்கிறேன்.''

''ஏதோ உங்க வாய் முகூர்த்தம் பலிக் கட்டும். ஏழைக் குழந்தை. நன்னு வரட்டும், ஊருக்கே மொதலா.''

''ஊருக்கே மொதலாவாவது? மாகாணத் துக்கே முதலாக வருவான்னு சொல்லு.''

''பாட்டீ!''-கூப்பிட்டது சம்பத்துதான். பாட்டி திரும்பிப் பார்க்கவில்லை.

''கோதைப் பாட்டீ!'' அழைத்தவன் ஊம் ஓடி வருகிறான். பாட்டி நிற்கிறாள். ''யாரு? சம்பத்தா?''

''நான்தான் பாட்டி.''

பாட்டியின் இடது கை ஒரு துணி மூட்டையை அடக்கிக் கொண்டிருக்கிறது. வலது கரத்தில் 'குண்டாத்ரம்'.

''ஒண்ணுமில்லே. நடங்கோ, நானும் கூடவே வரேன். தேர்த்தாமாடத்தானே போறேள் ?''

''சொல்லேன், என்ன வேணும்னு ? நீ மெனக்கெட்டு எதுக்குக் கூடவே வரணும் ?''

''பரவாயில்லே பாட்டி.''

''சரி, சொல்லு விஷயத்தை.'' வெள்ளைப் புடவையைக் காது மடலுக்குப்பின் செருகிக் கொண்டே கேட்கிறாள் பாட்டி.

''நீங்க காலம்பற எத்தனை மணிக்கு எழுந் துக்கறேள் ?''

''என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்லே. நான் மெயின் சத்தம் கேட்டுத்தான் முழிச்சிக்கறேன். உங்களோடேயே எழுந்திண்டுடலாம்னு பார்க்க றேன். தினமும் நீங்க எழுந்திண்டவுடனே, எனக்கொரு குரல் கொடுத்தேள்னா, நானும் எழுந்திண்டுடுவேன்.''

''திவ்வியமாச் செய்யறேன். இதுக்கென்ன காசா, பணமா?''

''சரி, பாட்டி! இதுக்காகத்தான் கூப்பிட் டேன்.''

பாட்டி அவனை ஆசையோடு பார்க்கிறாள்.

"ஏண்டா, குழந்தே, உன் உடம்புக்கு ஆகுமாடா ? இப்படியெல்லாம் ராப் பகலாக் கண் முழிச்சு உடம்பைக் கெடுத்துக்கலாமா?"

"பரீட்சைக்கு வாசிச்சு யாருக்காவது உடம்புக்கு வருமா, பாட்டி? நீங்களே சொல்லுங்கோ."

"அதுக்கில்லேடா, சம்பத்து. நீயோ வருஷம் பூரா, ஒழுங்கா ஆரம்பத்துலேந்தே வாசிக்கிறவன். இந்தக் காலத்துப் பசங்க மாதிரிக் கடைசிக் காலத்துலே புஸ்தகத்தைப் பிரிச்சுப் பார்க்கிறவன் இல்லே......"

"அதனாலே ?"

"நீ வருஷம் முழுக்கவே ஒழுங்காப் படிச்சிண்டு வந்திருக்கியே?"

"அப்புறம், ஆமையும் முயலும் கதை மாதிரி ஆயிடும் பாட்டி. என்னதான் படிச்சிருந்தாலும், கடைசிலே போய்க் கோட்டை விட்டுடப்படாது, பாருங்கோ."

"ஆனாப் படி, உன் இஷ்டம்."

"எல்லாம் உங்க ஆசீர்வாதம்தான்!"

பாட்டி அவன் காதருகே குசுகுசுவென்று பேசுகிறாள் — "ஆனா, ஒண்ணு மட்டும் கண்டிஷன், சம்பத்து."

"என்ன பாட்டி ?"

"நீ படிச்சுப் பட்டம் வாங்கி நாளைக்கி, ஒரு இஞ்சினீயரா வந்தா, அப்ப என்னை மறந்துட மாட்டியே?"

"போங்கோ, பாட்டி!"

"என்ன, போங்கோ? அப்படீன்னா, என்னை மறந்துடுவேன்னு சொல்லு."

"நான் இஞ்சினீயரா வந்தான்னா, உங்களை மறக்கற பிரச்னையே வரப் போறது? நான் தான் இஞ்சினீயரா வரப் போறதில்லையே?"

"அப்படீன்னா டாக்டரா வரப்போறயா?"

"இல்லே பாட்டி."

"என்னடா, பைத்தாரா, எதுக்கெடுத்தாலும் இல்லேன்னா, என்னதான் பண்ணப் போறே ?"

சம்பத்தின் கண்கள் எங்கோ தூரத்தே நோக்குகின்றன. பாட்டி அவனை விடுவதாக இல்லை.

"வக்கீலா வரப் போறயா? அல்லது, ஜட்ஜாவே, வந்துடறயோ, என்னவோ ? நம்ம பூவராகப் பெருமாள் உன்னை நம்ம ஜில்லாக்கே கலெக்டராப் பண்ணிடுவாரோ, என்னவோ ?"

சம்பத்து நாக் குழறுகிறான். "அதெல்லாம் இல்லே, பாட்டி!"

"என்கிட்டே சொல்லப்படாதாக்கும். சரி, உன் இஷ்டம் ! நீ படிக்கிற படிப்புக்கு நிச்சயம் மாகாணத்திலேயே முதலா வரப் போறேன்னுட்டு, அன்னிக்கு வாசு சொன்னான் விளையாட்டுப் போல. அடுத்தாப்பலே, போஸ்ட்மாஸ்டர் நேத்திக்குச் சொன்னார். நீ எதுக்காக இப்படிப் படிக்கிறேன்னு, என்கிட்டே சொல்ல மாட்டே? சரி, வேண்டாம்." — பாட்டி பொய்க் கோபத்தோடு பேசுகிறாள்.

சம்பத்தின் மனம் சங்கடப்படுகிறது.

"அதெல்லாம் ஒண்ணுமே இல்லே பாட்டி! முதல்லே நல்லபடியா மார்க் வாங்கிப் பாஸ் ஆகட்டும். அதுக்கப்புறம் சொல்றேன் பாட்டி."

பாட்டியின் முகம் மலர்கிறது.

"அது சரியான பேச்சு!" துணி மூட்டையும் ஜலபாத்ரமும் செல்கின்றன.

"டேய், சம்பத்து!"

"என்ன மாமா?" — கூப்பிட்ட குரல் வந்த திண்ணைக்குச் செல்கிறான். சீட்டாட்டம் நடந்து கொண்டிருக்கிறது.

"எங்கேடா சட்டையெல்லாம் போட்டுண்டு, அமர்க்களமா கிளம்பினே?"

"ஒண்ணுமில்லே, மாமா. டவுனுக்குப் போறேன்."

"என்னடா விசேஷம்? காலேஜ் அட்மிஷனா ?"

"போங்கோ, மாமா."

"டவுன்லே என்னடா பின்னே?"

"ஸ்கூலுக்குப் போய், எஸ். எஸ். எல். சி. புத்தகம் வாங்கிண்டு வரணும், மாமா."

"அதுக்குள்ளே வந்திருக்குமாடா அந்தப் புத்தகமெல்லாம் ?"

"வந்திருக்கணும், மாமா!"

"கோதண்டு ஒண்ணுமே சொல்லலியே?" பேசுபவரின் வீட்டுப் பிள்ளை கோதண்டு.

"அவன் ஏன் சொல்றான்? நமக்கு ஏறின படிப்புதான் உம்ம கோதண்டத்துக்கும் ஏறாது. இவன் படிக்கிற பயல்!" — சீட்டாட்டத்தில் எதிரியாக இருப்பவர் ஒருவரது பேச்சு இது. "அது சரி!" — பெற்றவர் ஒப்புக் கொள்கிறார். பிள்ளையின் சரக்குத் தெரியாதா அவருக்கு?

சம்பத்து நிற்கிறான். "எதுக்கு மாமா கூப்பிட்டேள்?"

---

## சாமர்த்தியம் !

இரண்டாவது உலக யுத்தத்தின்போது குடியானவர்களின் வீடுகளைச் சோதனையிட்டு வந்த ஜெர்மன் துப்பறியும் போலீஸ் அதிகாரி ஒருவர், ஒரு குடியானவனிடம் "உன் வாத்துக்கு என்ன உணவு கொடுக்கிறாய்?" என்று கேட்டார்.

"அரிசி" என்றான் அவன்.

"அப்படியா? அரிசி மக்கள் தின்னும் உணவு. உன்னைக் கைது செய்கிறேன்" என்று அவனைக் கைது செய்தார்.

அடுத்த குடியானவனிடமும் இதே கேள்வியைக் கேட்டபோது அவன், "சோளம் போடுகிறேன்!" என்றான். "அதுவும் மனிதன் தின்னும் உணவுதான். உன்னையும் கைது செய்கிறேன்" என்றார்.



மூன்றாவது குடியானவனிடம் கேட்டபோது, "நான் என் வாத்துக்கு ரூபாயாகவே தந்துவிடுவேன் - அது எது வேண்டுமோ அதை வாங்கித் தின்றுவிடும்!" என்றான். அவன் தப்பித்துக் கொண்டு விட்டான்.

—ப. கந்தசாமி

''ஆமாண்டா, நான்தான் கூப்பிட்டேன். மறந்து போச்சு.''

சீட்டாட்டத்துப் பேர்வழி இன்னொருவர் உதவிக்கு வருகிறார் — ''உம்ம அப்பாவின் சிராத்தம் வரதுன்னு சொல்லிண்டிருந்தீரே.''

''ஆமாண்டா, சம்பத்து. வர புதன் கிழமை பூவராகனுக்கு ஆத்துலே கொஞ்சம் ஜோலி இருக்கும். வரச் சொல்லிடு.''

''என்ன ஜோலி, மாமா?''

'மாமா'வுக்கு இக்கேள்வி அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

''என்ன ஜோலியாவது? எத்தனையோ வேலே இருக்கும் சிராத்தம்னு. கிணத்துலே தண்ணி இழுத்துக் கங்காளம் நிறைய ரொப்பி யாகணும். விடிகாத்தாலே வரச் சொல்லிடு.''

''நானே வரேன், மாமா!'' சம்பத்து பேசுகிறான். ''தேர்த்தாமாடிட்டு, மடியா நானே வந்துடறேன், மாமா.'' சம்பத்து சொல்கிறான். அவனைப் பற்றித் திண்ணையில் ஒரு சம்பாஷணை.

''பயலெப் பார்த்தியோல்லியோ?''

''ஆமாமாம், அப்பாவெ ஒண்ணு சொல்லிட்டாலும், இவனுக்குப் பொத்துண்டு வரும்.''

''ஆமாம், கண்ணுலே வச்சுத்தான் இவன் காப்பாத்தப் போறான் பூவராகனே.''

''அன்னிக்கு இப்படித்தான் ஆராவமுது ஆத்துலே ததியாராதனே. எடுபிடி வேலேக்குப் பூவராகனே வரச் சொல்லி எழுதியிருந்தது. இவன் யார்கிட்டேயோ சொல்றான்: 'பெருமாளுக்குத் தேர்த்தக் குடம் தூக்கிக்கூட அப்பாவுக்கு உடம்பு ஒண்ணும் ஆவிடல்லே. இந்த மாதிரி ஊர்க்காராளுக்கு வீட்டுக்கு வீடு தேர்த்தம் இறைச்சுத் தூக்கித் தூக்கியே அப்பா தோள் காச்சுப் போச்சு.' எப்படி இருக்கு, பய பேச்சு!''

சம்பத்தின் காதில்கூட இந்தப் பேச்சு விழுகிறது. அவன் கண்களைத் துடைத்துக் கொள்கிறான்.

''அசடு, கண்ணெத் துடைச்சிக்கோடா!''

யாரோ என்று பார்க்கிறான். போஸ்ட் மாஸ்டர் அகத்து மாமி: ''அவா பேச்செல்லாம் எனக்கும் காதுலே விழுந்துது. கிடக்கட்டும். நீ போய், துயிச்சிண்டு வா. இந்தா, வாங்கிப்பியோல்லியோ? வீரவைஷ்ணவனுநீ?''

''போங்கோ மாமி. எனக்கு இது எல்லாம் ஒண்ணுதான்.'' அந்த அம்மாளின் கரத்திலிருந்து எடுத்து நெற்றியில் ஸ்ரீசூர்ணத்தின் மேல் இட்டுக் கொள்கிறான்.

''மாரியம்மன் கோவில் விபூதி-குங்குமம். ரன்னர் சங்கரன் போயிருந்தான் அந்தப் பக்கம். தபால் பட்டுவாடா பண்ணிட்டு வரச்சே கொண்டு வந்தான். உனக்கோசரம் எடுத்து வச்சேன். நல்ல மார்க்கு வாங்கிண்டு ராஜா மாதிரி வரணும்.''

''சம்பத்து!'' — மேலண்டைப் பிராகாரத்திலின்று அழைப்பு வருகிறது.

''என்ன மாமா வாங்கோ.''

காஞ்சிபுரம் மஞ்சள் சரிகைக் கரை போட்ட கோவில் வேஷ்டியை இடுப்பில் அணிந்துள்ள சம்பத்து அசல் அர்ச்சகர் பிள்ளையாகக் காட்சி தருகிறான். காது மடலில் திருத்துழாய்!

''எங்கேந்து பேசறே?''

''மடப்பள்ளிலேயிருந்துதான். வாங்கோ மாமா.''

உள்ளே செல்லத் தயங்கியவாறு நிற்கிறார். அவர் கண்கள் அகல விரிகின்றன.

''சம்பத்தா? என்னடா பண்றே?''

சம்பத்தேதான். அவன் மடப்பள்ளியில் மும்முரமாக இயங்கிக் கொண்டிருக்கிறான்.

''ஆமாம், மாமா''... ஒன்றும் சொல்லாமல் இருக்கிறான் அவன்.

''தளிகையா பண்ணிண்டிருக்கே?''

''ஆமாம், மாமா.''

''பூவராகனுக்கு உடம்பு சரியில்லேயா?''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லே. எப்பவும் போல இருக்கா, ஏதோ பெருமாள் புண்ணியத்துலே.''

''பின்னே நீ ஏன் எல்லாம் பண்ணிண்டு இண்டாடறே?''

''ஒண்ணும் நான் இண்டாடல்லே மாமா. பெருமாள் கைங்கர்யத்திலே இண்டாட்டம் எங்கே வந்தது? கொடுத்து வச்சிருக்க வேண்டாமோ? பண்ணறத்துக்கு?''

வந்தவரின் முகம் வியப்பில் விரிகிறது.

''என்ன வேணும் மாமா? ஒரு நிமிஷம் இருங்கோ. வெண் பொங்கலுக்கு மொளகு பொடிச்சிண்டிருக்கேன். ஆனாலும், ததியோத

ணத்துக்குத் திரும்பப் பார்த்துட்டு வந்துடறேன். உங்களுக்கு ஏதாவது வேணுமா?''

மடப்பள்ளியின் இருட்டிலும் சம்பத்தின் ஆடை கண்ணைப் பறிக்கிறது.

''ஒண்ணுமில்லே. பூவராகன் இருந்தால், திருமால் வடைக்குச் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''அப்பா ஆஞ்சநேயர் சந்நிதிலே இருப்பா. இல்லாட்டா, தாயார் சந்நிதிக்குப் போய்ப் பாருங்கோ.''

''சரி.''

''வேறே ஒண்ணும் இல்லயே, மாமா.''

''இல்லே... ராத்திரி வண்டியிலே ஊருக்குப் போறேன். அதான் பிரசாதம் வாங்கிண்டு போகலாம்னு.''

''சரி, நானே அப்பாகிட்டே சொல்லி உங்களுக்கு ரெண்டு வடை எடுத்து வச்சுடச் சொல்றேன். போறுமோல்லியோ?''

சம்பத்தின் கரங்கள் இயங்குகிற வேகத்தைக் கண்டு வியப்பில் ஆழ்கின்றன அவர் கண்கள்.

''என்ன மாமா நிக்கறேள்? இன்னும் ஏதாவது வேணுமா?''

''இன்னிக்குப் 'பெரிய அவசரம்' முடிய எத்தனை நேரமாகும்?''

''ரேவதி நட்சத்திரம் பாருங்கோ இன்னிக்கு? அதனாலே உத்சவருக்கு ரங்கநாதர் அலங்காரம் ஆகணும். அதுக்கப்புறம்தான் நைவேத்தியம் அம்சை ஆகும் பெருமாளுக்கு. தாயார், ஆண்டாள், பெரிய திருவடி, சின்னத் திருவடி எல்லாச் சந்நிதியும் முடிச்சிண்டு, பிரசாதம் வெளியே வரச்சே, மணி நாலு ஆயிடும். உங்களுக்கு ஆறிப் போனாப் பரவால்லியே. ஊருக்குத்தானே கொண்டு போகப் போறேள்?''

அவர் அசையாமல் நிற்கிறார்.

''என்ன மாமா, நின்னுட்டேள் ?''

''நீ செய்யறது, பேசறது ஒண்ணுமே எனக்குப் புரியல்லேடா, சம்பத்து.''

வடைக்குப் பருப்பு அரைப்பதில் சம்பத்து முனைகிறான். ''நான் அப்பாகிட்டே சொல்லிடறேன், மாமா.''

''ஏண்டா, நான் நின்னுண்டு பார்க்கப் படாதுங்கறயா? போயிடறேன் நான்.''

''சேச்சே, அபசாரம்! அப்படிச் சொல்லுவேளா, மாமா ?''

அவர் அங்கிருந்து எப்பொழுது போனாரோ தெரியாது. இமைநேர, 'சம்பத்து' என்ற அழைப்பு வேறு குரலில் வருகிறது. தலையைத் தூக்குகிறான். கோதைப் பாட்டி நிற்கிறாள்.

''வாங்கோ, பாட்டி.''

''என்னடா இது. அங்கே பேப்பர்லே உன் பேர் போட்டிருக்காம். ஊரே அமர்க்களப்படறது!''

''என்ன சொல்றேன், பாட்டி?''

''ஒண்ணுமே தெரியாதது மாதிரி கேட்கறியேடா? நெஜமா உனக்குத் தெரியாதா?''

''எதைச் சொல்றேள், பாட்டி ?''

''என்னடா இது? இப்படிக் கேட்கறே. நீதான் நம்ம மாகாணத்திலேயே மொதலாமே எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையிலே!''

''இருக்கலாம், பாட்டி. எல்லாம் பெருமாள் கிருபையும், உங்க ஆசீர்வாதமும் தான்'' என்றான் சம்பத்து.

''என்னடா, இவ்வளவு சர்வசாதாரணமா சொல்லி முடிச்சுட்டே? மாகாணத்திலேயே மொதலாப் பாஸ் பண்ணிட்டு, நீபாட்டிலே இங்கே கோயில் கைங்கரியத்தில் இருக்கியே?''

''....ஆமாம், பாட்டி....!'' — சம்பத்தின் குரல் கம்மியது.

''என்னடா, சம்பத்து, இப்பவும் புதிர் போடறாப்பலேயே பேசறியே ?''

''புதிர் ஒண்ணுமில்லே பாட்டி, இதுலே.''

''புதிர் இல்லையாவது! அப்படியெல்லாம் விழுந்து விழுந்து படிச்சுப் பாஸ் பண்ணிட்டு, இங்கே கோவில்லே என்னவோ பண்ணிண்டிருக்கியே? என்னடா, இதெல்லாம்?''

''ஏன், பாட்டி, இதுலே என்ன தப்பு ?''

''பின்னே எதுக்கடா, அவ்வளவு உசிரைக் கொடுத்து ராப் பகலாக் கண் முழிச்சுப் படிச்சே ?''

''இதுக்காகத்தான் 'பாட்டி.''

பாட்டியின் வாய் திறக்கவில்லை.

சம்பத்து சொல்கிறான்: ''அப்பவே கேட்டேளே, பாட்டி, நீங்க. அந்தக் கேள்விக்கு இப்ப பதில் சொல்றேன். நான் அவ்வளவு உழைச்சுப் படிச்சது அத்தனையும் இதுக்காகத்தான்.''

பாட்டியின் குரல் தழுதழுக்கிறது. ''இதுக்காகவா உன்னெ விடிகாலம் அப்படி நடுக்கற குளிரிலெல்லாம் எழுப்பினேன் நான்? ஏண்டாப்பா, என் மனசு கேட்கலியே?''

பாட்டி தலை முட்டாக்கைச் சரி செய்து கொள்கிறாள். சம்பத்தின் புஜத்துத் தசை நார்கள் ஆட்டுக் கல்லே அவன் சுழற்றிக் கொண்டு வரும் போது, புடைக்கின்றன. பாட்டியின் கண்களில் நீர் துளிக்கிறது. தலைத் துணிக்கு வெளியே, முன் நெற்றியில் சுமங்கலி நாளத்து வடு எட்டிப் பார்க்கிறது.

''பாட்டி, அப்பவே நான் பெருமாளிடத்துலே வேண்டிண்டேன். எப்படியாவது பகவான் கிருபையிலே பிரெஸிடென்ஸி பஸ்டா வந்துடணும்னு எனக்கொரு ஆசை. அந்த ஆசையை நம்ம பூவராகப் பெருமாள் நடத்திக் கொடுத்திட்டார். எனக்கு இது போறும், பாட்டி.''

பாட்டி கதறுகிறாள்: ''எனக்குப் புரியலே இல்லேயேடா, சம்பத்து.''

''ஏன், பாட்டி, இதுலே புரியறதுக்கு என்ன இருக்கு?''

''அப்படியில்லே. இந்த வேலைக்கு வர்றதுக்கு இத்தனை சிரமப்பட்டு வாசிக்கணுமா?''

''ஏன், பாட்டி, பிரெஸிடென்ஸி பஸ்டா வந்தா, இஞ்சினீயராவோ டாக்டராவோ போகணும்னு சாஸ்திரமா ? பகவானுக்கு மட்டும் படிப்பு ஏழுதவன், வேறெ எல்லாம் 'ட்ரை' பண்ணிக் கிடைக்காதவன், ஒண்ணுக்குமே லாயக்கில்லாதவன் — இவாள்ளாம் தான் வேணுமோ? காசுக்கு ஆசைப்பட்டுண்டு, பூலோகத்துக்கே சேவை செய்யப் போறதாக வெளியிலே சொல்லிண்டு, இஞ்சினீயருக்கோ, டாக்டருக்கோ நான் படிக்க ஆசைப்படல்லே. இந்தச் சின்னூண்டு பெருமாளுக்குக் கைங்கரியம் பண்ணிண்டு, எங்கப்பாவுக்கு வயசுக் காலத்திலே ஒத்தாசையா இருப்பேன். இது தப்பா?''

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10

